ஶ்ரீ

ஶ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா

குறிப்புரையுடன்

திருப்பத்தூர்

## கா. அ. சண்முக முதலியார்

இயற்றியது.



திருப்பத்தூர்

விக்டோரியா அச்சு எந்திரசாலைப் பதிப்பு.



சுக்கிலவாண்டு சித்திரைத்திங்கள்

1929

விலை ரூபாய் 1.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# பொருளடக்கம்.





ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்



## சக்கரவர்த்தி திருமகன் திருவடியிற்புனைந்த உரிமையுரை

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரோங்கு மெய்த்தவந் தெய்வந்த மாளராச்
செம்மையுறு கற்பு கலனாச்
சித்தநெகி ழன்புருவ மாயினார் பெண்களாந்
திருடற்போற் கரந்து வேறா
மேரோங்கு மங்கையர்த நலநச்சி பற்காட்டி
யேற்கிலா ராண்மை யாள
ரென்றுலகு கற்றொழுக வில்லறத் தியலுணர்த்
தெழினளா யனிதன் றெய்வப்
பாரோங்கு கதையைவெண் பாமாலை யாக்கியுன்
பாதமல ரிணைபு னைந்தேன்
பதின்மதி நினாமமாம் பசிதாக மொழியமுது
பருகிமெய்த் தவஞ்செ யென்றாய்
தாரோங்கு தோட்சனகன் றனையைமகிழ் மணவாள
தயரதன் மகனா யெங்குந்
தருமநாட் டியபரந் தாமசீ ராமநற்
றயைபுரிந் தேற்றருள் வையே.

இங்ஙனம்
அன்பார்ந்த
ஆசிரியன்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## நூன்முகம்.

மக்களுயிர்க்கு உறுதிபயப்பனவாக ஆன்றோரால் அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ள அறம் பொருளின்பம் வீடெனு நான்கனுள் தலைக் கண்ணுளதாய அறமே தலைசிறந்து விளங்குவதாம். அஃதும் இல்லறம் துறவறமென விருபாகுபாடுகளை யுடையதேனும் "அற னெனப்பட்ட நில்வாழ்க்கையே" என அறிஞரான் விதந்தோதப் பட்டிருக்கின்றமையின், இல்லறமே சிறப்புடைத்தாமென்பது வெள் ளிடைமலையாம் எனினும் அவ்வில்லறமும்

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

என்னும் தமிழ்மறையின் உரைப்படி இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகளையுடைய வில்லாளைப்பெறுவழி நல்லறமாயது அல்லல் விளைப்பதாகும். நல்லொழுக்கமுள்ள நன்மனைவியரையுடைய இல் வாழ்க்கை யாதொன்றினையும் பெறுததாயினும் எல்லாவளங்களையு முடையதாகும். இல்லாளும் இல்லாளே யாமாயின் அவ்வில் புலி கிடந்ததூறாய்விடும். ஆகவே மனையறத்திற்கு மாண்புடைய மனைவியர் உரியவராவார்.

பண்டைக்காலத்தில் பல்வகையானும் மேன்மையுற்றிருந்த நமது தெய்வமணங்கமழும் சீரியநாட்டில் நாணம் மடம் அச்சம் முதலிய பண்பிற்குறைவின்றித் தம்பதிகளையே பதியாகக்கொண்டொழுகிய மங்கைநல்லார் பலர்நிகழ்ந்தனரென்பதும், அன்னோர் தம் கற்பின் மேம்பாட்டாற் பல அருப்பெருஞ் செயல்களைச் செய்தனரென்பதும் மிகுபிரசித்தமாம். இவ்வாறுமுளதாமோவென்று அவற்றைக்குறித் துத்தற்காலத்து நவீன நாகரீகரிற்சிலர் ஐயப்பாடுறினும் அவ்வை யுறவைப்போக்கக் கற்புடைப்பெண்டிர்க்கு எக்காரியமும் கடியதன்று மென்பதைக் காட்டுவானெழுந்த பொய்யாமொழியாரின்

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

என்னும் கூற்றே கூற்றும். அன்றியும் நம்மாதர் கல்வியில்லாரென்றும் அடிமை வாழ்க்கையினையுடையாரென்றும் கூறப்படுவதெல்லாம் ஆராய்ச்சியில்லாப்போலிக்கூற்றேயாம். என்னை! சந்திரமதி, சீதை, தமயந்தி, நளாயனி, அருந்ததி, அனசூயை, வாசுகி, கண்ணகி முதலிய பத்தினிப்பெண்டிர்களின் சரிதைகளையுற்றுநோக்குவார்க்கு, அரச வையினும் அமர்க்களத்தும் அஞ்சாநெஞ்சினராய்ச் சொற்போரும்

விற்போரும் புரிந்து வெற்றிகொள்ளும் புலமைப்பெருக்கும் வீரச் செருக்கும் பெற்று விளங்கினரென்பது வெளிப்படையாகுமாதலி னென்க. ஆடவருங்கண்டு அதிசயங்கொண்டுஅஞ்சத்தக்க அற்புதங் களையாற்றியவர்கள் கல்விகேள்விகளில்லாக்கயவரோ ?

புலியின் அகட்டுதித்தது பூனையாயிற்றென்பதுபோலக் கல்வி யிலும் கற்பிலும் வீரத்திலும் தீரத்திலும் பொறையாதிகளிலும் நிகரற்ற வர்களாயிருந்த நங்காரிமணிகளின் நல்வழித்தோன்றல்களாந் தற்கால நங்கையர் இதுபோது எந்நிலைமையிலுள்ளனரென்பதை நோக்குந் தோறும் உண்மைத் தேசாபிமானிகளினுள்ளம் உலையிடு மெழுகென வுருகாதொழியுங்கொல்லோ! கல்வியாகிய மாரியில்லாப்பைங்கூழெனக் கலங்கும் நங்காரிகையர் நவீன நாகரீகமென்னும் மேற்றிசைக் காற்றி னுலும் மொத்துண்டு தடுமாற்றமெய்தித் தவிக்கலாயினர். என்னே பரிதாபம்! நாடு மிகமிக முன்னேற்றமுற்றிருக்கின்றதெனப்பெருமை யாய்ப்பேசிக்கொள்ளு மிக்காலத்தும் பெண்கல்வி மிகமிக வருகிக் காணப்படுவது நம்மனோரதறியாமையையே யறிவியாநிற்குமென் பதில் எட்டுணையும் ஐயமின்றாம். கல்வி கற்றோரெனக் கூறப்படு மாதர்களும் தம்பூர்வீகாது வழக்கவொழுக்கங்களை அங்கையாமலக மெனக்காட்டும் நூல்களை விரும்பாது ஆபாசக்கதைகளடங்கிய நவீன கங்களையே பெரிதும்விழைந்து வாசிக்கின்றவர்களாயிருக்கின்றமை யின் நம்முன்னோராகிய கற்பரசிகளின் முறைகளைப்பின்பற்றியொழு கக்கூடாதவராகின்றனர். இது பேதைமையேயன்றி வேறியாது!

பாரதத்தாயின் அகட்டுதித்த பண்டைக்காலப் பத்தினிப்பெண்டி ரின் சரிதங்களைப் பொதுவகையாற்கூறும் பாரதவிராமாயண முதலிய நூல்களேயன்றிச் சிறப்புவகையாற்கூறும் சிலப்பதிகாரம்போன்ற சில நீங்கலாக இயலிசை நாடகத்தமிழ் நூல்கள் காலவேறுபாட்டால் பல இறந்துபட்டமையின் அத்தகைய நூலொன்றை இயற்றவேண்டு மென்னும் பேரவாவே மாதுசிரோமணிகளுள் சிறந்துவிளங்கிய நளாயனியின் சரிதையாகிய இச்சிறுநூலை யியற்றுமாறு என்னை தூண்டியதாகும்.

வடமொழி வியாசபாரதத்தின் வழிநூலாகிய வில்லிபுத்தூராழ் வாரின் பாரதத்தை முதனூலாகக்கொண்டு இஃது இயற்றப்பட்ட தாயினும் முதனூலிற்காணப்படாத சிலவேறுபாடுகளும் இந் நூலின் கண்ணுளவாம். என்னை

முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும்.

எனும்விதி யிருத்தலினென்க.

உலக வழக்காறு ஒழியாது என்றும் இளமைப் பருவத்ததாய்த் துலங்குந் தண்டமிழ் மொழியில் பிறமொழிகளிலுள்ள காதைகளையும் நந்தமிழ் நான்முறையைப் பின்பற்றி உரைத்தல் இம்மொழிக்குள்ள ஆக்கத்தின் மேலாக்கமென்பதைத் தமிழுலகம் ஏற்றுக்கொள்ளு மென்னுந் துணிபால் இந்நூலை இயற்ற முன்வந்தேன்.

இதில் எவையேனும் குற்றங்குறைகள் காணப்படின் யாவரேனும் அன்புகூர்ந்து அறிவிப்பரேல் அவைகளைத் திருத்தமாக மறு பதிப்பில் அச்சிடுவதுடன் அன்னவர் பக்கல் யான் என்றும் நன்றி பாராட்டுவல்.

மிக்க கல்விமான்கள் செய்தற்குரிய கற்பிலக்கணத்தைக் கூறும் இவ்வரிய காதையை அற்பக்கல்வியும் சிற்றறிவும் உடைய யான் இயற்றத்துணிந்ததையும், இதில்பிழையுளதேல் அதனையும் பொறுத் தருளுமாறு கல்விகேள்வி ஆற்றல்வாய்ந்த நல்லறிஞர்களைப் பிரார்த் தித்துக்கொள்வதோடு நளாயனிவெண்பாவென்னும் இந்நூல் இனிது நிறைவேறத் திருவருள்சுரந்த எல்லாம்வல்ல எம்மிறைவன் இணை யடிகளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

**கா. அ. சண்முக முதலியார்,**

நூல்மளிகை, திருப்பத்தூர்.

வட ஆற்காடு ஜில்லா.

சுக்கிலவாண்டு
சித்திரைத்திங்கள்.






ரு

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

திருக்கோவலூர் ஆதீனம்
திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய
சுவாமிகள் அருளிச்செய்த வாழ்த்து.

வெண்பா.

ஞாலம் விரும்ப நளாயனி வெண்பாவைச்
சீலஞ்சார் சண்முகப்பேர்ச் செம்மனத்தான்—மேலமுறை
தப்பாமற் சாற்றிநலஞ் சார்ந்தனனே வப்பெரியோ
னிப்பாரில் வாழிய வே. (க)

வாழ்க திருப்பத்தூர் வாழ்கவரு ணாசலன்சேய்
வாழ்கநல சண்முகப்பேர் வள்ளன்மிக—வாழ்க
நலஞ்சா ரவன்செய் நளாயனி வெண்பா
நிலவுக வென்று நிலம். (உ)

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா

## சிறப்புப்பாயிரம்

ஸ்ரீ ஸேதுஸமஸ்தானம் மஹாவித்வான்

பண்டிதபூஷணம்

பிரம்மஸ்ரீ ரா. இராகவையங்கார் அவர்கள் இயற்றிய

வெண்பா.

செங்குந்தர் தீபன் றிருச்சண் முகனிறைசேர்
துங்க நளாயனியின் றொல்கதையை—யிங்கினிய
வெண்பாவுள் வைத்தான் விழுத்தண் டமிழ்ப்புலவர்
நண்பாவுள் வைக்க நயந்து. (க)

பைந்தார் நளன்கதையைப் பாடிப் புகழேந்தி
முந்தார்ந்தான் சீர்சண் முகன்றானுஞ்—செந்தார்ந்த
பைங்க ணளாயனிசீர் பாடிப் புலவருக்கு
ளிங்கண ளாயின னேத்து. (உ)

கோல்வென்றி கொண்ட குலச்சோழர் நல்லவைக்கே
நூல்வென்றி கொண்டா னுவல்கூத்தன்—வேல்வென்றிச்
செங்குந்தர் தோன்ற றிருச்சண் முகனுலக
மெங்குந் தழைத்தா னிசை. (ங)

நுண்மைமிகு தூயநல நூலிற் பொருளாட்சி
பண்ணுபவன் செங்குந்தர் பாவலவன்—புண்ணியத்தால்
வாயோடு கையு மனமு மொருபடியா
மேயோனற் சண்முகவேண் மிக்கு. (ச)

---

சென்னை

யூனிவர்ஸிடி தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ்

தலைமைப் பண்டிதர்

பிரம்மஸ்ரீ மு. இராகவையங்கார் அவர்கள் இயற்றிய

விருத்தம்.

வான ளாயசீர் மாமுனி வியாதன்முன் வகுத்துத்
தேன ளாயதார்த் திரௌபதற் கெடுத்துரை செய்த
மாந ளாயனி சரிதைபோன் மாண்பெருங் கற்பி
னான ளாவியே யுருக்குநற் கதையுண்டோ வுலகில். (க)

அன்ன காதையை யமிழ்தினு மினியவெண் பாவான்
மன்ன னன்கதை வரைபுக ழேந்தியே மதித்துப்
பின்ன வன்றரு பெருமகள் புகழையும் பெட்பி
னன்ன ரோதினன் கொல்லென நாவலர் நயப்ப. (உ)

சீரு மோசையுஞ் செய்பொரு ளுடனனி சிறப்ப
வேரு றாஉநளா யனிவெண்பா வெனவினி திசைத்தான்
வாரு நன்மது வார்பொழில் வடதிருப் பத்தூர்
தேரு நன்னகர்த் தலைமைய னிருபெருஞ் செல்வன். (ந)

செந்த மிழ்ப்பெருங் கூத்தனே டிரட்டையர் திகழ்செங்
குந்த ருள்வயி ணவத்திரு குலாவுநற் குலத்தோன்
சுந்த ரன்கலைத் தூசுநூ லும்பகர் தோன்றன்
முந்து சீரரு ளாசலன் பெற்றசண் முகனே. (ச)

---

சென்னைக் கீழ்ப்பாக்கம் காமாட்சிவிலாசம்
மதுரைத் தமிழ்ச்சங்கப்புலவர்
வண்ணக்களஞ்சியம்
ஸ்ரீலஸ்ரீ காஞ்சி, நாகலிங்க முனிவர் அவர்கள் இயற்றிய
நிலைமண்டில வாசிரியப்பா

திருவளர் தாமரை யொருபெருந் தவிசின்
மன்னிவீற் றிருக்கு மறைப்பெய ராளனும்
பாற்கட றன்னிற் பணப்பாய் மீதுறாஉ
மாற்பெய ரேய்ந்த மாதவக் கிழவனுங்
கற்பக நாட்டிற் பொற்புடன் பொலிந்துறாஉ
மிந்திரப் பெயர்கொள் சுந்தர வேந்தனும்
வேறுள வமரரு மூறுகொண் டமைதெரிந்
தைந்து முகத்தோ டிந்துபே ரொளியா
மதோமுக முங்கொண் டிகாகி தத்துட
னுலக மடங்கலும் பலபடி யாண்ட
தாரகன் சிங்கன் வீரமா சூரன்
ஆதியா மவுணப் போதமில் குழூஉக்களைக்
கழுதும் பாறுங் கலந்து கலந்துணக்
கண்டு தேவ யானையைக் கவின்பெறத்
திருப்பரங் குன்றெனும் பொருப்பிற் கணத்துடன்
மணவினை பற்பல வரிசையிற் பெற்றும்
புள்ளிமா னுட்டயர் வள்ளிமா மலையில்
வள்ளியைக் களவியல் வழங்கிடக் கலந்தும்

மணிவளங் கொழிக்குந் தணிகையிற் புக்குக்
கோயிலாக் கொண்ட குமர நாயகன்
பின்னோ னன்னோன் பெரும்படைத் தலைவன்
மலைகளிற் சிறந்த கந்தமா தனமு
நேரியு முடையான் ; பாரினிற் பரிதி
குலம்வரு வள்ளல் கோதில் குணத்தான்
பகீரதன் றவத்தான் மகீதலத் துற்ற
கங்கையொ டகத்தியன் கமண்டல வாறுன் ;
சோறுடைத் தென்று சொல்லக் கிடந்த
நாடும் வளஞ்சே ணாடு முடையான் ;
கருவூர் நந்தாக் கந்தமா தனமுந்
திருநக ராகச் சீர்பெற வாய்ந்தோன் ;
ஆத்தி தன்னோ டாத்த மென்னும்
பூத்த மாலையும் புனையுந் தோளான்
உச்சைச் சிறவ முயர்ந்த கோர
நச்சியே நாளு மெச்சிய பரியான் ;
மதம்பொழி யயிரா வதமொ டாருச்
சிரமெனுங் களிறுடைச் செம்மல் ; வான்றிரு
மறையொடு வென்றிபு மாபெரு முரசான் ;
பெரும்புலி சேவல் பெட்புறு துவசன் ;
செவ்விய சீர்த்தி சேர்செங் கோலன் ;
ஆய தசாங்க மேயமா வீர
வாகு தேவன்முன் னாகுமோன் பதின்மர்
தம்வழி வந்தசெங் குந்த மரபோன்
கருப்பத் திடையுறு விருப்பின ருறைதருந்
திருப்பத் தூர்வருஞ் செவ்விய சீலன்
அருணு சலப்பெய ரறிஞர் சிகாமணி
பெருந்து பெற்ற பெருநிதி யாளன்
சண்முகப் பெயரோன் கண்ணுறு தயாநிதி
தராதலம் போற்றுந் தனிப்பெறும் புலவ
னிரவலர் தம்மை யிந்திர னாக்குவோன்
கவிஞ ருள்ளங் களிப்பக் கொடுப்போன்
பொதுநல மோம்பிப் புண்ணியம் பழுத்த
வெல்லா நலனு மெல்லா ரும்பெற
நல்லா றெவையுஞ் சொல்லா சிரியன்
விராவிய பக்த கோடிகண் மேவ
விராம நிலய மினிதி னியற்றினோன்
வாத ராயண வேத மாமுனி
யாரிய மொழியி லாங்காங் கருளிய

மன்னவர் மன்னன் மதிகுலத் துதித்தோ
னளனெனும் பெயரோன் வளர்செங் கோலன்
றிருமக ளொருமக ளருந்ததி யனைய
பத்தினிக் காதையை யுத்தம மாக
வமிழ்தினின் மிக்க தமிழ்மணங் கமழ
நளாயனி வெண்பா வெனுநற் பெயரால்
பத்தெனு மழகும் பாக்களிற் பொலிதரத்
திட்ப நுட்பந் திண்ணிதாய் விளங்க
வணிக ளெல்லா மாங்காங் கமைய
பழமொழி பலபல பண்பொடு திகழ
காப்பிய வருணனைக் கவின வறம்பல
வாய்ப்பச் செந்தமிழ் யாப்புச் செய்தனன்
கேட்போர் படிப்போர் மாட்சிமை பெறவே.

---

சென்னைத்

தர்க்க வேதாந்த போதகாசிரியர்

## திருவாளர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

## இயற்றிய

வெண்பா

தண்டா மரையாடன் றண்ணளியை மிக்குற்றுக்
கொண்டாட நற்புலவர் கூறினுன்—பண்டா
நளாயனிவெண் பாவை நனிசண் முகன்றுன்
றளாதுநன் னுலறிவு சார்ந்து. (க)

அன்னவனிந் நூலை யடைவா யணிபொருள்சொற்
பன்னயமுந் தோன்றப் பளகின்றித்—தன்னுடைய
புத்தி விசாலம் பொலியப் பகர்ந்திட்டா
னத்தினு ரெய்த நலம். (உ)

---

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்

## திரு. மணி. திருநாவுக்கரசு முதலியாரவர்கள் இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

கற்புநெறி யின்னதெனக் காட்டியசீர் நளாயனியின் காதை தன்னைப்
பொற்புறுபைந் தமிழமிழ்த மெனப்போற்ற வெண்பாவிற் புனைதற் செய்தான்
சொற்புலவன் செங்குந்தர் குலதிலகன் றிருப்பத்தூர் துலங்க வாழ்வோ
னற்குணவேள் தமிழ்வளர்க்க வந்துதித்தோன் சண்முகமா நாமத் தோனே.

சென்னைக் கோடம்பாக்கம்

## திரு. மா. அ. கனகசபை முதலியாரவர்கள் இயற்றிய

வெண்பா

கார்வண்ணற் கன்பன் கமலைக் கரும்புதல்வ
னேர்வண்ண வேலற் கெழிற்றுணைவன்—சீர்நண்ணுந்
தாளான் திருப்பத்தூர் சண்முகன்செய் தான்சீரார்
நாளா யனிகாதை நன்கு. (க)

மானங்காக் குங்கலைக்கு மாருது நூறருவோன்
வானங்காப் பானு மதித்தற்காம்—ஞானஞ்சே:
ரற்புநா லென்றிம்ப ராருங் கொளத்தூய
கற்புநா லுந்தந்தான் காண். (உ)

மங்கையருக் கோசுருதி மாபுலவர்க் கோவிருந்தா
நங்கை தமிழ்த்தாய்க்கு நல்லணியாஞ்—செங்கை
விளங்குவே னம்பி மிளிர்சண் முகன்செய்
நளன்குமரி வெண்பாவை நாடு. (௩)

---

கச்சி நிச்சல இராமாநந்த சுவாமிகள் அன்பர்களிலொருவரான

காஞ்சீபுரம் பிள்ளையார் பாளையம்

பரமார்த்த ரத்நாகரம்

வித்வான்

## திருவாளர் மணி. திருவேங்கட முதலியாரவர்கள் இயற்றிய

வெண்பா

கன்னி நளாயனிதன் காதை புனைந்தளித்தான்
மன்னித் திருப்பத்தூர் வாழ்குந்தர்—மன்ன
னருணா சலவே ளளித்த குமரன்
கருணா கரச்சண் முகன். (க)

தந்துபுக ழேந்தினான் சண்முகன்றன் மெய்வாக்கான்
முந்துபுக ழேந்தி மொழிந்ததம—யந்திகள
வெண்பாவெண் பாவாக வெண்பா நளாயனிப்பேர்ப்
பெண்பால் பெறுகற்புப் பேறு. (உ)

நீராழிப் பூமி நிறைபரவத் தந்ததிந்நூ
லோராழித் தேரோடா தோடிவர—நோய்ப்
பெருநோ யுறவொழியப் பெய்சாபந் தீர்த்த
திருநேர் நளாயனிசீர் தேர்ந்து. (௩)

பண்பார் நளாயனிவெண் பாநானூற் றுப்பதினென்
றுண்பா லமுதமென வுண்மகிழுந்—தண்பார்
வியனெதுகை மோனை விழைபொருட்சொல் லின்பம்
பயனயங்கள் பார்த்துப் பரிந்து. (௪)

இந்நூலுக் கெந்நூ லிணையாமிந் நூல்விளங்க
முந்நோன்மைத் தேவர் முறைசெய்ய—வன்னுளில்
வந்த நளாயனியின் வாய்மைநவில் வார்க்குவரு
மெந்த நலமு மிசைந்து. (௫)

---

காஞ்சீபுரம் திருவாளர்

## ச. சிவசுவாமி தேசிகர் அவர்கள் இயற்றிய

### வெண்பா

நற்பூர வல்லிபு நாடுநய வெண்பாவாற்
கற்பூரந் நாளா யனிகாதை—பொற்பூர்
திருப்பத்தூர்ச் சண்முகப்பேர்ச் செம்மனன்கு சொற்றுன்
றிருப்பத்தூர் தேவருளிற் றேர்ந்து.

---

காஞ்சீபுரம் ஐயங்கார்குளம் வித்வான்

## திருவாளர் திரு. நாராயணசாமி முதலியாரவர்கள் இயற்றிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

காராரும் பூஞ்சோலை கவினுருந் திருப்பத்தூர் களிப்பின் மேய
சீராருஞ் செங்குந்த திலகனரு ணசலப்பேர்ச் செம்ம லீன்ற
பாராரும் பலகலைதேர்ந் தொழுகுநெறி சண்முகவேள் பண்பான் மிக்க
நாராரு நாவலர்கள் போற்றநளா யனிவெண்பா நவின்றிட் டானல். (க)

### வெண்பா

நாவலர்கள் போற்று நளாயனிவெண் பாநன்னூ
லாவலுடன் காண வளித்தனனே—பூவுலகின்
மேவுந் திருநெடுமான் மீதுமன மெய்யன்பாற்
றுவுந் தனிச்சண் முகன். (உ)

காஞ்சீபுரம் பச்சையப்பன் ஐஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர் திருவாளர்

வீ. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள் இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்பூத்த மலர்ச்சோலை புடைசூழ்ந்து வளமளிக்குந் திருப்பத் தூரிற்
பார்பூத்த செங்குந்த குலத்தருணு சலக்குரிசில் பயந்த செல்வ
னேர்பூத்த பொறையன்பு கல்விநிறை சண்முகவே ளென்னு மேலோன்
கார்பூத்த குழற்கோதை கற்பரசி நளாயனிதன் காதை தன்னை, (க)

வெண்பாவிற் புகழேந்தி யெனுமொருசொ லுபசார மேவ நாளுந்
திண்பாவ லோர்மகிழ்ந்து தலையசையப்பச் செந்தமிழாஞ் செல்வி யோங்க
நண்பாகத் தமிழுலக நயந்துகூட் டுணவளித்த நறும்பா கென்னத்
தண்பாயும் புதுமொழியா னளாயனிவெண் பாவென்னத் தந்திட் டானே. (உ)

---

காஞ்சீபுரம் ஐயங்கார்குளம் புராணிகர்

திருவாளர் அ. க. பொன்னுசாமி முதலியாரவர்கள்

இயற்றிய

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மஞ்சுலவு மணிமாட மதிற்சூழ்ந் தோங்கு
மாமகள்சேர் திருப்பத்தூர் மன்னி வாழ்வோன்
விஞ்சுபுகழ் வித்தகனற் கல்வி யாளன்
விளங்கருணு சலக்குரிசில் பயந்த செம்ம
னஞ்சுலவு மணிமிடற்ற னருள்சீர் வெற்றி
நாமவேற் குகனிளவன் மரப ளுன்ருேர்
நெஞ்சுலவு சண்முகவேள் தமிழின் மிக்கோ
னெடுப்புகழான் குணநெறியிற் றக்கா னன்னேன். (க)

கற்பரசி நளாயனிதன் சரிதத் தீம்பாற்
கட்டியென வெண்பாவாற் கனிந்த ளித்தான்
முற்பரசி புகழ்பூண்ட புலவ ரின்று
முந்துற்ருல் வெந்நிடுவ ரிவனுக் கென்றே
சற்பரச னுப்பிளந்து பிலம்புக் கான்மாற்
றலைசாய்த்தா னயனின்னுன் சத்தி யத்தில்
வெற்பரசன் மடப்பாவை யிடப்பா லுற்ற
வித்தகனு மழுவெடுத்து மன்றுற் ருனே. (உ)

இராயவேலூர், ஊர்ஹிஸ் காலேஜ் தலைமைத் தமிழாசிரியரும்,
சென்றரல் சிறைச்சாலை நல்லொழுக்க போதகருமாகிய
**திருவாளர் C. S. இராஜா பிள்ளை அவர்கள்**
**இயற்றிய**

நேரிசை யாசிரியப்பா

திருவளர் தெய்வச் செழுந்தமி ழகத்தே
மருவிய தொண்டை மண்டல மதனிற்
பல்வளம் பழுத்த பண்பினு லுயரிய
நாவலர் புகழு நன்னக ராகிய
திருப்பத் தூரெனுந் திருவமர் நகரிற்
செங்குந்தர் மரபினைச் செம்மையின் விளக்கிய
அருணு சலப்பெய ரந்த ணாளன்
நன்மக னென்றே நலமொடு திகழுஞ்
சண்முகப் பெயர்பெறு சற்குண சீலன்
ஐந்தமிழ் நூலு மமைவுறக் கற்றோன்
நந்தா வளமிகு நற்பொருள் படைத்தோன்
செந்தமிழ் மொழியைச் சீர்பெற வளர்ப்போன்
கற்பின் றிறத்தினைக் கவினுறக் காட்டு
மங்கையர்க் கரசியா மாண்புறு நளாயனி
நற்கதை யதனை நயமுறு வெண்பாப்
பாடலி னியற்றிப் பார்மிசை யென்றுந்
தன்பெயர் நிலவத் தக்கதே புரிந்தனன்
சொன்னயம் பொருணயந் தோன்றுமிந் நன்னூல்
தெவ்வரை வென்று தேவரைக் காத்து
வள்ளியை மணந்து மலையெலாம் வாழு
முருகப் பெருமான் றிருவரு ளதனு
னின்று நிலவி யென்றுஞ்
செந்நெறி யுலகிற் செவ்விதின் வாழ்கவே.

---

போளூர் வித்வான் திருவாளர்
ஆ. தா. அரங்கசாமி நாயகர் அவர்கள் இயற்றிய
**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

அருந்ததியுந் தலையசைக்குங் கற்புடைய நளாயனியி னருள்சேர் தெய்வப்
பெருங்கதையை நயம்விளங்கப் பேசினனல் வளம்பெருகுந் திருப்பத் தூரின்
மருவருணு சலனருளுஞ் செங்குந்த மரபினுக்கோர் திலக மாகிப்
பொருவருமா லடிபாவும் புண்ணியனுஞ் சண்முகப்பேர் புலவ ரேறே.

திருச்சி பிஷப் ஹீபர் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்புலவர்
திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் இயற்றிய

**வெண்பா**

வான்றருங் கற்பின் மடவா ணளாயனிசீர்
சான்ற கவிதையினைத் தண்டமிழின்—றேன்றரு
செஞ்சொல்வெண் பாவிற் றிகழுமா செய்திட்டே
விஞ்சுபுக ழேந்தினன்பூ மீது. (க)

திருப்பத்தூர் வாழ்வோன் றிறலார்செங் குந்தர்
விருப்பக் குடிவந்த வீரன்—றருப்போ
லரும்பொரு ளீவா னருணு சலமன்
றரும்புதல்வன் சண்முகவேள் தான். (உ)

---

திருநெல்வேலி
ஸ்ரீவைஷ்ணவன் பத்திராதிபர்
திருவாளர் T. R. பெரியநம்பியா பிள்ளையவர்கள் இயற்றிய

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

கண்முகமுற் றிடுதன்மிக வவசியமாய்க் கருதுதற்போற் கற்பின் சீர்மை
பெண்முகமாய் நலந்தரலி னவர்க்கமைதல் வேண்டுமெனும் பெற்றி தோன்றச்
சண்முகமால் செங்குந்தர் மரபிலரு ணுசலவேள் தவத்தின் வந்தோன்
விண்முகமாய்ப் பெயுமாரி போலநளா யனிகதையை விளம்பி னுனால். (க)

நற்பாகுங் கைப்பாகு மொப்பாகு மெனப்புகல்வார் நாவ டங்கச்
சொற்பாக மொடுபொருட்பா கமுங்கனியத் தமிழினயந் தோன்று மாறு
முற்பாகண் டனனறிவி னுற்றலெனே வம்மம்ம முன்னுர் தோறும்
பொற்பாகு மின்னூல்போற் காணுகிலே னிதன்பெருமை புகறற் பாற்றே.

---

பெங்களூர் U. T. காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
திருவாளர் த. மதார் முகையதீன் கவிராயர் அவர்கள் இயற்றிய

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

நன்மருத முதலாய முந்நிலங்கள் பன்னலங்க ணல்கா நிற்கும்
பொன்மருவு திருப்பத்தூர்ப் புரிதனிலே புருடார்த்த நெறியைப் போற்றுந்
தொன்மரபாஞ் செங்குந்தர் வகுப்பினரு ணுசலப்பேர்த் தோன்ற றேன்றல்
பன்னிறைநூ னெறிபயின்ற தமிழறிஞன் சண்முகனும் பண்போ னன்னேன்,

பாரினல வளமுறுமிப் பரதகண்டத் துதித்துலவிப் பத்தி வாய்ந்த
சீரினராம் பதிவிரதா சிரோமணிகள் பல்லவருட் சிறப்புற் றோங்கும்
பேரினளா நளாயனிதன் பெருங்கதையை வெண்பாவாற் பேசி னுனற்
சேரினிய பொருணயமுஞ் சொன்னயமுந் தொடைநயமுஞ் சிறக்க மாதோ.

பாலக்காடு இராஜாங்க விக்டோரியா கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
திருவாளர் அ. நடராஜ பிள்ளையவர்கள் இயற்றிய

கட்டளைக்கலிப்பா

திருந ளாயனி செய்தியைப் பூவினிற்
செப்பு மோர்துறை யாறகுறள் சொண்டிடு
மருமை யாம்பொரு ளாடியிற் காட்டிடு
மற்பு தன்றிருப் பத்துடை யூரினிற்
றிரும விந்தசெங் குந்தரின் கண்மணி
தீர்த்த னுமரு ணுசலச் செல்வனி
னுரும விந்திடு சண்முக வுத்தம
னூழிக் காலமிம்மண்ணிலு லாவியே. (க)

தமிழ நங்கையின் ரூழ்வுக ணீங்கிடத்
தனித்த செந்தமிழ் நூலினை மேலுமே
யமிழ தின்சுவை கொண்டிடப் பாடியே
யவனி போற்றிட வாழ்ந்திட வேண்டினன்
தமிழை யுண்டுத னிப்பெருஞ் சோதியாய்த்
தழைத்துப் பாங்கரில் வள்ளிதெய் வானையு
மமிழ்திற் சேர்ந்திடத் தோன்றிடுஞ் சண்முக
வழகை நெஞ்சில மூழ்ந்தவ மர்த்தியே. (உ)

---

சித்தூர் **A. M. G.** உயர்தர கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்
பூ. சீனிவாசலு நாயுடு அவர்கள் இயற்றிய

வெண்பா

வேத முனிவரும் விண்ணவருங் கொண்டாடு
மேதமிலார் கற்பென்னு மோரார்ந்த—மாதரார்
மங்காப் பெரும்புகழே மாதவத்தி னும்பெரிதா
மிங்கா ருரைப்பா ரெடுத்து. (க)

பொன்னனையார் கைகூப்பும் புண்ணியநற் பேறுடைய
மின்னிடைந ளாயனியின் மெய்ச்சரிதை—பொன்னேபோற்
போற்றப் புலவர் புகன்றானின் வெண்பாவா
லாற்றப் பல நூல்க ளாய்ந்து. (உ)

அவனு ரெனினே டவிழ்துளவத் தார்மா
தவனு ரடிபோற்றுந் தக்கோன்—பவநாச
மாக்கு மறத்தோ னருணு சலப்பெரியோன்
றேக்குந் தவத்துதித்த சேய். (ங)

செங்குந்த மாமரபின் செம்மை திகழ்ந்தொளிர
வெங்குந்தன் சீர்த்தி யெழப்பெற்றான்—மங்குல்
வருந்தண் டலைசூழும் வான்திருப்பத் தூர்வாழ்
தருஞ்சண் முகப்பெயரோன் றான். (ச)

---

குடியேற்றம் தர்க்கவேதாந்த போதகாசிரியரும்
ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமான
திருவாளர் கா. ஆ. செங்கல்வராய முதலியாரவர்கள்
இயற்றிய

**எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

நலந்திகழ் கற்பு முதலிய பயனை
நலனுற வுணர்த்துதற் பொருட்டே
புலந்திகழ் சொல்லின் பொருளினற் சுவைகள்
பொருந்திடு நளாயனி வெண்பா
பொலந்திகழ் திருப்பத் தூரினி லிலகும்
புகழரு ணசலப் பெரியோ
னிலந்திகழ்ந் திடவே பெற்றதோர் வள்ள
னிகரிலாச் சண்முகத் தூயோன், (க)

இயற்றினன் புவியி லெழின்மிக வுடையா
னிணையிலாச் செங்குந்தர் மரபின்
வயிற்றினி லுதித்த மணியெனக் கலையின்
வகையெலா மயக்கற வுணர்ந்தோன்
பயிற்றிடு முலகப் பைந்தொடி யாரின்
பயன்றரு கற்புமேம் படுதல்
குயிற்றிடு பொருளாய்க் கொண்டது சிறப்பாய்க்
குவலயம் போற்றிடற் பாற்றே. (உ)

---

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
**திருவாளர் கா. நமச்சிவாய முதலியாரவர்கள் இயற்றிய**

**வெண்பா.**

நங்கை நளாயனித னற்சரிதம் வெண்பாவாற்
பொங்கமுறச் செய்து புகழ்பெற்றான்—றுங்கத்
திருப்பத்தூர் வாழ்வோன் றிருமா லடிக்கே
விருப்புற்ற சண்முகனும் வேள்.

திருப்பத்தூர் முனிசிபல் ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்
இந்நூலாசிரியரின் ஆசிரியருமான
திருவாளர் ஆ. கு. முருகைய முதலியாரவர்கள்
இயற்றிய

## நேரிசை ஆசிரியப்பா

சீரா ரும்பெற நீரார் கற்புக்
கணிகல னென்னத் துணிதரு நளாயனி
வெண்பா மொழிந்தனன் பண்பா ருளங்கொளக்
கறங்குதிரை யுடுத்த வரங்க நிலமக
ளொற்றி யென்னு நற்றமிழ் வரைப்பினின்
முத்தமிழ்ப் புலவ ரொத்திசைத் துயர்ந்த
நூலென நுவன்று வாலறி வாளர்
மலியுட் களிமிகக் கலியை யாயிரத்
தொருபதி னென்றே டிருபதா மாண்டில்
வேனம் பியரென வானேங்கு புகழார்
பொங்குந் திரல்சேர் செங்குந்தர் குரிசி
லருண சலன்செயு மொருநோன் பின்பய
னமென வுதித்தோன் றேமறு குணத்தோன்
கலைமக ளலைமக ணிலையரு ளேக்குளோன்
றண்கதிர் மதியமு மொண்கதிர் ஞாயிறு
நின்றேங்கு நன்னெறி நின்றாங்கு நிற்போன்
சண்முக னென்னு மொண்பே ருடையோன்
நல்லோர் பெறுநல னெல்லாம்
பெற்று வாழ்கநனி சுற்றமொடு மினிதே.

---

இஃது

## பலவித்வான்களால் இயற்றப்பெற்றது.

### பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சீர்மேவு சாலிவா கனசகாப் தத்தாண்டு செல்லாயி ரத்திற்குமேல் [னிற்
சேர்ந்திடு மெண்ணூற்றி னைம்பத்தி ரண்டினிற் றிகழ்மேட மாதமத
பார்மேவு தேதிபத் தொன்பதிற் றிருவோண மாமெனப் பகர்நாளினிற்
பத்தினி நளாயனி சரிதைவெண் பாவினிற் பாடியிவ் வுலகுய்யவே
கார்மேவு தண்டலை சூழ்திருப் பத்தூரிற் கனமுற்ற குணசீலனுங்
கற்றவர் மனத்துளான் செம்மனத் தூய்மையான் கருதுமரு ணசலன்
பேர்மேவு சண்முகன் சீராம நிலயத்திற் பேதமில் புலவரவையிற் [சேய்
பெட்புடன் கேட்பவ ருளமகிழ்ந் தேற்கவே பெரிதாங் கேற்றினனே.

**"SENGUNTHA MITRAN"**

A monthly organ in Tamil of
The South Indian Senguntha Mahajana Sangam

*Editor:* *200, Thambu Chetty St.,*
**M. Shanmukasundra Mudaliar** M.A., L.T., **Madras.**

*To*

M. R. Ry. K. A. Shanmugha Mudaliar Avl.,
*Chairman, Municipal Council,*
*TIRUPATTUR. (N.A Dt.)*

*Dear Sir,*

I welcome your "Nalayani Venba" as a worthy addition to modern Tamil poetry : it is as refreshing as fresh showers after a long period of drought. It is characterised by that restraint and purity which are the very essence of the classic style. The Tamil muse, who is just awakening after her long slumber, has most appropriately chosen you, an inspired poet and erudite scholar, to be the harbinger of a dawn that promises a day of glorious sunshine and warmth after a chill and dark night ; and the moral purity of your own life has guided you to select a theme after your own heart for poetic treatment. I am sure your poem will mark an epoch in the history of Tamil poetry.

Thanking you,

I am yours sincerely,

M. SHUNMUKASUNDARA MUDALIAR.

---

திருப்பத்தூர் பிரம்மஸ்ரீ தீ. செங்கல்வராய அய்யரவர்கள்
அரங்கேற்ற நிறைவிழாவில் வாசித்துக் கொடுத்த
சுலோகம்.

श्री चेंकुन्तकुलोद्भवेन कविना श्रीषण्मुखार्येण या
सृष्टा द्राविडभाषिते कृतिरियं वेण्बाख्यछन्दश्श्रिता ।
रम्यालंकृति शब्द भावसरसा नाळायनीनायिका
जीयात् सा विदुषां मुदे कुलवधूचारित्यगाथा चिरम् ॥

இதன்பொருள்.

திருவளர்செல்வி நளாயனியம்மையாரைக் கதாநாயகியாக வுடையதும், அழகிய அணிகளும் சொற்களும் பொருள்களும் இனிய சுவைகளும் நிறைந்ததும், குலமகளிரது கற்பொழுக்கங்கள் பொதிந்த பாக்களால்பொலிவதும், திருவுடைய செங்குந்தமரபிற்பிறந்த சீரிய சண்முகனென்னும் ஆசிரியனால் தமிழில் செய்யப்பட்டதுமான இந்நளாயனிவெண்பா வென்னுங் காப்பியமானது பண்டிதர்களின் மகிழ்ச்சியின்பொருட்டு நீண்டநாள் சிறந்து நிலவுக.

---

சென்னை நியாயப்பெருந்தலம், நியாயவாதி
திருவாளர். ஈ. ந. தணிகாசல முதலியாரவர்கள்
இயற்றிய
வெண்பா.

மன்மகளன் பின்செவிலி மாண்கற்பின் ருய்முனிவற்
கின்மனைவி மாதர்க் கிறையாகும்—பொன்மகிழும்
பண்பார் நளாயனிவெண் பாப்புனைந்தான் சண்முகனு
மெண்பா வலன்ரு னினிது.

---

திருவருணை
ஸ்ரீலஸ்ரீ மஹான் சேஷாத்ரி சுவாமிகளின் பாதசேகரர்
ஸ்ரீலஸ்ரீ கலவராய சுவாமிகள் இயற்றிய
வெண்பா.

நாளா யனிசரிதை நல்லுலக முய்யவரு
டாளாண்மை பூண்டானஞ் சண்முகவேண்—மாளாத்
திருவருணை நாமகடன் சீரருளும் பெற்ருன்
குருவருளுங் கூடுமிவற் கு.

மஹாவித்வான் பானுகவி யவர்களின் மாணவர்
பிரசங்கரஞ்சிதத்
திருவாளர். புரிசை. முருகேச முதலியாரவர்கள்
இயற்றிய
வெண்பா.

இல்லையென வுள்ளதென வேக்குற்றோ நாம்புலவீர்
வில்லியருள் பாரதத்திம் மேற்சரித—முல்லைபதி
யன்பார் திருப்பத்தூ ராள்சண் முகன்சொற்று
னின்பார் நளாயனிசி ரீண்டு.

---

## 18-வது பக்கத்தில் ஆங்கிலபாஷையிலுள்ள அபிப்பிராயத்தின் மொழிபெயர்ப்பு.

சென்னைத் "தென்னிந்திய செங்குந்தமகாஜனசங்க" த்தின் அமைச்சரும்; "செங்குந்தமித்திரன்" பத்திரிகாசிரியருமாகிய திருவாளர் ம. சண்முகசுந்தர முதலியார் M. A., L. T., அவர்கள் எழுதியது.

அன்பார்ந்த ஐயா,

தாங்கள் இயற்றியுள்ள "நளாயனி வெண்பா" வை நான் தற்காலச் செய்யுட் பகுதியை விருத்தி செய்யும் தகுதிவாய்ந்த ஒரு நூலென்றே கருதிப் போற்றுகின்றேன். அது நெடுங்காலம் மழையின்றி வறண்டு கிடந்த பூமியிற் பொழிந்த புதுமாரியேபோல் அவ்வளவு புத்துயிரளிப்பதாயிருக்கிறது. செம்மொழிநடையின் முக்கியாம்சங்களாகிய அளவுகடவாமையும், தூய்மையும் அதில் பொதிந்து கிடக்கின்றன. நெடுங்காலமாகத் துயில்கொண்டு கிடந்த செந்தமிழ்ச் செல்வி தற்போது தான் விழித்தெழுகிறாள்: குளிரும், இருளும் மலிந்த ஓரிரவிற்குப் பின்வரும் மித உஷ்ணமும், பிரகாசமான சூரிய ஒளியும் பொருந்திய ஒரு நற்பகலின் உதயம் நெருங்கியிருக்கிறது. அதைக்குறிக்கும் முன்னோடுதூதராக மனவெழுச்சி நிறைந்த கவிஞரும், கசடறக்கற்ற புலவருமாகிய தங்களையே அச்செல்வி தேர்ந்தெடுத்துள்ளாள் போலும். வாழ்க்கையில் தாங்கள் அனுஷ்டித்துவரும் தூய ஒழுக்கமே, தங்கள் மனப்பான்மை இந்த ஒரு விஷயத்தை ஆராய்ந்தெடுத்துச் செய்யுளில் அமைக்குமாறு தங்களைத் தூண்டியது. தங்கள் கவிதை தமிழ்ச்செய்யுளின் சரித்திரத்தில் ஒரு தனித்த விசேஷகாலத்தைக் குறிக்குமென்பது திண்ணம்.

இங்ஙனம்,
ம. சண்முகசுந்தர முதலியார் M. A., L. T.,


மௌத் கலியர்.
நளாயனி
அம்மையார்.
By
N.S.Ramasamy

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.



# நளாயனிவெண்பா.

## தற்சிறப்புப்பாயிரம்.

### காப்பு.

### நம்மாழ்வார் துதி.

சீர்கொண்ட வெண்பாவிற் றேவி நளாயனியி
னேர்கொண்ட காதை யியம்பற்காம்—பார்கொண்ட
வாயமலன் வேண்டுதிரு வாய்மொழியன் மாறனிரு
தூயமலர்ப் பாதந் துணை. (க)

### முதன்முக்குரவர் துதி.

பெற்றும் வளர்த்தும் பெயரிட்டு மெண்ணெழுத்துக்
கற்றுக் கொடுத்துங் கவினச்செய்—துற்றுவக்கு
மாதாரத் தாய்தந்தை யாசா னிவர்த்துதிப்பாம்
பாதார விந்தம் பணிந்து. (உ)

---

(க) பார்கொண்ட வாய் அமலன்—உலகங்களையுண்ணப்பெற்ற திருவாயை யுடைய திருமால். மாறன்—நம்மாழ்வார்.

(உ) கவின்—அழகு. உவத்தல்—மகிழ்தல். ஆசான்—குரு. பாதஅரவிந்தம்—பாதமாகிய தாமரை.

## திருமால் துதி.

வேதத் தலையினது மேதக்கார் வேண்டுவதும்
போதத் தமிழின்பின் போவதுவு—மோதத்
திருமங்கை பற்றச் சிவப்பதுவுங் காக்குங்
கருமங்கை கொண்டான் கழல். (௩)

## திருமகள் துதி.

தனந்தனயர் சுற்றந் தரணிமணி நெல்வா
கனந்தனதா ளென்பர் கருது—மனந்த
சயன முகின்மார்பிற் றங்குமினுஞ் செய்யா
ளயனங்க ணல்கு நலம். (௪)

## கலைமகள் துதி.

வெண்டா மரையிலயன் மென்னுவிற் கற்றோர்க
ளெண்டா மரைமலரி லெந்நாளுந்—தண்டாமன்
மேவித் திகழும் விமலை கலைச்செல்வி
சாவித் திரிதாள் சரண். (௫)

## அவையடக்கம்.

அய்யனுமாய் முன்ன ரருமகவின் சொற்போலுஞ்
செய்ய நளாயனியின் சீர்க்காதை—துய்யநூன்
முற்றுணர்ந்தார் முன்னர் முறையி லுணராதேன்
சிற்றுணர்வாற் சொல்லுந் திறம். (௬)

தற்சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

(௩) மேதக்கார்—உயர்ந்தோர். போதம்—ஞானம். ஓதம்—சமுத்திரம். திருமங்கை—பெரியபிராட்டியார் (இலக்குமி). காக்கும் கருமம்—காப்பாற்றுந்தொழில் (ஸ்திதி). கழல்—பாதம்.

(௪) தனம்—பொன். தனயர்—புத்திரர். தரணி—பூமி. மணி—இரத்தினம். செய்யாள்—இலக்குமி. (பூமி மக்கள் சுற்றம் பொன் மணி நெல் வாகனம் அடிமை என்பன அஷ்டபாக்கியங்கள்).

(௫) அயன்—பிரமன். நா—நாக்கு. எண்தாமரை—மனமாகிய தாமரை. தண்டாமல்—நீங்காமல். திகழ்தல்—விளங்கல்.

(௬) அய்யன்—தந்தை. ஆய்—தாய். மகவின் சொல்—குழந்தையின் நிரம்பாச்சொல். திறம்—தன்மை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனி வெண்பா.

## நூல்.

## மணம்புரிகாதை.

தருமனைநோக்கித் துருபதன், பாஞ்சாலியை அருச்சுனனுக்கு மணம்புரிவிப்போமெனல்.

1. பூமாலை யேற்றுப் பொலங்கைப் பிடித்தாற்கு
மாமாலைத் தோழமைகொள் வாகையற்கு—நாமாலைக்
கன்னன் மொழிமன்றல் காண்பா மெனப்பெற்ற
மன்னன் மொழிந்தனன்றன் மற்கு. (க)

தருமன், பாஞ்சாலியை நாங்கள் ஐவரும் மணப்போமெனல்,

2. அன்னை மொழிமறையா யாதரித்தோ மைவருக்கும்
பின்னை மொழியொன்றும் பேசாதுன்—பொன்னை
வதுவை புரிந்தளிப்பாய் மன்னவனே யென்றான்
மதுவைகுந் தார்த்தரும மன். (உ)

ஒருத்தியை ஐவர்மணப்பது, முறையோவென்று துருபதன், மயங்குதல்.

3. பார்த்தன் றனுவளைக்கப் பார்த்து மனமகிழ்ந்த
சீர்த்த துருபதன்றன் சேயிழையைப்—போர்த்தனுசா
ரஞ்சுபேர் வேட்ட லழகோவென் றையுற்று
நெஞ்சுபே துற்றா னெடிது. (ங)

---

(1) பொலம் கை—அழகிய கை. மாமால்—திருமால். வாகையன்—வாகைமாலையணிந்த அருச்சுனன். ஆலை—கரும்பாலை. மன்னன்—துருபதன். தன்மன்—தருமராசன்.

(2) மறை—வேதம். பொன்—இலக்குமிபோன்ற பாஞ்சாலி. வதுவை—விவாகம். மதுவைகுந்தார்—தேன் தங்கிய பூமாலை.

(3) பார்த்தன்—அருச்சுனன். தனு—வில். பேதுறல்—மயங்குதல்.

### வியாசபகவான், துருபதனிடம் தோன்றுதல்.

4. எழுதா மொழியாவு மெண்வரிசை யாக
முழுதாய்ந்து கோத்த முனிவன்—றெழுதார்த்துத்
தாஞ்சால நோற்ற தவர்சூழத் தோன்றினான்
பாஞ்சாலன் முன்னர்ப் பரிந்து. (ச)

### துருபதன், தன்குறையை விண்ணப்பித்தல்.

5. எதிராகச் சென்றங் கிணைத்தாள் வணங்கி
நிதியா சனந்தந்து நேர்ந்த—முதிராசி
கொண்டத் தவன்பாற் குறையை விளம்பினான்
வெண்டண் குடையுடைய வேந்து. (ரு)

### வியாசர், துருபதனுக்குப் பாஞ்சாலி முற்பிறப்பில் நளாயனியாய் மௌத்கலியமுனிவனை மணந்துவாழ்ந்தாளெனல்.

6. வருந்தலைநீ மன்னுன் மகத்தழலில் வந்த
மருந்தனையாண் முற்பவத்தின் மாதர்—திருந்த
நளாயனியாய் மௌத்கலிய ஞானிதனை வேட்டன்
பளாவி யிருந்தா ளமைந்து. (சா)

### மௌத்கலியமுனிவன், நளாயனியைச் சோதித்தல்.

7. தன்னிலைமை காணத் தனைப்பலவாய்ச் சோதித்தும்
பொன்னிலைமை தீயிற் பொலிவதுபோற்—றன்னி
மனையறம் பூண்டாண் மனமகிழ வின்பந்
தனையறவுந் தந்தான் றவன். (எ)

### நளாயனியாகிய இந்திரசேனை, போகத்தை வெறுத்துத் தவத்திலிருந்த முனிவனையடைதல்.

8. தீராசை யாலவளைத் தீர்ந்துதவஞ் செய்திருந்தான்
பேராசை போகத்திற் போராதவ்—வேரார்ந்த
விந்திரசே னைத்தலைவி யின்பை யிரந்தாளம்
மந்திரவே தத்தான் மருங்கு. (அ)

---

(4) முனிவன்—மனனசீலரான வியாசமுனிவர். சால—மிகவும்.
(5) நிதி—பொன். முதிர் ஆசி—மேலான வாழ்த்து.
(6) மருந்து—சாவாமருந்து (அமிர்தம்). பவம்—பிறப்பு. மாதர்திருந்த—பெண்கள் தன்முறையைப் பின்பற்றித் திருத்தமுற. வேட்டல்—மணத்தல். அளாவல்—கலத்தல்.
(7) தன்நிலைமை—நளாயனியின் கற்பின்றன்மை. தனை—நளாயனியை. பொன்நிலைமை தீயில் பொலிவது—பொன் நெருப்பில் சுடச்சுட முன்னிலும் ஒளிவிடுவது. அறவும்—மிகவும்.

முனிவன் மறுத்தல்.

9. வாளாப் பலபகலை மங்கையுனக் காவொழித்தேன்
மீளாக் கதியடைய வேட்டுநின்றேன்—கேளாகேன்
போதி யெனச்சொல்லிப் புங்கத் தவத்திருந்தான்
வேதியனவ் வாயிழையை விட்டு. (௯)

என்னை விட்டுவிட்டால் யானென்செய்வேனென்று வருந்திய,
இந்திரசேனைக்கு முனிவன், சாபமிடல்.

10. என்னையான் செய்வ னெனைப்பிரியின் மாதவத்து
முன்னையோ யென்ன மொழிந்தழுதா—டன்னைத்
தவமோக னைவர் தமக்குரியை யாகிப்
பவமோகந் தீர்கென்றான் பார்த்து. (௧௦)

இந்திரசேனை, சிவனைக்குறித்துத் தவஞ்செய்தல்.

11. வடுமாற்ற மன்னன் வழங்குதலு நெஞ்சந்
தடுமாற்றங் கொண்டுதனித் தத்தைப்—படுமாற்றக்
காதண்டங் கண்ணாள் கடுந்தவஞ்செய் தாண்மேரு
கோதண்டத் தானைக் குறித்து. (௧௧)

சிவன், வரம் கொடுத்தல்.

12. ஐந்தான வக்கரத்தை யாய்ந்துரைத்து நோற்றாளி
னைந்தான சொல்லி னருங்கணவ—ரைந்தாக
வைந்தா னனத்தா னருள்செய்தான் முன்னாளெய்
தைந்தான போக மறிந்து. (௧௨)

---

(8) தீர் ஆசை — போகத்தில் இச்சையின்மை. இந்திரசேனைத்தலைவி—நளாயனி யென்னும் இந்திரசேனையாகிய நாயகி. மந்திரம்—தன்னை நினைப்பவரைக்காப்பது(நிறைமொழி யென்றுங்கூறுவர்). வேதத்தான்—மறையோர்ந்த முனிவன்.

(9) வாளா—வீணாக. மீளாக்கதி—வீடு. கேள்—உறவு.

(10) தவமோகன்—தவத்தை விரும்பும் முனிவன். பவமோகம்—பிறவிக்குக்காரணமாகிய இச்சை.

(11) வடுமாற்றம்—பழிச்சொல். தத்தைபடுமாற்றம்—கிளிபோன்ற சொல். காது அண்டு அம் கண்ணாள்—காதளவும் நீண்ட அழகிய கண்ணையுடைய இந்திரசேனை. மேரு கோதண்டம்—மேருமலையாகிய வில்.

(12) ஐந்து ஆன அக்கரம்—பஞ்சாட்சரம். ஐந்து ஆன சொல்—ஐந்துமுறைக் கணவனைக் கொடுவென்ற சொல். ஐந்து ஆனனத்தான்—ஐந்து முகத்தையுடைய சிவன். முன்நாள் எய்து ஐந்து ஆனபோகம்—முன் தன்கணவனாகிய முனிவன் சாபத்தால் அடைந்த ஐந்து கணவரால் நுகரும் இன்பம்.

சிவன், ஐந்து கணவரை அளித்த காரணங்கூறுதல்.

13. கொழுநன் கொடுத்த கொடுஞ்சாபத் தோடு
விழுநற் குணத்தாய் விரைவா—யெழுநசையா
லைம்முறையி கென்ன வறைந்தனைநீ யும்மதனாற்
செய்ம்முறையி தென்றான் சிவன். (கங)

இந்திரசேனை கங்கையில் மூழ்கியெழுந்து அழுத கண்ணீர், தாமரைமலராக, இஃதென்ன புதுமையென்று இந்திரனுறுதல்.

14. தண்ணீரின் மூழ்கித் தனித்தங் கழுதிட்டாள்
கண்ணீரி னாய கமலவனம்—பெண்ணீரிற்
றன்னே ரிலாண்முன் சசிகா தலன்வந்தா
னென்னே புதுமையீ தென்று. (கச)

சிவன் கட்டளைப்படி இந்திரசேனை, இந்திரனைச் சிவனிடம் அழைத்தேகல்.

15. உன்மு னுறுவானை யொண்டொடியா ழத்தத்தா
யென்மு னழைத்திடுக வென்றுரைத்த—சொன்முன்னி
நாகா பரணத்து நக்கன்பாற் கொண்டுய்த்தாண்
மாகா திபனை மறித்து. (கரு)

செருக்கால் சிவனைவணங்காது எதிர்சென்ற இந்திரன், பூமியில் வீழ்தல்.

16. விடையா னெதிரே விதிகொண்டு போற்றா
தடையா யிரங்கண்ண னன்னோன்—படையாதும்
விட்டிட்டா னில்லை விழுந்தான் புவிமீது
பட்டிட்டான் போலப் பதைத்து. (கசு)

---

(13) கொழுநன்—கணவன். விழுமம்—சிறப்பு. ஐம்முறையீக என்ன அறைந்தது—கணவனைத் தாராயென்று ஐந்துமுறை கேட்டது.

(14) அழுதிட்டாள்—அழுத இந்திரசேனை. ஆய—ஆனது. கமலவனம்—கமலக்காடு. சசி—இந்திராணி. புதுமை—அதிசயம்.

(15) யாழ் அத்தம்—வீணைபோன்ற கை. நக்கன்—சிவன். மாகாதிபன்—இந்திரன்.

(16) விடையான்—இடபவாகனத்தையுடைய சிவன். ஆயிரம் கண்ணன்—இந்திரன். அன்னோன்—சிவன். படை—ஆயுதம். படுதல்—இறத்தல்.

பின் வணங்கிய இந்திரனுக்குச்சிவன், குற்றஞ்செய்து பாதலத்துற்ற பழய இந்திரர் நால்வரைக் காட்டுதல்.

17. தெரிந்தெழுந்து போற்றச் சிவனெடியிற் குற்றம்
புரிந்தெழுந்த தஞ்செல்வம் போக—விரிந்தெழுந்த
பாதலஞ்சேர் தொல்வானப் பார்த்திபரைக் காட்டினன்
மீதலஞ்சேர் வேந்தற்கு மெய்த்து. (கஎ)

சிவன், நீங்கள் பூமியிற்பிறந்து துருபதையை மணப்பீரென இந்திரரைவருக்குங் கட்டளையிடல்.

18. சுரபதிக ளாங்குத் தொழுதேத்தி நிற்ப
நரபதிக ளாயிந்த நாரி—துருபதற்குப்
புத்திரியா வாடன்னைப் போய்மணப்பீ ரைவீரும்
பத்தினியா வென்றான் பரன். (கஅ)

இந்திரசேனைக்கு நீ நெருப்பில் பிறப்பாய்,
இவ்விந்திரர்கள் பாண்டவராய் உன்னை மணப்பாரெனல்.

19. பாண்டு குமரராய்ப் பார்மன்ன ராய்க்கோலம்
பூண்டுகந்திவ் வைவர் புவிமேவி—யாண்டு
நெருப்பிற் பிறக்கு நினைமணப்பா ரென்றான்
பொருப்பிற் பிறங்கற் புதன். (கக)

இந்திரசேனை பாஞ்சாலியாகவும் புதிய இந்திரன் அருச்சுனனாகவும் பழய இந்திரர்கள் தரும பீம நகுல சகாதேவர்களாகவும் பிறந்தார்களெனல்.

20. பாவை முதற்கண்டான் பங்குனனு மன்னவணின்
கோவைக் கனிவாய்க் குமரிவிறன்—மாவைகு
மற்றடந்தோண் மன்னர் மகபதிக ணல்வரா
மிற்றடைந்த தாகு மிது. (உ0)

---

(17) தொல்வானப்பார்த்திபர்—பழய இந்திரர்கள் (விஸ்வபுக்கு பூததாமன் சிபிச்சக்கிரவர்த்தி சாந்தி என நால்வர்). மீதலம் சேர் வேந்து—புதிய இந்திரன் (தேசஸ்வி). மெய்த்து—மெய்ப்பித்து.

(18) சுரபதிகள்—தேவ மன்னர்கள். நாரி—இந்திரசேனை.

(19) கோலம்—வடிவம். ஆண்டு—அவ்விடம் (புவியில்). பொருப்பில் பிறங்கு அற்புதன்—கைலாய மலையிலெழுந்தருளிய சிவன்.

(20) பாவை—பதுமைபோன்ற இந்திரசேனை. பங்குனன்—அருச்சுனன். குமரி—மகள் (துருபதை). விறல்மா—வீரலக்குமி. மகபதிகள்—இந்திரர்கள். இது—இந்நிகழ்ச்சி.

### வியாசர், துருபதனைநோக்கிப் பாஞ்சாலியைப் பாண்டவரைவருக்கும் மணம் புரிவிப்பாயெனல்.

21. ஆகையினுன் மன்னுநீ யையஞ் சிறிதுமிலா
தோகையொடு வேத வொழுங்காக—வாகையுறும்
பாண்டு புதல்வர்க்குப் பாஞ்சாலி யைத்தருவா
யீண்டுபெரு மன்ற லிழைத்து. (உக)

### துருபதன் வேண்ட, வியாசர் நளாயனிகாதையை விரித்துரைத்தல்.

22. உள்ளந் தெளிந்தங் குடன்பட்ட பாஞ்சால
னள்ளற் கமல வடிபணிந்து—மெள்ளமுனஞ்
சொன்ன நளாயனியின் றாய சரிதமருள்
கென்னமுனி சொற்று னிசைந்து. (உஉ)

### நிடதநாட்டுச்சிறப்பு.

23. மழைவளர்த்த நீர்வளங்கொண் மண்வளத்தாற் சாலி
கழைவளத்த தாயோங்கிக் காட்டுங்—தழைவளத்தண்
கோட்டமரை பூத்த குவலயமா னானனமா
நாட்டமுறு மாநிடத நாடு. (உங)

24. கோனுட்டு மாதர் குரலிசைக்குத் தோற்றுப்போய்க்
கானுட்டு மெல்லியர்பாற் கற்கவன்றே—மேனுட்டு
விஞ்சை மடவார் விரும்பி யடைந்தார்கண்
மஞ்சைக் கியமா மலை. (உச)

### மாவிந்தநகரச்சிறப்பு.

25. பொலிவினுற் போகத்தாற் பொன்னுலகஞ் செல்வ
மலிவினுன் மாவளகை மண்ணிற்—குலவும்
பொலம்பொருண்மற் றெல்லாம் பொருந்தலின்மால் போலு
நலம்பெறுமா விந்த நகர். (உரு)

---

(21) ஐயம்—சந்தேகம். ஓகை—மகிழ்ச்சி. மன்றல்—விவாகம்.
(22) அள்ளல் கமலம்—சேற்றில் முளைக்கும் தாமரை.
(23) சாலி—நெல். கழை—கரும்பு. மரை—தாமரை (முதற்குறை). குவலய மான்—பூதேவி. நாட்டம்—பார்வை. கோட்டம்—வயல். ஆன னம்—முகம்.
(24) கோன்நாடு — நளனுடைய நிடதநாடு. கான்நாட்டுமெல்லியர் — வேட்டுவப் பெண்கள். மஞ்சு ஐக்கியம்—மேகம்படிதல்.
(25) பொலிவு—தோற்றம். போகம்—இன்பம். மலிவு—மிகுதி. மால் போலும்—எல்லா வுலகங்களையும் தன் வயிற்றிலடக்கிய திருமால் போலும்.

26. மானத் தமர்ந்து மணவாள ரோடேகும்
வானத் தரம்பையர்கண் மாளிகையின்—ருனத்த
நாரியரொ ழுக்க நலமுங் குணநான்குங்
கோரியவை கற்பார் குறித்து. (உசு)

நளச்சக்கரவர்த்தியின்பெருமை.

27. வரைநீத் தளித்தமுதல் வள்ளலெழு வோரி
லுரைநீத்த சீர்த்திக் கொருவன்—புரைநீத்த
சக்கரங்கொண் மன்னவரிற் றுனொருவ னுமகள
னெக்கலையுந் தேர்ந்த விறை. (உஎ)

நளன், தமயந்தியைத் திருமணஞ்செய்தல்.

28. கருத்திற் குடியிருந்த கன்னிகைபான் மீளத்
திருத்தித்தூ துற்றபடி தேர்ந்திட்—டருத்தியொடாங்
கிந்திரனு மற்றையரு மீந்தவரத் தோடுதம
யந்தியணி பெற்றா னரசு. (உஅ)

29. தானே விரும்பித் தனதுளஞ்சேர் காதலன்போல்
வானேந்தல் வன்னி வருணனம—னுனோர்
வியப்ப வுணர்ந்துநள வேந்தனையே வேட்டு
நயப்படைந்தா ணங்கை நனி. (உகூ)

மக்களைப் பெறுதல்.

30. தகுந்தகுமிம் மாது தனக்கிவனே யென்ன
மிகுந்தகுணத் தம்பதிகண் மேவிப்—புகுந்தம்
மனைமங் கலத்தணியாய் மாண்புடையா ரீன்றார்
தனையன் றனையையயுந் தாம். (௩0)

---

(26) மானம்—விமானம் என்பதன் முதற்குறை; வலவன் செலுத்தாத வானவூர்தி. (குணம் நான்கு 33-வது செய்யுளிற்பார்க்க).

(27) வரைநீத்தல்—அளவு கடத்தல். முதல்வள்ளல் எழுவர் :—சகரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, காரி, விராடன். சக்கரங் கொள் மன்னவர்—சக்கரவர்த்திகள்:—அரிச்சந்திரன், நளன், முசு குந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன்.

(28) மீளத்திருத்தி—தமயந்தியை மணக்கவேண்டுமென்ற நினைவைமாற்றி. தூது உற்றபடி தேர்ந்திட்டு—தமயந்தியிடத்தில் நளன் சென்று உண்மையாகத் தூதுரைத்ததை யறிந்து. மற்றையர்—மேல்வருஞ் செய்யுளிற்குறிக்கும் அக்கினி, எமன், வருணன் என்பார். அணி—பூமாலை.

(29) உளஞ்சேர் காதலன்—மனத்தில் வரித்த நாயகனாகிய நளன். நயப்பு—மனமகிழ்ச்சி. நங்கை—பெண்ணிற் சிறந்த தமயந்தி.

(30) தம்பதிகள்—நாயகி நாயகர்கள். தனையன்—மகன். தனையை—மகள்.

### நளன்மகள் நளாயனியம்மையார் பருவம்.

31. முற்று மழலை மொழியா ணளாயனிப்பே
ருற்று டமனியத்த வோவியத்தாள்—பெற்றார்
செவிக்குமெய்க் கின்பஞ் செறியவளர்ந் திட்டாள்
புவிக்குப் பிறைமதியம் போன்று. (௩க)

32. தாயரைவர் பாராட்டத் தற்பருவப் பேதைகடந்
தேயபெதும் பைப்பருவத் தேய்ந்தவெய்தித்—தூயனவை [தா
கேட்டுணர்ந்து தான்மணக்குங் கேள்வனுக்காய் நோன்பிழைத்
ளூட்டுணர்ப்பூங் கோதையவ ணன்கு. (௩உ)

### நளாயனி கன்னிமாடத்திருந்தல்.

33. வருமங்கை யாய்க்கன்னி மாடத் தமர்ந்து
தருமங்கை தானுந் தளரத்—திருமங்கை
போலு மடந்தை பொலிந்திருந்தா ணற்குணங்க
ணாலுந் தனையடைந்த நாள். (௩௩)

### நாரதமுனிவர், நளாயனியின் பெருமையை இந்திரனுக்குரைத்தல்.

34. பொலிவு படர்ந்தன்பு பூத்தகொழு கொம்பா
மலிவுபெறு கற்பவட்கு வானி—னிலவுலகின்
மற்றார் நிகர்வர் மகபதியே யென்றான்யாழ்
கற்றார் முனியவணேர் கண்டு. (௩௪)

### இந்திரன், நளாயனியைச் சோதிக்க மந்திரிகளோடு ஆராய்தல்.

35. தாயினு மிக்கா டமயந்தி தன்மடந்தை
வேயிரு தோளியியன் மேன்மைகேட்—டாயிரங்
கண்ணுடையான் றேர்ந்தான் கலைதேர் மதிவலரோ
டெண்ணுடையாட் சோதிக்க வென்று. (௩௫)

---

(31) தமனியம்—பொன். செவி—காது. மெய்—உடல்.

(32) தாயர் ஐவர்:—பெற்றதாய், பாராட்டுந்தாய், முலைத்தாய், ஊட்டுந்தாய், செவிலித்தாய். பெதும்பைப்பருவத்து எய்ந்தவெய்தல்—8 முதல் 11 வயதளவான பெதும்பைப்பருவத்தில் பதுமை, அம்மனை, பந்து, கழங்கு, ஊசல் முதலியன ஆடுதல். கேள்வனுக்காய் நோன்பிழைத்தல்—12 முதல் 13 வயதளவான மங்கைப்பருவத்தில் நல்லகணவனைப் பெறவேண்டி நோன்பு நோற்றல்.

(33) தருமங்கை—இந்திராணி. மடந்தை—நளாயனி. குணங்கள் நாலு—அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என மகடூஉக் குணங்கள் நான்கு.

(34) மலிதல்—நிறைதல். மகபதி—வேள்விக்குத் தலைவனான இந்திரன். அவள்நேர்—நளாயனியின் நேர்மை.

### இந்திரனுக்கு மந்திரிகள் கூறுதல்.

36. திறங்கொ ணிறையுடையார்த் தேர்தற் கரிதா
மறங்கொண்மும் மூர்த்தியர்க்கு மாகிற்—பிறங்குந்
தவறேது மற்றுயர்ந்த தம்பதிக ளெல்லா
தெவரே யுணர்வ ரினிது. (௩௬)

37. பொய்கொண்ட வாசை பொலிந்தாருக் கேலாது
மொய்கொண்ட கட்டழகின் மூழ்குவரான்—மெய்கொண்ட
வின்ப நயந்தார்க்கே யெய்தலாந் தன்மைத்தென்
றன்பமையச் சொற்றூ ரவர். (௩௭)

### இந்திரன் சொற்படி மௌத்கலியமுனிவன் நளாயனியை மணக்க இசைதல்.

38. உத்தமியின் றேற்ற மூலகறிய வேண்டுகின்றேன்
வித்தகனே நிற்குமது மேன்மையென—புத்தமுத
மன்னு டனேமணக்க வாங்கிசைந்தான் மௌத்கலியன்
பொன்னுடன் சொற்படியே போந்து. (௩௮)

### முனிவன், நளன் சபையை அடைதல்.

39. எண்ணியவை யெண்ணியாங் கெய்துவிக்கு நற்றவத்துப்
புண்ணியவை தீகன் புகுந்திட்டான்—பெண்ணியலை
வேண்டி யறம்பெருக வேறுய தேயவுல
காண்டிடுஞ்செங் கோலா னவை. (௩௯)

### நளன், முனிவனை உபசரித்தல்.

40. தேடிற் பெறற்கரிய சேவை யெனக்களிக்க
நாடிப் புகுந்ததென்ற னற்றவமென்—றோடிச்
சுருள்பாத கஞ்சந் தொழுதா சனமிட்
டருள்பார்த் திருந்தா னரசு. (௪௰)

---

(35) வேய்—மூங்கில். இயல்—இயற்கை. எண்ணுடையாள்—யாவரா லும் மதிக்கத்தக்க நளாயனி.

(36) திறம்—உறுதி. நிறை—கற்பு. அறம்—தருமம். பிறங்கல்—விளங் கல். தவறு—குற்றம்.

(37) பொவிதல்—மிகுதல். ஏலல்—இயலல். மெய்கொண்ட இன்பம்— வீட்டின்பம். நயத்தல்—விரும்புதல்.

(38) தேற்றம்—தெளிவு. அது—ஓர் கற்புடையாளுக்குக் கணவனுவது.

(39) வேறு ஆய தேய—அறத்துக்கு மாறுபட்ட மறத்தொழில் ஒழிய.

(40) சேவை—வழிபடுதல். கம் சம்—நீரில் தோன்றுவது ; தாமரை.

முனிவன், நளனுக்குத் தான் வந்த காரணங்கூறுதல்.

41. இல்லாமை யாலே யிரந்தாருக் கில்லையென்று
சொல்லாமை கேட்டுத் துணிந்தடைந்தேன்—வெல்லாமை
துன்னலர்கட் காக்குஞ் சுடர்வடிவே லோயென்றான்
றன்னலங் குன்றாத் தவன். (௪௧)

நளன், முனிவனை நோக்கி வேண்டியதியாதெனல்.

42. வேண்டல் வெறுப்பற்ற வேதமுனி வேண்டியதைக்
காண்டல்செய் யாதுரைத்தான் காவலனே—யீண்டஃதைச்
சொன்னா லளித்திடுவேன் சொத்தெவையு நிற்குரித்தா
மென்னா லளிப்பதிது வென்று. (௪௨)

முனிவன், நளனைப் புகழ்ந்துரைத்தல்.

43. காட்சிக் கெளியை கடுஞ்சொல்லை யல்லையிப்பூ
வாட்சிக் குரியை யருளுடையை—மாட்சிமைசேர்
மன்னுநின் னாளுகையில் வாழ்வார்க்குத் தத்தமது
பொன்னாட்சி போலாம் புவி. (௪௩)

குறிப்புரையால் நின்மகளைத் தருகெனல்.

44. பெரிய நிறைத்திருவைப் பெற்றிட்டாய் செய்பு
மரிய தவத்தொழிலுக் காக—வுரியவைக
ளாய்ந்தளித்துத் தொண்டுசெயற் கானவோ ராளன்றி
யேய்ந்ததிலை யின்மை யெனக்கு. (௪௪)

45. பொன்வேண்டே னாளப் புவிவேண்டேன் மற்றொன்று
நின்வேண்ட லஃதெனக்கு நீயளிப்பாய்—மின்வேண்டுங்
கார்போலு மோடைக் களிற்றரசே யென்றானிப்
பார்போலுந் தக்கானைப் பார்த்து. (௪௫)

---

(41) வெல்லாமை—தோல்வி. துன்னலர்—பகைவர். தன்னலமென்பது ஈண்டு மெய்யுணர்வு முதலிய குணங்களை.

(42) காவலன் காண்டல் செய்யாது உரைத்தான் என்று மாற்றிப்பொருள் கொள்க. காண்டல் செய்யாது—தெரிந்துகொள்ளாமல்.

(43) காட்சிக்கு—யாவரும் வந்து காணுதற்கு. பூ ஆட்சி—புவியையாளுகை. வாழ்வார்—வாழுங்குடிகள். பொன் புவி ஆட்சி—(உன்னுடைய) செல்வமும், புவி ஆளுகையும் (தத்தமது போலாம்).

(44) இன்மை—இல்லாமை. பெரிய நிறைத் திருவை—பெரிய நிறைந்த செல்வத்தை. (பெரிய கற்பையுடைய பெண்ணையென்றும் பொருள் கொள்க).

(45) பார்போலும் தக்கான் — பூமியைப்போலும் பொறுமையுள்ள நளன். மற்றொன்றும் நின்வேண்டல் என்றது பொன், மண், ஒழிந்த மற்றொன்றாகிய பெண்.

முனிவன் குறிப்புணர்ந்த நளன்,
தன்மகள் கருத்துணர்ந்து கொடுப்பேனெனல்.

46. உரைத்த குறிப்பதனை யுய்த்துணர்ந்த மன்னன்
விரைத்துச் சுருண்டுமலர் வேய்ந்திட்—டிரைத்தளிசேர்
கோதை கருத்துணர்ந்து கொண்டளிப்பே னென்றானற்
றூதை கடனெனச்சொற் றந்து. (சசு)

முனிவன், "ஆம்" அதே தக்கதெனல்.

47. ஆனதுரைத் தாயரசே யஃதே கருத்தெனக்கு
மானயில்வேன் மானு மதர்நோக்கத்—தேனமிர்தச்
சொல்லா ளெனைக்கண்டு சோர்வின்றிக் காதலித்தா
லில்லாளாய்க் கொள்ள வினிது. (சஎ)

முனிவன் விரும்பியவண்ணம், நளாயனியை நேரில்காண
நளன் விடைதருதல்.

48. நேராக யான்சென்று நேரிழையா டன்கருத்தைச்
சீராகத் தேர்ந்து தெரிதற்குத்—தாராய்
விடைநீ யெனக்கென்றான் மெய்புணர்வோன் காவற்
றடைநீத் திறையளித்தான் றான். (சஅ)

முனிவன் நளாயனியிடம் சென்றபின், நளன் சிந்தித்தல்.

49. கலைவல்லான் றன்னைக் கருதிடுமோ மண்ணாள்
சிலைவல்லார் மேலுறுமோ சேணார்—மலைவெல்லுங்
கொம்மையா ளுள்ளென்னக் கோமா னிருந்தானாழ்
செம்மையா கச்சிந்தை செய்து. (சகூ)

முனிவன், கன்னிமாடத்துக்குச் செல்லுதல்.

50. பொற்குண் டலத்தான் புரிசடையான் மந்திரங்கள்
கற்குஞ் செபமாலை கைக்கொண்டான்—வற்கலையான்
முந்நூ லொளிர்மார்பன் முன்னோன் புறப்பட்டா
னன்னூன் முறையாளை நட்டு. (ருய)

---

(46) வேய்ந்திட்ட இரைத்து—அகரம் தொகுத்தல் விகாரம்.

(47) ஆனது—தகுதியானது. மானும்—ஒக்கும்.

(48) மெய் உணர்வோன்—முனிவன். இறை—விடை. தான்—நளன்.

(49) மண்ணாள் சிலைவல்லார்—அரசர். கொம்மை—முலை.

(50) வற்கலை—மரவுரி. நல்நூல் முறையாள்—கற்பிலக்கணஞ் சொல்லும் நூல்முறையின் நடையாள்.

முனிவன், அழகிய வடிவங்கோள்ளுதல்.

51. வனப்பிளமை முன்னோக்கன் மங்கையர்கள் கொள்கை
யெனப்பலநா ளேற்றபலத் தேதன்—னினைப்பிற்
புருடரவாக் கொள்ளும் பொலிவுநிறைந் திட்டா
னிருடியர்க டங்கட் கிறை. (ருக)

முனிவன் தோற்றம், மன்மதன் தவக்கோலம் போன்றதெனல்.

52. சும்மா கிடைக்குமோ தோகை யணிமன்ற
லம்மா வெனநோற் றருள்பெற்றுச்—செம்மாந்தாங்
கக்கோலத் தோடுற்ற வங்கசனே யாம்போலுந்
தக்கோனங் குற்ற தகை. (ருஉ)

நளாயனி, முனிவன்வரவை யெதிர்பார்த்தல்.

53. முன்பின் வழக்கின் முனிவருகை கேட்டார்ந்த
வன்பின் னுபசரிக்கு மாசையுட—னின்ப
முதிர்பா கனையமொழி முத்தநகை யாரோ
டெதிர்பார்த் திருந்தா ளெழுந்து. (ருங)

நளாயனி, வந்த முனிவன் அழகு நோக்கி வியத்தல்.

54. தன்னை மணக்கவருந் தன்மையினை யோராதாண்
முன்னை முனிவனென முந்துற்றாள்—பொன்னைக்
கருமேனி யாக்குமெனக் கண்வழுக் குற்றாளத்
திருமேனி கண்டு திகைத்து (ருச)

---

(51) வனப்பு இளமை முன் நோக்கல் — (தாங்கள் மணக்கும் கணவரது) அழகையும் இளமையையும் முதலில் கருதுதல் பெண்களின் இயற்கை. பொலிவு—அழகு. புருடர் என்பதில் சிறப்பும்மை தொக்குகின்றது.

(52) தோகை—மயில்போலுஞ்சாயலையுடைய நளாயனி. நோற்று—தவம் செய்து. அருள்பெற்று — நளாயனியை மணக்கும் வரம்பெற்று. செம்மாத்தல் — இருமாத்தல். அக்கோலம் — அத்தவக்கோலம். அங்கசன்—மன்மதன்.

(53) முன்பின் வழக்கு—உலகவழக்கு, செய்யுள்வழக்கு. முத்தநகையார்—முத்துப்போன்ற பல்வரிசைகளையுடைய பாங்கியர். ஆதரித்தாள் என்பது வினைமுற்று வினையெச்சம்.

(54) பொன்னைக் கருமேனி ஆக்கும் என—பொன்னையும் கருநிறமாக்குமென்று கருதத்தக்க.





முனிவன், நளாயனியின் அழகு நோக்கி வியத்தல்.

55. நன்கனக மாதவனு நங்கை யெழினோக்கித்
தன்கனமுஞ் சற்றே தளர்வுற்றான்—முன்னகத்தி
லெய்தாட்கு நீத்தாற்கு மிச்சைமின் றோன்றிற்றே
நொய்தாக்கு மூழா னுழைந்து. (௫௫)

நளாயனி, முனிவனை இன்னானென்று தெளியாமல் ஐயுறல்.

56. சங்கரனு மென்னிற் சசியும் பிரமனெனிற்
றங்க முகநான்குந் தோன்றிலவான்—சங்கவட்ட
மத்தத் திலையிலைமொய்ம் பாறிரண்டு மாதயிர்த்தா
ளெத்தகைய னாருமிவ னென்று. (௫௬)

முனிவனுக்கு இருக்கையளித்து உபசரித்தல்.

57. மூவரவ ராகமுதன் மூலமே யாகுகவான்
றேவரர சாகவரன் சேயாக—வாவலொடு
வந்தார்க் குபசரித்தல் வாய்த்த கடமையெனத்
தந்தாள் கனகா சனம். (௫௭)

58. அடித்தா மரைக்குமண மாக்குவபோ னீர்த்தூய்
வடித்தாய்ந்த தைலம் வழங்கிப்—பொடித்தாதுப்
பூவக் கதைசாத்திப் போற்றி யொதுங்கிநின்றா
ளேவியபின் மெல்ல வெழுந்து. (௫௮)

முனிவன், நளாயனிக்குத் தன்பெயரும் இருப்பிடமுங் கூறுதல்.

59. இலைகொண்ட வைந்தருவி னேந்தல்வாழ் நாட்டிற்
றலைகொண்ட தாருவனந் தன்னின்—மலைகொண்ட
மாளிகையா மெற்கென்பேர் மௌத்கலியன் மெய்காக்க
வாளிகைம்மா வென்றா னவட்கு. (௫௯)

---

(55) அகத்தில் எய்தாட்கும் நீத்தாற்கும் இச்சை மின் தோன்றிற்று—இது வரையில் யாரையும்மனத்தில் இச்சிக்காத நளாயனிக்கும், இச்சையை ஒழித்த முனிவனுக்கும் (மனமாகிய மேகத்தில்) இச்சையாகிய மின்னல் தோன்றிற்ற. இச்சையை மின்னென்றது தோன்றி மறைந்தமையால். அனகமாதவனும் நங்கை யெழில் நன்கு நோக்கி எனக்கூட்டுக.

(56) சசி—சந்திரன். சங்கவட்டம்—சங்கு, சக்கரம். மொய்ம்பு—தோள். சங்கவட்டம் அத்தத்திலை, இலைமொய்ம்பு ஆறிரண்டு; இவை முறையே திருமாலையும், முருகனையும் குறிக்கும்.

(57) அரன்சேய்—முருகன். கனகம்—பொன்.

(58) தைலம்—வாசனைத்தைலம். பொடித்தாது—மகரந்தப்பொடி. பூ—மலர்.

முனிவன், நளாயனிக்குத் தன் கருத்துணர்த்தி
நின் சம்மதங்கூறெனல்.

60. நாயகரின் வேறுதெய்வ நாரியர்க்கில் லென்றெண்ணுந்
தூய கருத்துள்ளார் தோன்றுமற்—போயகன்ற
விச்சை முளைக்கின்ற நின்றன்னைக் கண்டவுடன்
கச்சைமுலை யாளே கதித்து. (சுய)

61. இல்லாத வில்லாகி யில்லாக வென்னுள்ளம்
புல்லாது கண்டாய் புகரில்லாய்—வல்லாய்ந்து
சொல்ல மனமுளதேற் சொல்லென்றான் மாமுனிவ
னல்லமனத் தாளை நயந்து. (சுக)

நளாயனி, முன்னாள் நாரத முனியுரைத்தமையை யெண்ணுதல்.

62. இன்னஞ் சிலநாளி லெய்துந் தவக்கணவ
னன்னவனு னற்பே றடைகவெனு—முன்னொருநாள்
யாழ்வல்லோன் வாழ்த்தியசொல் யாவு மனங்கொண்டாள்
வாழ்வெல்லாந் தேர்ந்த மகள். (சுஉ)

முனிவனை மணக்க இசைதல்.

63. மொய்த்த வழகானு முன்முனிசொ னேர்மையினு
மெய்த்த நெறிகேட்ட மேன்மையினுந்—தைத்தெழுந்த
நல்லூழ்த் தொடர்பாலு நங்கை யுடன்பட்டாள்
பல்லூழ் சிறக்கப் பரிந்து. (சுங)

முனிவன், உடன்பாட்டைத்தெரிந்து கூறிய தோழியரை நோக்கி,
நளாயனி சொல்லிய சொல் தவறுவளோவெனல்.

64. திங்கள் வகிர்ந்தனைய செவ்விநுத லுட்கருத்தை
யங்கண் சகிக ளறிந்தறைந்தார்—பங்கமிலான்
கந்த மலர்க்கோதை கைவிடா ளேயென்றான்
றந்த மலர்வா சகம். (சுச)

---

(59) தலை—மேல்நுனி. தாரு—மரம். ஆளி—சிங்கம். கைம்மா—யானை.
(60) தோன்றுமல் — காணப்படாமல். இச்சை —ஆசை. கதித்தல்—எழுச்சி.
(61) இல்—மனைவி. புல்லல்—பற்றல். புகர்—குற்றம். வல்—விரைவு. நயத்தல்—விரும்பல்.
(62) பேறு—சிறப்பு. யாழ்வல்லோன்—யாழில் வல்ல நாரதமுனிவன்.
(63) தொடர்பு—சம்பந்தம். பல் ஊழ் சிறக்க—பலவூழிக்காலம் வரையில் தனது புகழ் சிறந்து விளங்க.
(64) நுதல்—நெற்றி. பங்கமிலான்—குற்றமற்ற தவத்தையுடைய முனிவன்.

முனிவன் சொன்னதைக்கேட்டுச் சகியாது நளாயனி வருந்துதல்.

65. செவிக்கினியாச் சொற்றன் செவிபுகலுஞ் செய்ய
கவிக்கினிதாஞ் சொல்லாள் கலுழ்ந்து—புவிக்கிடந்து
விம்மி யுயிர்த்து விளங்கிழையார் தேற்றுவிக்க
வம்ம வெழுந்தா ளயர்ந்து. (௬௫)

நளாயனி, முனிவனை நோக்கித் தன்மனவுறுதியைக்கூறி
என்னை பெற்றநுள வேண்டுமெனல்.

66. கொள்ளாது நின்னையே கொண்கனாய்க் கொண்டென்றன்
கள்ளாத வுள்ளத்திற் கட்டிவைத்தே—னெள்ளாது
கைவிடா தேற்றல் கடனுமதே யாமென்றாண்
மைவிடாக் கண்ணினீர் வார்த்து. (௬௬)

முனிவன், நீ உடன்பட்டதற்கு அடையாளம் தருகவெனல்.

67. சொற்றிறம்பி னுண்டாந் துயரென்ற மென்புருவ
விற்றிறங்கொள் வாளை விளித்தையன்—வெற்றிப்
படையாளுங் கண்ணைப் பரிந்தளித்தி யென்றா
னடையாள மொப்பி னதற்கு. (௬௭)

நளாயனி, கணையாழிகொடுத்தல்.

68. நீட்டினா ளஃதன்ன நீளம்பு வாரிதியைக்
கூட்டினா ரம்பெய்யுங் கூன்வரிவிற்—பூட்டு
மலைவெல்லுந் தோளான் மகடன்கண் போலுங்
கலைவல்லா னேற்ற கரத்து. (௬௮)

முனிவன் பிரிய, நளாயனி விரகமுறல்.

69. மையலைத்தன் னெஞ்சிலிட்டு மற்றெல்லாங் கொள்ளைகொண்டு
தையலைத்தன் னந்தனியே தான்விட்டு—மெய்யலைத்துப்
போங்கள்வ னைத்தேடிப் போனமனத் தாள்சோர்ந்தாள்
பூங்கள்வண் டார்ப்பப் புலர்ந்து. (௬௯)

---

(65) கவி—பாட்டு. விளங்கு இழையார்—ஒளிரும் பூணணிந்த தோழியர். அம்ம — வியப்பிடைச்சொல். புவிக்கிடந்து எதுகை நோக்கி மிகுந்தது.

(66) கொள்ளாது—இதுகாறும் யாரையும் கணவனாக மனதிலுங்கொள்ளாது. எள்ளல்—இகழ்தல். வார்த்தல்—பெய்தல்.

(67) சொல் திறம்பல்—சொன்ன சொல்லை மாற்றுதல். வில்திறம்—வில்லின் றன்மை. படையாளுங்கண்—வேலொத்தகண்.

(68) அஃது அன்ன—அக்கண்போன்ற. அம்பு வாரிதி—கணையாழி. கூடு—அம்புக்கூடு. தோளான்—தோளையுடைய நளன். கலைவல்லான்—முனிவன். (தன் கண்போன்ற, முனிவனிடத்து அக்கண்ணைப் போன்ற கணையாழியைக் கொடுத்தாள்).

பாங்கியர், நளாயனியைத் தேற்றுவித்தல்.

70. நாளைமணஞ் செய்வா னடுங்கலைநீ யென்றார்கள்
பாளை விரிந்தன்ன பைங்குழலார்—வாளைமீன்
பாக்கை யுதிர்க்கும் பழனநா டன்மகளைச்
சேக்கைசேர்த் தன்பு செறிந்து. (௭௰)

முனிவன் வரவால் முளைத்த காமதரு, அவன் பிரிந்தும் வளர்ந்ததெனல்.

71. பெருகருணை ராக்காட்சி பெய்வித்தாய்ப் பேதை
யுருகுளத்தி னன்பா ருரமாத்—தாமுளைத்த
காமதரு வம்முனிவன் கையகன்று மோங்கியதாற்
றாமதமில் லாமற் றழைத்து. (௭௧)

பரிதி, மேல்கடலடைதல்.

72. குடமானுங் கூடினருங் கொண்டின்ப மெய்தத்
தடமானுந் தம்மிற் றணந்த—கடமானு
முத்தமுலை யாரு முளரி முகம்வாடக்
கத்துமலை யுற்றான் கதிர். (௭௨)

மாலைக்காலவருகை, மன்மதன் தூதுபோலுமெனல்.

73. போர்க்குப் புறப்பட்டான் பூவாளி வேல்சிலைவாள்
வார்க்குலமா யாவும் வனைமினென்று—கார்க்குழலார்க்
காந்திட்டஞ் சொல்ல வணைந்திட்ட தூதன்போற்
போந்திட்ட சந்திப் பொழுது. (௭௩)

---

(69) மற்றெல்லாம்—அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, மாமை முதலியன எல்லாம். அலைத்தல்—வருத்தல். புலர்தல்—வாடுதல்.

(70) பைங்குழலார்—பசிய கூந்தலையுடைய தோழியர். சேக்கை—படுக்கை.

(71) காட்சி—பார்வை. கையகன்று என்பதிலுள்ள கை, தமிழ் உபசர்க்கம்.

(72) குடமான்—மேற்றிசையாகிய பெண். கூடினர்—தலைவனும், தலைவியுமாய்ப் பிரியாதிருந்தவர்கள். தடமான் — தடாகமாகிய பெண். தணத்தல்—பிரிதல். கடம்—கலசம். முளரி—தாமரை. அலை என்பது சினையாகுபெயராய்க் கடலையுணர்த்திற்று.

(73) பூவாளி—மலரை அம்பாகவுடைய மன்மதன். வாள் வார் குல மா—ஒள்ளிய நெற்றிப்பட்டத்தையுடைய இணையாகிய யானைகள். (கண்ணாகிய வேல் புருவமாகிய வில் ஒள்ளிய கச்சணிந்த இணைந்த முலைகளாகிய யானைகள் எனக்கொள்க).

இருளின் தோற்றம், மன்மதனூரும் யானைபோன்றதெனல்.

74. விளக்கநிறை கும்பங்கண் மெல்லியலார் தாங்க
வுளக்களிப்பிற் காமனெழூந் தூருந்—துளக்கப்
பிறையெயிற்று மீன்படாம் பேர்யானை போலு
மறையிருள்வந் துற்ற மதிப்பு. (எச)

இருளின் தோற்றம், பூமியை மூடிய போர்வைபோலும்,
விண்மீன்களின் தோற்றம், மதன்கணையால்
அப்போர்வையிலுண்டான துளைபோலுமெனல்.

75. அஞ்சு மலர்க்கணையாற் காற்று துலகெனநீற்
கஞ்சுகம்வா னோன்சேர்த்த காட்சித்து—மஞ்சுந்
தழைபோ மிருளன்னுன் றுக்கம்பு போன
புழைபோலுந் தாரகையின் பொற்பு. (எரு)

மாவிந்தநகரின், இராக்கால நிகழ்ச்சி.

76. தெய்வ வழிபாடு செய்வார் விருந்தோடு
நெய்வழிய வுண்பார் நெடிதாய்வா—ருய்வழிநூ
லுடகமா யாழ்பாட லுடுவார் முன்னிரவி
லாடகமா விந்தத் தவர். (எசு)

77. வண்டுறங்கப் பூணுறங்க வாய்மணத்தார் கூடியின்பங்
கொண்டுறங்க யாருந் துணத்துறங்கக்—கண்டு
தணந்தார்மே லல்போந் தணையும் விடுத்தான்
மணந்தாங்கு மம்பு மதன். (எஎ)

---

(74) விளக்கம்—தீபம். நிறைகும்பம்—நீரால் நிறைத்த குடம். துளக்கம் எயிறு—ஒள்ளியதந்தம். படாம்—சீலை. (தீபம் நிறைகுடம் பெண்கள் ஏந்துதல் மாலைக்காலத்தியல்பு).

(75) மலர்க்கணையான்—மன்மதன். கஞ்சுகம்—போர்வை. வானோன்—ஆகாயமாகிய தேவன். மஞ்சும் தழைபோம் இருள் — மேகமும் கருமைவளம் குறையும்படியான இருள். மலர்க்கணை ஐந்து :— தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம். நீலம் என்பது நீல் எனக்கடை குறைந்தது.

(76) உய் வழி நூல்—இகபரசாதன நெறியையுணர்த்தும் பக்திநூல். நாடகம் மா யாழ் பாடல்—கூத்து, சிறந்தயாழிசை, இசைப்பாடல் முதலியன. ஆடகம் மாவிந்தம்—பொன்மயமான மாவிந்தநகரம். உய் வழி நூல் நெடிது ஆய்வர் எனக்கூட்டுக.

(77) வாய்மணத்தார்—வாய்ந்த நாயகரோடுற்றவர். தணந்தார்—பிரிந்தவர். மணம் தாங்கும் அம்பு—வாசனை தங்கிய மலர்க்கணை. பூண்; இங்குத் தகுதியாய்க் காற்சிலம்பிற்குக் கொள்ளப்பட்டது.

நளாயனி, மன்மதனைக்குறித்து வேள்விசெய்தாளெனல்.

78. செய்ய பனிநீருஞ் சேரா ரமும்பூவு
நெய்யவிச மித்தாக நேரறிஞர்—தய்யலா
வாதரமார் பம்புலம்ப லக்கினிகுண் டம்மறையா
மாதயர்ந்தாள் யாக மதற்கு. (எஅ)

நளாயனி, விரகதாபத்தால் இனியதையும் இன்னாததெனல்.

79. சந்தனமோ வாரழலோ தண்ணீரோ வெந்நீரோ
நந்தனவ னத்து நறுமலரோ—கொந்தம்போ
வென்செய்தீர் பாங்கியர்கா ளெற்கு மறந்தென்றாண்
மன்செய் தவத்தாண் மறந்து. (எகூ)

சந்திரனை வெறுத்தல்.

80. தண்ணிலவு நாமந் தனைக்கொண்டு பெண்ணென்மேல்
வெண்ணெருப்பு வீசுகின்ற மெய்யில்லாய்—மண்ணின்
மதியில்லா நின்னை மதியென்று சொல்லல்
விதியில்லை யென்றாள் வெறுத்து. (அ௦)

மன்மதனை வெறுத்தல்.

81. தேவிதனைக் கொண்டு சிறைவைத்தான் றன்றனிக்கப்
பாவிவா நாளைப் படைகொண்டென்—றேவியவன்
மைந்த தமியேன்பெண் மாறுதம் பெய்தனிற்குச்
செந்தண்மை யாமோ தெளி. (அக)

---

(78) ஆரம்—சந்தனம், முத்து. அறிஞர்—அந்தணர். ஆதரம்—ஆசை. குண்டம்—யாககுண்டம். மறை—வேதமந்திரம். இச்செய்யுள் நிரை நிரை. (பனிநீர் நெய்யாகவும், ஆரம் அவியாகவும், பூ சமித்தாகவும், ஆசை அக்கினியாகவும், மார்பம் குண்டமாகவும், புலம்பல் மந்திரமாகவும், தோழியர் அந்தணராகவும் கொள்க). தய்யல்—தையல் என்பதன் போலி.

(79) நந்தனவனம்—பூந்தோட்டம். மன் செய்தவத்தாள்—பெருமையை யாக்கும் தவத்தைச்செய்த நளாயனி.

(80) மதி — மதிக்கப்படுவது, மது இ — அமிர்த கிரணத்தையுடையவன் (சந்திரன்). விதியில்லை—நியாயமில்லை. மெய் இல்லாய் என்பது, உண்மையில்லாதவனென்றும், உடல்தேய்ந்தவனென்றும்,மதியில்லா நின்னை மதியென்று சொல்லல் என்பது, புத்தியில்லாத வுன்னை மதிக்கப்படுபவனென்று சொல்லல் என்றும், அமிர்தகிரணமில்லாத வுன்னை அமிர்தகிரணமுடையனென்று சொல்லல் என்றும் இரு வகையாலும் பொருள் தரும்.

(81) தேவி—சீதாப்பிராட்டியார். சிறை வைத்தான்—இராவணன். ஏவியவன்—இராமபிரான். செம் தண்மை—செவ்விய கருணை.

### இராப்பொழுதை வெறுத்தல்.

82. இரவென்னு மேழா யெனதுளத்தான் றன்னைக்
கரந்து விடியாது காப்பாய்—விரவி
மகிழினது நீபொருய் மற்றதற்கா நின்னை
யிகழ்வுக்கே சொன்னதென்ரு ளீடு. (அஉ)

### விரகதாபத்தால் துயருறுதல்.

83. மழையொக்கு மென்றுரைப்ப மைக்கண்ணீர் சிந்தி
யிழையொக்கு நுண்ணிடையா ளெய்த்தாள்—பழையதனோர்
நீர்மை யிழந்து நினைவிழந்து சங்கிழந்து
நேர்மை யிழந்து நெகிழ்ந்து. (அ௩)

84. உறங்கு முருவெளிகண் டுற்றழுந்தத் தாவிக்
கறங்கு முளங்கணவன் காக்குந்—திறங்குறிக்குங்
கூடற் சுழிசுழித்துக் கூடலையும் பாராது
வாடற் படுமான் மருண்டு. (அச)

### கோழி கூவுதல், சூரியனை அழைப்பதுபோலுமெனல்.

85. இவ்வண்ண மந்த வெழிலாடிக் கன்னத்தா
ளெவ்வண்ணத் தாலு மிருந்துழக்கச்—செவ்வண்ணத்
தேவி மகிழவா செங்கதிரோ யென்பதுபோற்
கூவினவே கோழிக் குலம். (அ௫)

---

(82) எழாய்—அறியாமை யுடைய பெண்ணே!. விரவல்—கலத்தல். நின்னை இகழ்வுக்கே யீடு சொன்னது — இரவாகிய வுன்னை (அறிஞர்கள்) தாழ்ந்தபொருளுக்கே ஒப்பாகச்சென்னது. (தாழ்ந்த பொருளென்றது அறியாமையை).

(83) எய்த்தல்—இளைத்தல். மாமை—பொன்னிறம். நீர்மை—தன்மை. நினைவு இழத்தல்—தன்னைமறத்தல். நேர்மை—ஒழுங்கு.

(84) உருவெளி—நினைத்தஉருவம் எதிரில் தோன்றுதல். கணவன் காக்கும் திறம்—கணவன் தன்னை துன்பத்தினின்றுங் காப்பாற்றும் விதம். கூடல் சுழி — மகளிர் குறித்த நாயகனை அடையக் குறிபார்க்கும் பொருட்டு நிலத்தில் விரலால் சுழிக்கும் சுழி. மான்—நளாயனி.

(85) ஆடி — கண்ணாடி. எவ்வண்ணத்தாலும் — எகரம் வினப் பொருளொழிந்து, முற்றுப்பொருள் பெற்றது. உழக்கல்—வருந்தல். தேவி—நளாயனி. தினகரன்—பகலைச் செய்பவன்; சூரியன். பகலவன் என்பது நேரிய தமிழ்மொழி.

தீமைசெய்வார்க்கு, எத்தகைய செல்வமிருப்பினும் கனம் நிலையாததுபோல இருளின் கனம் குறைந்ததெனல்.

86. நிலத்தானுஞ் செல்வ நிறைவானு முற்ற
பலத்தானு மிக்கதுசெய் பாவக்—கலத்தார்க்கு
மன்னாது போல மதித்த கனங்குறைந்த
தின்னாது வந்த விருட்கு. (அசு)

பறவைகள் சிலம்புதல், பகல் மாதின் காற்சிலம்பொலி போலுமெனல்.

87. கருமை நிறமாறிக் கஞ்சமுகம் பூத்துத்
திருந்துங் குலமாதர் செய்கை—பொருந்தவொளிக்
காந்தன் வரப்பகன்மான் கண்டு களித்துறுங்காற்
பூந்தண்டை போன்மபுட் புலப்பு. (அஎ)

வைகறை, நீதிநெறியுணர்த்தும் ஆசிரியனைப்போலுமெனல்.

88. ஒன்று முணர்வரிய வுட்டிமிர முக்காலும்
பொன்ற வறநீதி போதிக்கு—நன்றருள்சேர்
பேர்வை யகமேத்தும் பெற்றியனே யாம்போலுஞ்
சார்வை கறையின் றகை. (அஅ)

செங்கதிர் எழுதல்.

89. பேரிகைசங் கார்ப்பப் பெருமறையோர் நீர்தூவக்
காரிகைத னுள்ளங் களிகூரத்—தேருகைத்துத்
தன்றுணைவி தாமரைக்கை தாட்பட் டெழுந்தவன்போ
லென்றணைந்தா னேமி யிடத்து. (அகூ)

---

(86) பலம்—வன்மை. மிக்கது—அடாத செய்கை. பாவக்கலம்—பாவத்திற்கு இருப்பிடம். கனம்—மேன்மை. கனம்என்பது உவமானத்தில் மேன்மையையும் உவமேயத்தில் செறிவையும் உணர்த்தும்.

(87) திருந்துங் குலமாதர் செய்கை பொருந்த—ஒழுக்கத்தால் திருந்திய குலமகளிர் (வேற்றிடஞ்சென்ற நாயகன் வரத் தம்மைப்புனைந்து எதிர்கொள்ளும்) தன்மைபோல. ஒளிக்காந்தன்—சூரியனாகிய நாயகன். பகல்மான்—பகலாகிய பெண். ஒளி — வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்துகெட்ட பெயர்.

(88) திமிரம்—இருள். முக்கால்—முக்காற்பங்கு. அறநீதி—தருமநீதி. பேர் வையகம்—பெரியவுலகம். பெற்றி—தன்மை. வைகறை—புலரி; விடியற்காலம்.

(89) காரிகை — நளாயனி. உகைத்தல் — செலுத்தல். தன் துணைவி தாமரைக்கை தாள்பட்டு—தன் நாயகியாகிய தாமரையின் கையால் கிரணமாகிய பாதங்களை வருடப்பெற்று. என்று — சூரியன்; எல்+று எனப்பிரியும். நேமி—கடல்.

சூரியோதயம், ஞானசிரியனைப்போலுமெனல்.

90. முற்றிருளும் போக முளரிப் பதிவருகை
பற்றறவே பற்றிநின்ற பக்குவர்க்கு—ஞற்றிருந்த
சந்தேகந் தீரவருந் தன்னைத் தனக்கோதச்
வந்தே சிகன்போலு மாம். (௯௰)

அறியாமையாற்றோன்றுவனவெல்லாம் அறிவினிடத்துத்
தோன்றாமைபோல, இருளிற்றோன்றின விண்மீன்கள்
இரவியொளியால் ஒழிந்தனவெனல்.

91. அஞ்ஞானத் தாலே யறியு மவையெல்லா
மெய்ஞ்ஞானத் தோற்றத்தின் மெய்யாக—விஞ்சாவாற்
போன நிலையாகப் புல்லிருளிற் றோற்றுடுக்கள்
பானு வொளிவீசப் பட்டு. (௯௧)

நளன், கோலுமண்டபமடைதல்.

92. காலை நியமக் கடன்முடித்துக் கோயிலின்மூ
வேலை முதல்வன்றான் மேவிமறைச்—சாலையையு
மம்மறையிற் சொன்ன வறம்பயிலுஞ் சாலையையுஞ்
செம்முறையிற் கண்டவையிற் சேர்ந்து. (௯௨)

93 மல்லில்லா துற்ற மலைத்தோட் டினவுகொண்டார்
சொல்லில்லா வல்வைத்துச் சூழ்ந்திருக்க—வல்லில்லாக்
காந்துமணி மண்டபத்தே காவலனுற் றான்சீய
மேந்து மணையி லினிது. (௯௩)

முனிவன், நளனிடம் வருதல்.

94. பைவேலு மொவ்வாப் பணியணிதோட் பூவையர்கண்
மைவேலு நச்சுக்கூர் வாய்தனது—கைவேலு
மோரிடத்தே தங்க வுலக முறைசெய்வான்
சாரிடத்தே சார்ந்தான் றவன். (௯௪)

(90) முற்றிருள்—முழு இருள். முளரிப்பதி—தாமரைக்கு நாயகன்; சூரியன்.

(91) மெய் ஆக விஞ்சா—இருப்புடையனவாகச் சிறப்படையமாட்டா. உடுக்கள்—விண்மீன்கள். பானு—சூரியன்.

(92) மூ வேலை—முத்தொழில். மறைச்சாலை—வேத பாடசாலை. அறம் பயிலும் சாலை-தரும நீதிகளைக் கற்கும் பள்ளி. (92, 93 இவ்விரண்டும் குளகம்).

(93) மலைத்தோள் தினவு கொண்டார்—சேனாதிபதிகள். அல் இல்லா—குற்றமற்ற. சீயம் ஏந்தும் அணை—சிம்மாசனம்.

நளனிடம் மௌத்கலியன் வந்தது, தசரதனிடம் இராமபிரானைக்
கோரி கௌசிகன் வந்ததுபோலுமெனல்.

95. மகத்துக்குக் காவல் வழங்கவினி தெல்லாச்
சகத்துக்கு நாயகனைத் தாரா—யிகத்துக்கு
மம்மைக்கு மான தயரதவென் றார்த்தவன்போன்ஞ்
செம்மைநளன் பான்முனிவன் சேர்பு. (௯௫)

முனிவன், நளனிடம் நளாயனியை வியந்துரைத்தல்.

96. செய்தவனும் யானீயோ செய்த தவத்தானு
மெய்த நினதுமக ளின்கனிவாய்—பெய்திட்ட
சொல்லி னுணர்ந்தேன் சொலத்தரமன் றென்றுனு
மில்லிசைந்தாள் வண்மை யெடுத்து. (௯௬)

நளனிடம் நளாயனி கொடுத்த அடையாளம் தரல்.

97. நோன்பி னுகர்வெல்லா நுண்ணிதிற்கற் பித்தாய்கொ
ளுன்பின் னடையு நடையுடையா—டான்பொன்
னடையாளந் தந்தாள்கா ணன்புடனென் றுன்முனிவன்
கொடையாளன் கையிற் கொடுத்து. (௯௭)

முனிவன் நளாயனியை மணஞ்செய்தளித்தியென,
நளன் ஐயுற்றுச் சிந்தித்தல்.

98. வேட்டல் புரிவாய் விரைவி னெனமுனிவன்
காட்டல் புரிந்த கணையாழி—தோட்டல்லி
வாயாள் கொடுத்திருக்கும் வாய்மையால் வாய்பேசா
தாயாசங் கொண்டா னரசு. (௯௮)

99. தன்னை யுணர்ந்தபெருந் தத்துவமெய்ஞ் ஞானியோ
கன்னி மயல்கொண்ட கைதவனோ—வென்னுமன்ன
னிக்கோலங் கண்டாழி யீந்தனளோ சம்மதித்துச்
சொக்கோதிக் கொண்டானோ சூழ்ந்து. (௯௯)

---

(94) பை வேல்—பசிய மூங்கில். வாய்—வாய்ந்த. ஓரிடத்துத்தங்க—கற்பொழுக்கங்குன்றாமையால் மாதர் கண்களும், போரின்மையால் (மன்னவன்) வேலாயுதமும், முறையே கணவர்பாலும் உறையின் பாலும் தங்கி இருக்க. உலகமுறை செய்வான்—செல்வனே உலகை யாள்பவன் (நளன்).
(95) மகம்—யாகம். நாயகன் — இராமபிரான். ஆன — தகுதியான. ஆர்த்தவன்—ஆரவாரஞ்செய்த கௌசிக முனிவன்.
(96) இல் இசைந்தாள்—மனைவியாக இசைந்த நளாயனி. வண்மை—குணம்.
(97) நோன்பின் நுகர்வு—நோன்பினால் அனுபவிக்கும் பயனாகிய ஒழுக்கம்.
(98) வேட்டல்—விவாகம். தோடு அல்லி—இதழ்களையுடைய ஆம்பல்.
(99) கைதவன்—வஞ்சகன். சொக்கு ஓதல்-மோகனமந்திரத்தை உச்சரித்தல்.

நளன், அமைச்சரோடு ஆராய்தல்.

100. இவ்வாறு பல்வே றிருந்தெண்ணி நெட்டுயிர்த்திட்
டொவ்வாமை யாலே யுருமாறிச்—செவ்வேள்போற்
சென்றானே வேறு செயலுண்டோ தேர்ந்துரைமி
னென்றா னமைச்சர்க் கிறை. (௧00)

அமைச்சர், நளாயனியை முனிவர்க்கீதல் தகுதியெனல்.

101. சங்குற்ற கந்தரத்துத் தையல் லுதயத்திற்
றங்குற்ற கோளின் றகைமையெலாம்—பொங்குற்ற
சோதிடரான் மேவுஞ் சுருதி முனிக்கீதன்
மாதிடமா மென்றார் மதித்து. (௧0௧)

நளன், நளாயனியை அழைமினெனல்.

102. முன்னோர் மொழிந்த மொழிவழியே யுள்ளம்போய்த்
தன்னோர் மகளுள்ளந் தானேரே—மன்னோர்வான்
கோங்கார் முலையாட் கொணர்மி னருகென்றா
னுங்காரு மில்லா தமைத்து. (௧0௨)

நளாயனி, தந்தையைப் பணிதல்.

103. நல்லா ரழைத்துவர நாகன்னம் போனடந்து
சில்லார் குழலின் றெரியறணே—மல்லார்ந்த
திண்டோடன் றாதை திருவடியிற் சேர்ப்பித்தாள்
பண்டோறகப் பேசு பவள். (௧0௩)

நளன், தன் மகளை நோக்கி முனிவனை மணக்க இசைந்தாயோவெனல்.

104. தாளிற் பணிந்தாசி தான்பெற்றுத் தன்னருகே
வாளிற் பொலிகண்ணாள் வந்துநிற்க—வாளில்லா
வித்தவனை வேட்டற் கிசைந்தாழி தந்தாயோ
வுத்தமிநீ யென்றா னுகந்து. (௧0௪)

---

(100) நெட்டுயிர்த்தல் — பெருமூச்சு விடுதல். ஒவ்வல் — பொருந்தல். செவ்வேள்—முருகன்.

(101) கந்தரம்—தலையைத் தாங்குவது; கழுத்து. தையல் உதயம்—நளாயனி பிறந்த காலம். தங்குற்ற — (இராசிகளில்) தங்கிய. கோளின் தகைமை—கிரகங்களின் பலன்கள். பொங்குற்றசோதிடர்—மேம்பட்ட சோதிடர். மாதிடம்—மிகநன்று. சோதிடரால் மதித்து முனிக்கீதல் மாதிடம் ஆம் என்றார் என அனுவயிக்குக.

(102) முன்னோர்-மந்திரிகள். கோங்கு ஆர் முலையாள்—கோங்கு மலரை யொத்த முலையுடையாள் (நளாயனி).

(103) நல்லார்—பெண்கள். நாகு—இளமை. சில்—பொன்வட்டத்தகடு; (ஓர்வகைத் தலையணி) தெரியல்—பூமாலை.

நளாயனி, முனிவனது பண்டை வடிவத்தைக்காணுதல்.

105. செயற்கை யிளமைத் திகழ்வன்ன தேசற்
றயிர்க்கை யளித்ததா ளுனு—மியற்கை
பொருந்தாக வாய்ப்பும் புகலெழிலு மாறு
திருந்தானைக் கண்டா ளெதிர். (கoரு)

முனிவனை மணக்கச்சம்மதமெனல்.

106. பின்னல்ல சொல்லேன் பெரிதும் பரிந்தளித்தே
னென்னப்பா மாதவற்கே யீகென்று—டன்னுெப்பில்
கண்கவருங் கட்டழகாய்க் கண்ட திவனென்றே
திண்கற் புடையா டெரிந்து. (கoசு)

நளன், மகண்மொழிகேட்டு மகிழ்தல்.

107. எண்ணறிந்தீ வேனென்ற வின்சொல்லு நன்றெனத்தன்
பெண்ணறிந்து சொன்ன பெருஞ்சொல்லு—மண்ணறிந்த
வேத முனிசொல்லு மேன்மை பெறக்களித்தான்
மாதவமென் றையன் மனத்து. (கoஎ)

அரசன், நளாயனிக்கு மணம்புரிய நல்ல ஓரைதுறித்தல்.

108. மலையரசன் கௌரி மணம்புரிவித் தென்ன
வலையரசன் பெண்மன்ற லாக—தலையரச
னரிக்கு மன்றல்செய் நாளிட் டதற்கான
பாரிக்கும் யாவும் பரிந்து. (கoஅ)

---

(104) ஆள் இல்லா—தவத்தொழிலுக்கு உதவிபுரியும் ஆள் இல்லாத. ஆழி—கணையாழி; திரண்டு வட்டமாயுள்ளது (மோதிரம்).

(105) செயற்கை இளமை திகழ்வு — (முனிவன் கன்னிமாடத்திற்குப் போகையில்) வேண்டிப்பெற்ற இளமையினதுபொலிவு. அயிர்க்கை—சந்தேகம். ஆகம்—உடல்.

(106) பின் அல்ல சொல்லேன் — (இப்போது ஒப்புக்கொண்டு) பின்னல் வேறாக மறுத்துச்சொல்லேன். கட்டழகு—பேரழகு.

(107) எண்—கருத்து. ஐயன்—நளன். எண் அறிந்து ஈவேன் என்ற இன் சொல்—46-வது செய்யுளில் நளன், கோதை கருத்துணர்ந்து அளிப்பேன் என்ற சொல். பெண் அறிந்து சொன்ன பெருஞ் சொல்—106-வது செய்யுளில் நளாயனி, மாதவற்கே யீக என்ற சொல். முனிசொல்—61-வது செய்யுளில் முனிவன், இல்லாத வில்லாகி லில்லாக வென்னுள்ளம் புல்லாது என்ற சொல்.

(108) அலையரசன் பெண் — இலக்குமி. ஆக — உவமையுருபு; போல என்பது பொருள். தலையரசன்—அரசர் தலைவனான நளன். பாரித்தல்—சேகரித்தல்.

நளன், யாவருக்கும் திருமணத்திருமுக மனுப்புதல்.

109. பொன்னி னவமணியின் பூகந் தழைகதலி
தன்னி னகர்வனையச் சாற்றித்தன்—கன்னி
திருமணங்கொ ளோலை திசைக்கெல்லா முய்த்தான்
மருமணங்கொ டாரான் வரித்து. (க0கூ)

நகரத்தார், தத்தம் இல்லங்களை அலங்கரித்தல்.

110. பூரணப்பொற் கும்பங்கள் பூரித்துப் பந்தரிட்டுத்
தோரணங்க ணட்டித் தொகுத்தணிந்தார்—தாரணிமன்
றன்மாது மன்றலுக்குத் தந்தமகார் மங்கலம்போ
னன்மா நகரார் நயந்து. (கக0)

திருமணங்காண யாவரும் மாவிந்த நகரடைதல்.

111. தேர்ந்ததவத் தாருமுயர் தேயத்து மன்னவருஞ்
சேர்ந்தவினத் தாருஞ் செறிந்தனரே—நேர்ந்த
குலம்பொலிய வந்த குமரிமணங் காண்பா
னலம்பொலிமா விந்த நகர். (ககக)

நளன், வந்தாரை வரவேற்றுபசரித்தல்.

112. நண்பர்க்கு மந்தணர்க்கு நால்வகைச் சேனைகட்கு
மெண்படா வேனையோர் யாவர்க்கும்—பண்பிற்
றருகையான் வெவ்வேறு சார்பளித்தான் முன்போய்
வருகையேற் றின்சொல் வகுத்து. (ககஉ)

மணத்துக்கு வந்தவர்கள், நகரணி கண்டும் அமிர்தம்போன்ற
விருந்துண்டும் அமரரையொத்தார்களெனல்.

113. இமிழ்திரைசேர் ஞாலத் திறைநகரின் வாய்ப்பா
னமிழ்தி னுபசரித்தூட் டன்பாற்—குமிழ்திறத்த
பூநாசி யாரும் புருடரும்வா னோரொத்தார்
தேனுசி வண்டிற் றிரிந்து. (ககங)

---

(109) பூகம்—பாக்குமரம். கதலி—வாழைமரம். வரித்தல்—எழுதுதல்.

(110) பூரித்தல்—நிறைத்தல். தொகுத்தல் — ஒழுங்காக்கல். மகார்—மக்கள். மாநகரார்—மாவிந்த நகரக்குடிகள்.

(112) நால்வகைச் சேனை:—தேர், யானை, குதிரை, காலாள். எண்படா—எண்ணலளவைக்குட்படாத. பண்பில்—தகுதியாக. தருகையான்—தருகின்ற கையையுடையவன், கற்பகத்தருபோன்ற கையையுடையவன் (நளன்). சார்பு—விடுதி ; தொழிலாகுபெயர்.

மண்ணுலகத்துள்ள எல்லா தேசத்தாரும், விண்ணுலகத்தாரும் மணவணி காண வந்தாரெனல்.

114. ஈரொன்பான் பாடையுடை யெண்ணே ழெனுந்தேயத்
தாரன்பா னெல்லாருந் தாமணைந்தார்—பாரின்பா
னூடாதா ராரும்பர் நாயகனோ டுற்றார்க
ணீடாகா யத்து நிறைந்து. (கககச)

நளாயனி, மாங்கலிய பூசை செய்தல்.

115. தாக்கணங் கன்ன தகைசே ரரிவையரின்
மாக்கணங்கள் பாலிகைகண் மல்குவித்தார்—பூக்கணங்க
டாங்கலிய லோதி தகுந்தவர்தாள் பூண்டிழைத்தாண்
மாங்கலிய பூசை மகிழ்ந்து. (கககரு)

பாங்கியர்கள், நளாயனிக்கு மஞ்சனமாட்டுதல்.

116. முன்னேர் முரச மொழிந்த முதனாளிற்
றன்னேரில் சானவிமுற் றண்புனலிற்—பொன்னேய்ந்த
மஞ்சண் மணம்பூசி மஞ்சனநீர் வார்த்தனர்நா
கஞ்சநடை யன்னா ரவட்கு. (கககசா)

மணக்கோலம் புனைதல்.

117. பொன்னா விடைசெறித்த பூம்பட் டணிந்தார
மின்னார் முகிழுருவு மேருமுலைக்—கின்னாதைத்
தேர்கொண்டான் விற்றுவசஞ் செஞ்சாந் தினிற்றீட்டி
வார்கொண் டளகம் வனைந்து. (கககஎ)

---

(113) இமிழ்த்தல்—ஒலித்தல். வாய்ப்பு—மாட்சிமை. குமிழ் திறத்த பூநாசியார்—குமிழம்பூவையொத்த அழகிய மூக்குடைய பெண்கள். வானோரொத்தார்—(அமுதம்போன்ற உண்டியாலும், ஆடல் பாடல் முதலியன கண்டுங் கேட்டுங் களிப்பதினாலும், அரிய காட்சிகளை இமையாது பார்க்குந்தன்மையினாலும், மாவிந்தநகாம் பொன்னகாம் போன்றதாலும்) தேவரையொத்திருந்தனர். ஆசித்தல்—விரும்பல்.

(114) நாயகன்—இந்திரன். பாடை; பாஷை என்னும் வடமொழிச்சிதைவு.

(115) தாக்கணங்கு—இலக்குமி. பூக் கணங்கள் தாங்கு அல் இயல் ஓதி—மலர்களைத்தாங்கிய இருள்போலுங்கறுத்த கூந்தலையுடையநளாயனி. தகுந்தவர்—மாங்கலிய பூசைக்குரிய சுமங்கலிகள்.

(116) முதல்நாள்—முகூர்த்தநாள். சானவி — கங்கை ; சன்னுமுனிவன் பருகி வெளிவிட்டதால் அப்பெயர்பெற்றது. அஞ்சம்—அன்னம்.

(117) பொன் நூல் — பொன்னாலாகிய நூல் (சரிகை). ஆரம் — முத்து. ஊதைத் தேர் கொண்டான்—தென்றலைத் தேராகவுடைய மன்மதன். துவசம்—கொடி. வார் — கச்சு (117, 118, 119 இம்மூன்றும் குளகம்).

118. தொங்க லளகப்பூண் டோடாரங் கந்தரப்பூண்
டங்க வளைகடகந் தாளணிக—டுங்க
மணிமே கலையணியு மற்றுள்ள யாவு
மணிமே லணியா வணிந்து. (ககஅ)

119. பொற்பொடிகொண் டப்பிப் புனைமதிக்குப் பொட்டிட்டுச்
சொற்பரவித் தெய்வந் துணைகாக்கச்—சிற்பருந்தாங்
கற்றில்லை யென்னுங் கவினுடையாட் கையயினி
சுற்றி வலஞ்செய்தார் சூழ்ந்து. (ககக)

பாங்கியர்கள், நளாயனியின் அழகுமறைய ஆபரணம்
புனைந்தார்களெனல்.

120. கண்ணூ றணுகாது காக்கவோ கண்டோர்க
ளுண்ணூறு மென்றோ வுயிர்ச்சகிகள்—விண்ணூரு
மின்னனையா டன்னை விரும்பி வனைந்தார்கள்
பொன்னணியாற் கட்டழகைப் போர்த்து. (கஉ0)

மௌத்கலியர், மஞ்சனமாடி மணக்கோலம் புனைதல்.

121. வாழ்க்கைத் துணைவரொடு வந்தமுனி புங்கவர்க
டாழ்க்கை யிலாப்பிரம சாரிக்கு—வீழ்க்கையுட
ளுங்குமண மஞ்சனநன் காட்டி யணிசெய்தா
ரோங்குமணக் கோல முற. (கஉக)

நளன், வரபூசை செய்து முனிவனை அழைத்துவரல்.

122. பல்லியங்க ளார்ப்பப் படிமன்னர் சூழமனை
மெல்லியலோ டுற்றணிந்து மெய்த்தவனைச்—சில்லியமை
கொய்வயத்தே ரேற்றிக் கொணர்ந்தா னிடதர்கோன்
றெய்வ வரன்பூசை செய்து. (கஉஉ)

---

(118) தொங்கல்—பூமாலை. அளகப்பூண்—கூந்தலில் அணியும் ஆபரணம். தோடு—காதணி. ஆரம்—முத்துமாலை. கந்தரப்பூண்—கழுத்தணி.

(119) அப்புதல்—பூசுதல். பரவல் — துதித்தல். ஐ அயினி — ஐந்து வண்ணச்சோறு. மதி என்பது ஈண்டு நெற்றியை யுணர்த்திற்று.

(120) கண்ணூறு—கண்ணெச்சல். கண்டோர்கள் உள் நூறும் என்றோ—கண்டோர்களது மனமானது கெடும் என்று கருதியோ.

(121) வாழ்க்கைத்துணைவர்—மனைவிகள். தாழ்க்கை—தாழ்தல். பிரமம்—வேதம். பிரமசாரி—வேதத்தின்படி நடப்பவன் (மௌத்கலியன்). வீழ்க்கை—விருப்பம். ஆங்கு—நளாயனிக்குச் செய்தமுறை. மணம்—முன்னையதுவாசனை, பின்னையது விவாகம்.

(122) பல் இயம் — பற்பல வாத்தியங்கள். மனை மெல்லியல் — மனைவி (தமயந்தி). அணிந்து — முனிவனை அலங்கரித்து. சில்லி—தேருருளை. கொய் வயம்—கத்தரித்த புறமயிரையுடைய குதிரை.

நளாயனி, முனிவனேடு கன்னியூசலாடல்.

123. வலம்புரிகள் பம்ப மகளிரிசை பாடப்
பொலம்புரிமா லைத்தோளிற் பூட்டி—நலம்புரித
லுன்னித் தவம்புரியு முத்தமனே டாடினள்பூங்
கன்னிப்பொன் னூசற் கலந்து. (கஉங)

முனிவன், மணமண்டபமடைதல்.

124. கதிரொளிபோற் றீபங் கலசங்கைக் கொண்டு
முதிரொளிசேர் முத்திழையார் மொய்த்தா—ரெதிரொளிரப்
பூப்பிள்ளை யன்னமுனி பொன்னா சனத்தமர்ந்தான்
மாப்பிள்ளைக் கோலமாய் வந்து. (கஉச)

நளாயனி, முனிவன் பாங்கர் அமர்தல்.

125. மங்கலப் பாடகர்கள் வாழ்த்த முரசொலிப்பச்
செங்கமலப் பூவதனச் செப்புமுலை—யங்கலைசேர்
தந்தமர்ந்த நுண்ணிடையா டையலர்க டாங்கிவர
வந்தமர்ந்தா டக்கோன் மருங்கு. (கஉரு)

முனிவனும், நளாயனியும் காப்பு நாண் தரித்தல்.

126. நாட்டுதற்குப் போலு நறுங்கற்பை யஃதளந்து
காட்டுதற்குப் போலுங் களிவண்டு—வேட்டுழலு
மட்டினார் கோதையு மாதவனும் வேட்டற்குக்
கட்டினார் கைக்கங் கணம். (கஉசா)

வேதமுனிவர், தீவளர்த்து மணவினை செய்தல்.

127. மண்டுமெரி மூன்றும் வகுக்குந் துறையாளர்
தண்டுலநெய் கும்பந் தருப்பைமுதற்—கொண்டுளூற்றித்
தேவ ரமரமறை செப்பிவிதி செய்தார்க
டீவலங்கொண் டோங்கச் செழித்து. (கஉஎ)

---

(123) பொலம் புரி மாலை—பொற்றகடுகளை இடையிடை செறித்த பூமாலை. கன்னியூசல்—விவாகத்திற்கு முன் மணமகளும், மணமகனும் ஊஞ்ச லாடுவது (இஃதோர் விவாகச்சடங்கு).

(124) முத்து இழையார்—முத்தணி அணிந்த மகளிர். மொய்த்தார் எதிர் ஒளிர—எதிரில் சூழ்ந்து விளங்க. பூப்பிள்ளை—தாமரையிற்றோன்றிய பிரமன்.

(125) வதனம்—முகம். கலை—சீலை, மேகலை. தந்து அமர்ந்த—நூலைப் போலும் அமைந்த.

(126) வேட்டல்—முன்னையது, விருப்பம் பின்னையது, மணம். மட்டு—தேன். மணத்துக்காகக் கட்டிய கங்கணம், நளாயனி கற்பை நிலை நாட்டுகிறேன் என்று கங்கணம் கட்டிக்கொண்டது போலும், முனிவன் அக்கற்பை, அளந்து காட்டுகிறேன் என்று கங்கணம் கட்டிக்கொண்டதுபோலுமாம்.

நளனது கொடைச்சிறப்பு.

128. உடையா னவனி யுயர்ந்தோர்க்கீந் தன்ன
நடையாளைக் கோவிந்தான் ஞானிக்—கிடையா
தடையாத லாக்க மவர்க்காமீ தன்றோ
கொடையாளர் கொண்ட குணம். (கஉ௮)

நளன், முனிவனுக்கு நளாயனியைத் தாரைவார்த்துக்கொடுத்தல்.

129. சொற்கினிய ணற்குணத்தா டுயா ளயர்வில்லா
ளிற்கினிய ளென்மா னிருந்தவத்தோய்—பொற்கமலை
மால்போல மன்னுகென்று வார்புனலோ டீந்தான்கை
வேல்போலு நோக்காளை வேந்து. (கஉ௯)

முனிவன், நளாயனிக்கு மங்கல நாண் தரித்தல்.

130. அந்தணர்கண் மந்திரமு மாய்தவத்தோ ராசிகளும்
வந்தனைசெய் மன்னர் வழுத்துதலுந்—துந்துபியும்
பாட்டினார்ப் பும்பம்பப் பாசிழைக்கு மங்கலப்பூண்
சூட்டினன் மாமுனிவன் சூழ்ந்து. (க௩௦)

131. தேவர்கள் பூவின் மழைபொழியச் சேயிழையார்
மேவுசுப சோபனங்கள் வேட்டிசைப்பப்—பாவைமுனி
பொன்னாண் டரிக்கப் பொலிந்திருந்தா டாம்பூலந்
தன்னுண் மலர்க்கை தரித்து. (க௩க)

திருமணத்தை யாவரும் கண்டு களித்தார்களெனல்.

132. பொன்மலரும் வாசப் பொடிவகையுஞ் சந்தனமு
மன்மலர்ப்பூங் கோதையர்க ளார்த்திரைப்பச்—சொன்மலரு
நாவலர்கள் பாட நயந்த திருமணத்தை
யாவருங்கண் டார்க ளினிது. (க௩உ)

---

(127) எரி மூன்று :— காருகபத்தியம், தக்கணாக்கினியம், ஆகவனீயம். தண்டுலம்—அரிசி. உஞற்றல்—இயற்றல். தேவர் அமரா—தேவர்கள் எழுந்தருள. மறை—மந்திரம்.

(128) உடை ஆன் அவனி—உடை, பசு, பூமி. இடையாது — நீங்காது. அடை ஆதல்—அடைதல். (தங்கி இருத்தல்). ஆக்கம் — மேன் மேலுயர்தல். ஈதன்றோ என்பது, கொடையாளனான நளன், தன் மகளை முனிவனுக்குக் கொடுக்குமுன் அளவற்ற பொருளை உயர்ந் தோர்க்கீந்ததை. கொடையாளர் கொண்ட குணம்—வள்ளற்றன்மை.

(129) என்மான்—எனது மகள். கமலை-இலக்குமி. மன்னுக-நிலைபெறுக.

(130) பாசிழை—பசிய ஆபரணத்தையணிந்த நளாயனி. ஆர்ப்பு — ஒலி. பம்பல்—நிறைதல். சூழ்ந்து—தகுதியறிந்து.

(131) பொன் நாண்-திருமாங்கலிய சூத்திரம். நாள் மலர்-அன்றலர்ந்தமலர்.

(132) அல் மலர்ப் பூம் கோதையர்கள்—மலரணிந்த இருள்போலுங் கறுத்த அழகிய கூந்தலார். நயத்தல்—சிறத்தல்.

ஒத்த அன்புடையார் மணமே, திருமணமெனல்.

133. நற்பூ மணங்கொண்ட நாரியரைக் கைப்பற்றல்
சொற்பூ மணமோ துணையுள்ளத்—திற்பூக்கப்
பெற்ற மணத்தன்பு பேரா திசைந்துநிற்கு
மற்றதுவே யன்றோ மணம். (௧௩௩)

தீவலஞ்செய்தல்.

134. வேத விதியின் விவாக வினையாவு
மாதவனுண் டாற்றி வனவளைக்—காதணங்கின்
சேவலர்க்கைக் கொண்டு செழுநெற் பொரியிட்டான்
றீவலஞ்செய் தாகுதிகள் சேர்த்து. (௧௩௪)

அம்மிமிதிப்பித்தல்.

135. மனமொழியிற் சோர்வில்லாள் வானவர்கோன் வஞ்சத்
தினமொழியக் கல்லா யிருந்தாள்—பனிமொழியாய்
தீங்குணரா துற்றுடலாற் செய்பிழைதே ரென்றம்மி
யாங்குமிதிப் பித்தா னவன். (௧௩௫)

அருந்ததிகாட்டுதல்.

136. முக்கரணத் தாலு மொழிநற் குணத்தாலுந்
தக்கவெவ்வாற் றானுந் தகைசான்ற—மிக்க
மதிப்பி னருந்ததியாம் வான்மீனைக் காட்டிக்
துதிப்பித்தான் றாயோன் றுதித்து. (௧௩௬)

மணத்துக்கு வந்த யாவரும், நளனிடத்தில் விடைபெற்றுத்
தத்தம்மூருக்குச் சென்றார்களெனல்.

137. நங்கை திருமன்ற னன்று நடந்ததற்பின்
மங்கையரு மன்னவரு மற்றெவருந்—தங்கையி
னேவலரோ டேகினா ரின்பிற் றமதூர்க்குக்
கோவரசை வேண்டிவிடை கொண்டு. (௧௩௭)

மணம்புரிகாதை முற்றிற்று.

---

(133) நல் பூ — இனியமலர். மணம் — வாசனைச்சார்தம். சொல் பூ மணமோ—சொல்லுகின்ற அழகிய மணமாகுமோ. துணை உள்ளத்தில் பூக்கப்பெற்ற மணத்து அன்பு — நாயக நாயகிகள் இருவாது மனத்தில் தோன்றிய வேறுபாடற்ற அன்பு. சொல் பூ என்பது வினைத்தொகையாயினும் எதுகை நோக்கித்திரிந்தது.

(134) சே அலர்—சிவந்த மலர்.

(135) இனம் ஒழிய — தன்சுற்றத்தார் தன்னைவிட்டொழிய. கல்லா யிருந்தாள் — அகலிகை. உடலால் செய்பிழைதேர் என்பது, உடலாலாகும் பிழையைச் சிறிதென்பான்.

(136) முக்கரணம்:—மனம், மொழி, மெய். தகை சான்ற—தகுதிநிறைந்த. வான்மீன்—கணவன் பணியிற்சிறந்த அருந்ததியாகிய நட்சத்திரம்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## கான்புகுகாதை.

### திருமால் துதி.

தஞ்சமென வீடணனுந் தக்கோ னடைந்ததுவுங்
கொஞ்சமென மூவடிமண் கொண்டங் களந்ததுவும்
விஞ்சச் சிலையை விளங்கிழையாச் செய்ததுவும்
வஞ்சச் சகட மடிய வுதைத்ததுவு
நஞ்சமரு நாகத் தலையி னடித்ததுவுங்
கஞ்ச வணங்கோடு காட்டிற் றிரிந்ததுவு
மஞ்சம் படையா னடி.

### முனிவன், கான்புக நளனிடம் விடைபெற்றனெனல்.

138. தான்கொண்ட தாரந் தனைப்பெற்றுக் கொண்டளித்த
வேன்கொண்ட செம்மல் விடைகொண்டான்—மான்கொண்
மலையானைப் பெண்ணை மணந்தநக வெள்ளித்
தலையானை யொத்த தவன். (௧)

### நளாயனி, தன் நாயகன் குறிப்புணர்ந்து உடன் செல்ல வந்து நிற்றல்.

139. கணவனழை யாமுன் கருத்துணர்ந்து பெற்றோர்
மணவலர்கொள் பாதம் வணங்கி—யுணர்வகலாக்
காதலன்றன் செய்ய கரம்பற்றி வஞ்சிநின்று
ளீதன்றோ நல்லார்க் கெழில். (௨)

---

(துதி) கொண்டு—மாவலிபால் யாசித்துக்கொண்டு. சிலை—கல். விளங்கிழை—அகலியை. சகடம்—சகடமாய்க் கொல்ல வந்த ஓர் அசுரன். நாகம்—காளிங்கனென்னும் பாம்பு. கஞ்ச அணங்கு—செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் தெய்வமாகிய சீதை. அஞ்சு அம் படையான்—அழகிய சங்கு, சக்கரம், வாள், கதை, கோதண்டம் ஆகிய பஞ்சாயுதங்களை யுடைய திருமால்.

(138) வேன்—பெருமை. செம்மல்—நளன். மலையான் ஐ பெண்—மலையரயன் பெற்ற அழகிய பார்வதி. நக வெள்ளித்தலையான்—வெள்ளி மலையின்கண் எழுந்தருளிய சிவன்.

(139) வஞ்சி—வஞ்சிக்கொடிபோன்ற இடையினையுடையாள் (நளாயனி).

மகளின் பிரிவாற்றாமையால் தமயந்தி வருந்துதல்.

140. வழிவிடுவான் மன்னன் மதிவலரோ டெய்தி
யிழிவி லருளோ டிருக்க—மொழிவிளம்பிப்
பல்காற் றழீஇப் பயந்தா ளுருகினாள்
சில்கா ழிடையகலற் றேர்ந்து. (௩)

தமயந்தி வருந்தியதைக்கண்டு முனிவன், தனித்து வனம்புகப் புறப்படல்.

141. மனுப்பழகு நீதி மதிப்பழகுந் தொங்கற்
றனுப்பழகுங் கையாய் தனையை—யனுப்ப
மனமில்லை போலு மனைக்கிழத்திக் கென்று
முனமில்லை விட்டான் முனி. (௪)

நளாயனி பின்தொடரச்சென்ற முனிவனுக்கு, அரசனும் அரசியும் இதம் கூறல்.

142. முனிநிழலே யென்னவொளிர் முத்த முறுவ
னனிபிடியு நாண நடக்கப்—பனிப்பினராய்ப்
பின்னேகிப் பெற்றோர் பிரிவெண்ண லுற்றதென்றார்
பன்னேய வாய்மை பகர்ந்து. (௫)

நளாயனியின் கருத்தறிய முனிவன், வனவாழ்க்கை நின்றால் தாங்கமுடியாது தாயகத்திருவெனல்.

143. அடுத்தமைய யான்வருவே னாளிவாழ் கானின்
மடுத்தமையாய் காய்கிழங்குன் மாதா—கொடுத்தமைந்த
சீதனங்க ளித்தனையுஞ் சேர்ப்பிக்க வில்லுமில்லை
சாதனநில் லென்றான் றடுத்து. (௬)

---

(140) இழிவு இல் அருள்—குறைவற்ற கருணை. தழீஇ—தழுவி. பயந்தாள்—பெற்றவள் (தமயந்தி). சில் காழ் இடை—ஒலிக்கும் எண் மணிக்கோவையையணிந்த இடையையுடையாள் (நளாயனி).

(141) மனு—மனு நூல். தொங்கல்—குடை. தனு—வில். தனையை—மகளை. தனையை; இரண்டாம் வேற்றுமைத்தொகை. முனம்—விரைவு. இல்—வீடு.

(142) முத்த முறுவல் — முத்துப் போன்ற பல்வரிசைகளையுடையாள் (நளாயனி). உற்றது — யாவர்க்கும் இயல்பானது. பனிப்பு — அச்சம்.

(143) அடுத்து அமைய—அடுத்தடுத்து உன்னோடு இருக்க. மடுத்து அமையாய்—உண்டு சகிக்கமாட்டாய். சாது அனம்—சாந்தமுள்ள அன்னம் போன்ற நளாயனி.

நளாயனி, கணவனுக்குப்பணி செய்தலே
எல்லா இன்பமுமாமெனல்.

144. உடுக்கை யிருக்கை யுடற்கணிகை யீகை
படுக்கையே ரின்பம் பலவுந்—தொடுக்கையாற்
காம்பணியா வுஞ்செய் தகலாது சொற்கேட்டுத்
தாம்பணிவ தேயென்று டாள். (எ)

முனிவன், மீண்டும் வனவாழ்க்கையால் உன்னுடல் வாடும்;
என் சொற்படி யீண்டிருத்தியெனல்.

145. மடவரலே நன்றுற்ற வாசகமே சொற்றாய்
கடவரையி னீவசித்தாற் றங்கத்—திடவுடலம்
வாடிவிடு நான்சகியேன் வாய்மொழிகள் ளற்கில்லை
நாடிவிடு வாயிந் நசை. (அ)

நளாயனி, "என்னை அழைத்துச்செல்லுதல் தங்கள்
கடமை தங்கள் சொற்கடவாமை எனது கடமை" யெனல்.

146. பத்தாவுக் கான பணிசெய்யாப் பாழுடல
மெத்தாலும் பூவி லிருக்தென்னின்—சொத்தான
வெற்குரிமை யாதேவ வின்றி யழைத்தேக
னிற்குரிமை யாமென்று ணின்று. (கூ)

முனிவன், கேட்டு மகிழ்ந்து ஆடையணிகளை ஒழித்து
மாவுரியுடுத்து வருவாயெனல்.

147. குமுதம்வாய் விண்ட கொழுந்தேற லன்ன
வமுதவாய்ச் சொற்கா தருந்தி—விமலன்
மறுவார்த்தை சொல்லாது மற்றெவையுந் தள்ளி
யுறுவாய்மா னென்று ணேர்ந்து. (௧0)

---

(144) உடுக்கை—உடை. இருக்கை—வசிக்கும் மாடமாளிகை. அணிகை—ஆபரணம். ஈகை—பொன். தொடு கையான்—கைதொட்டகணவன். தொடுக்கையான் என எதுகை நோக்கி வலிமிக்கது. (தாள்பணிவதே பலவும் என்றாள் என்று அனு வயித்துப் பொருள்கொள்க).

(145) இந்நசை—என்னுடன் வருவதாக எண்ணும் இந்த ஆசையை. நசை; இரண்டாம் வேற்றுமைத்தொகை.

(146) சொத்து—உடைமை. ஏவல் இன்றி—தாங்கள் ஏவினதைச் செய்த லின்றி.

(147) சொல் காது அருந்தி — சொல்லாகிய தேனை செவியாற் பருகி. விமலன்—முனிவன். மற்றெவையும் என்பது, 148-வது செய்யுளிற் கூறப்படுவது.

நளாயனி, மரவுரி புனைந்து கணவனோடு செல்லுதல்.

148. காண்டற் கினிய கனக வுடைபட்டும்
பூண்ட மணியிழையும் போகட்டு—மாண்ட
மரவுரிய ணிந்து மகிழ்நனொடு சென்றாள்
வரவுரிய ளான மகள். (௧௧)

நளாயனி முனிவனோடு வனஞ்செல்லக்கண்ட நகர மாந்தர்,
அன்பினால் தத்தமக்குள் தோன்றியவாறு இரங்கிக்கூறுதல்.

149. கானடையாக் கொண்ட கணவனுடன் போவாளைத்
தானடையச் சீரை தரித்தாளை—மானனைந்த
நோக்கினரு மாடவரு நோக்கிப் பலமொழிந்தார்
மாக்கிருபை யோடு மலைந்து. (௧௨)

அரசனை வெறுத்துரைத்தல்.

150. அங்கசனை யொத்த வரசர்கள் காத்திருக்கப்
பங்கசமு கத்தாளைப் பாவமெனோ—வெங்கனல்சேர்
காட்டு மனிதனுக்குக் கட்டிக் கொடுத்ததென்பார்
கோட்டுக் களியானைக் கோன். (௧௩)

முனிவனை வெறுத்துரைத்தல்.

151. தனியாத் தவம்புரியுஞ் சாமிகட்கே னிந்த
வணியாய மென்ப றடுத்து—முனியாவன்
மூப்பென்ன வாசை முதிர்ந்த திவற்கென்பார்
தீப்பென்னக் கண்கள் சிவந்து. (௧௪)

நளாயனியை வெறுத்துரைத்தல்.

152. மன்னுதி மன்னற்கு மங்கை யொருத்திநீ
யென்னுதி யென்னினைந்தா யென்னம்மே—பொன்னுதி
நோக்கிலையோ தீக்கா னுழைகுதியோ நீதடுக்க
வாக்கிலையோ வோவென்றார் வந்து. (௧௫)

---

(148) போகட்டு—போட்டுவிட்டு. மாண்ட—மாட்சிமைதங்கிய. மகிழ்நன்—கணவன். வரவுரிய—(வரம் உரிய) வரத்திற்குறிய என்றும், வருவதற்குரிய என்றும் பொருள்படும்.

(149) அடைய—முழுவதும். சீரை—மரவுரி.

(150) காட்டு மனிதன்—காட்டில் வசிக்கும் முனிவன். கட்டிக்கொடுத்தல்—விவாகஞ்செய்துகொடுத்தல். (இது உலக வழக்கச்சொல்).

(151) மூப்பு என்ன—வயது முதிர்ந்ததுபோலவே. தீப்பு—நெருப்பு.

(152) வாக்கு—வாய். ஓ என்பது கழிவிரக்கப்பொருளது.

தமயந்தியையும் மந்திரிகளேயும் வெறுத்துரைத்தல்.

153. தாய்தடுத்தா லாகாதோ வென்பார் தனையின்னே
போய்தடுப்பா ராரென்பார் பொன்வாங்கும்—வாய்தடித்த
மந்திரிகண் மற்றெதற்கு வாய்ந்த தழகென்பார்
சுந்தரியை யெண்ணியெண்ணிச் சோர்ந்து. (௧௬)

இன்பநுகரும் பருவத்தில் தவவேடம்பூண்டேகுதியோவெனல்.

154. கண்ணுக் கினிய கணவனை வேட்டுத்தன்
னெண்ணுக் கினியனவா யின்பமிக—நண்ணுற்றுச்
செம்மாந் திருக்குநாட் சீரையுடுத் தேகுதியோ
வம்மா வெனவழுதா ரார்த்து. (௧௭)

அறுசுவையுணவை வெறுத்தாயோ, காய்கனி கிழங்கிலைகளை உண்ணுவாயோவெனல்.

155. காட்டிற் றிரிவாயோ கஞ்சக்கா னேவாதோ
கோட்டின் றழைபழங்காய் கொள்வாயோ—நாட்டி
னறுசுவையா முண்டி யகற்றினையோ செந்தே
னுறுசுவையே யென்றார்க ளுற்று. (௧௮)

கொடிய வன விலங்குகளும் அம்மையார்க்குத் துணை நின்று காக்குமெனல்.

156. புல்லிற் படுப்பாள் புலியினங்கட் கென்செய்வாண்
மெல்லியலைக் கண்டக்கான் மேவுமவை— கொல்லியல்சேர்
துட்டக் குணமொழிந்து தூய்தாய்த் துணைகாக்குங்
கட்டமிலை யென்றார் களித்து. (௧௯)

கான்புகுதல், நளாயனிக்கே விருப்பமாயிருக்கையில் நாமென்ன செய்வதெனல்.

157. தார்வேந்தற் காய்வில்லை தாய்க்கு மகிழ்வில்லை
யோர்வேதத் தாற்கிரக்க மோவில்லை—சீர்வேய்ந்த
தய்யல் கமலமுகஞ் சற்றேனும் வாட்டமில்லை
செய்யலில்லை யென்றார் சிலர். (௨௦)

---

(153) வாய்தடித்த—வீண் வார்த்தைகளைப்பேசி நாத்தடிப்பேறிய. போய் + தடுப்பார்: எதுகை நோக்கி வலிமிகுந்திலது.
(155) கோடு — மரக்கொம்பு. செம் தேன் உறு சுவையே — செவ்விய தேனின் மிக்க இன் சொல்லுடையவளே!
(156) கட்டம்—கஷ்டம். (இச்செய்யுள் வினாவிடை).
(157) வேந்தன் — நளன். தாய்க்கு மகிழ்வு — பெற்ற தாயாருக்கு மகன் விவாகத்தைவிட மகள் விவாகத்தில் உண்டாகும் மிகுமகிழ்ச்சி. ஓர்தல்—கற்றல். தய்யல்—நளாயனி (தய்யல் என்பது போலி). செய்யல்—நாம் செய்வது.

சில அறிஞர்கள், நம்மன்னன் மகளுக்கு நன்மையுண்டாதகவெனல்.

158. விதமுணரா திங்ஙன் விளம்பன்மி னாய்ந்
நிதமுணரா னேநம் மிறைவ—னிதமுணர்வா
னல்லனவுஞ் செய்யா னறிது மிவையென்பார்
நல்லனவே யாக நவின்று. (உக)

நளாயனி, அன்பினால் பின்றெடர்ந்த பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்சொற்கூறி நிறுத்தித் தன் கணவனுடன் செல்லுதல்.

159. பொன்னாடு பின்னாகும் பூநா டுடையானு
மன்னா டுறைவாரு மன்பிற்றன்—பின்னாடற்
கண்டுகந்தன் னார்மீளக் கட்டுரைத்துச் சென்றாடேன்
வண்டுகந்து நாடும் வனம். (உஉ)

முனிவன், நளாயனிக்கு வழியில் எதிர்ப்பட்ட மருதநில வளங்காட்டுதல்.

160. செந்தா மரைவதனஞ் செங்குமுதம் வாய்விழிச்சேல்
கொந்தார் குழல்பாசி கோல்வளைவெண்—ணந்தாகுந்
தண்மருத மங்கை தனமன்ன நெற்குவைகா
ணுண்மருங்கு லிந்து நுதால். (உ௩)

முல்லைநில வளங்காட்டுதல்.

161. குடமடியாக் கூட்டக்காண் கோபால ருதக்
கிடமடியா மள்ளரினச் செய்ய—வடமடியார்
செஞ்சாலி கொய்யாது தீங்குழலின் பாணறிந்து
நெஞ்சாலித் தாட னெடிது. (உச)

---

(158) நிதம்—நித்தியப் பொருள்; இறை. உணர்வான்—அங்கை நெல்லிக் கனிபோல அபரோட்ச (காட்சி) உணர்வுடைய முனிவன்.

(159) பொன்னாடு — உம்பருலகு. பூ நாடு உடையான் — அழகிய நிடத நாடுடையான் (நளன்). அன்னார் — பெற்றோரும் மற்றோரும். உகந்து மீள—மகிழ்ந்து (விடைதந்து) செல்ல. கட்டுரைத்து—(நாயகனோடுறைவதே இன்பமும் கடமையுமாமெனத்) தேருதல் சொல்லி.

(160) கொந்து—பூங்கொத்து. குழல்—கூந்தல். பாசி—நீரிலுள்ள கொடிப் பாசி. நந்து—சங்கு. இந்து—சந்திரன். நுதால் — நெற்றியை யுடையவளே! (நளாயனி). உலக மக்கட்குத் தாய்போல் ஊட்டுந் தன்மையாலும் உருவத்தினாலும் நெல்குவையல், மருத நிலமாதின் தனமெனப்பட்டது.

(161) குடம் மடி ஆ—குடம்போன்ற மடியையுடைய பசு. திடம் மடியா— கற்புவலி குன்றாத. வடம் மடியார் — ஆலிலைபோன்ற வயிற்றை யுடையார். பாண் — பண்ணிசை. நெஞ்சு ஆலித்தல் — மனம் களித்தல். (ஆடல் காண் எனக்கூட்டுக).

குறிஞ்சிநில வளங்காட்டுதல்.

162. காவற் றினைப்புனத்துக் கன்னியர்புள் ளோச்சாது
சேவற் கொடியோனைச் சிந்தித்து—மேவுந்தங்
நாடுங் குலதெய்வ நங்கை யெனவவன்சீர்
பாடுங் குறிப்புணர்ந்து பார். (உரு)

அம்மையார்க்குக், காட்டிலுள்ள கற்களும் முட்களும் மலர்போல் மெத்தென்றிருந்ததெனல்.

163. சதிமேலார்க் கெத்தாலுங் கவ்வையிலை போலும்
பதிமேலா மன்பாற் பரன்முட்—சதியேவத்
தைத்த றெரிந்திலதோ தாமினிது பெற்றனவோ
வைத்த மலர்த்தாள் வளம். (உசு)

முனிவன், மானைக்கண்டு நளாயனியின் கண்களையும் அம்மையார், பிடிதொடரும் களிற்றியானையைக்கண்டு தன் கணவனையும் நினைந்தாரெனல்.

164. உழையினத்தைக் கண்டவ் வுயர்ந்தோ னணங்கின்
மழையினக்க ணெஞ்சின் மதித்தான்—பிழையினத்தாள்
கூந்தற் பிடிதொடருங் குஞ்சரத்தைப் பார்த்துத்தன்
காந்தனைசிந் தித்தாள் களித்து. (உஎ)

முனிவன், தடாகத்தில் திரைகளோடு செந்தாமரை மலர்கள் அசைவது, வனமாகிய பெண் ஆலத்தி சுற்றல்போலுமெனல்.

165. பொய்கைத் திரைகளொடு பூந்தா மரையசையுஞ்
செய்கை புதுமணத்துச் சேயிழைநின்—னுய்கைக்கு
வேட்டு வனமென்னு மெல்லியனீ ராஞ்சனங்கை
காட்டுவது போலாதுங் காண். (உஅ)

---

(162) மேவும் — (சேவல் கொடியையுடைய முருகனை முன் நாயகனுதப்) பெற்ற. நாடும்—யாவராலும் கொண்டாடும். தம் குல தெய்வ நங்கை — தங்கள் வேட்டுவக்குலத்தில் வந்த தெய்வமாகிய வள்ளியம்மை. ஈண்டுக் குறிப்பு என்பது இச்சிறுமிகளும் அங்ஙனம் முருகனைப்பதியாக அடைய எண்ணினர்போலுமெனுங்குறிப்பை.

(163) சதிமேலார்—ஜீவன்முத்தர். கவ்வை—துன்பம். சதி—கற்புடையாள். தாம்—பருக்கைக் கற்களும் முட்களுமாகியவை.

(164) உழை—மான். மழை—குளிர்ச்சி. பிழை இல் நத்து — பழுதற்ற சங்குவளையல். சிந்தித்தல்—நினைத்தல்.

(165) பொய்கை—தடாகம். செய்கை—விதம். உய்கை—வாழ்வு.

சோலையாகிய பெண், வரிசைதாங்கி நிற்க,
குயில் நின்னை அழைக்கின்றதெனல்.

166. உய்யான நின்வருகைக் கொண்பழம்போ தின்னதளிர்க்
கையானற் சீர்தாங்கிக் காத்துநிற்ப—பொய்யென்ன
மேவு வனநுசுப்பாய் விண்ணமுதே வாவென்னக்
கூவுவன பாராய் குயில். (உகூ)

அன்னங்கள், பாங்கியர்போல உன்னை
தொடர்தலைப்பாரெனல்.

167. ஆதார மானார்க் கநீதஞ்செய் பூரியர்போற்
சேதார மென்றிடைக்குச் சிந்தை செயா—மேதார
மானமுலை யாளேகா ணன்னங்க ணிற்றொடர்த
வீனமுலை பாங்கியர்போ லீண்டு. (௬0)

மயில்கள் கலாபம் விரித்தாடுதல், நின்சாயலைப்
பல கண்களைக்கொண்டு பார்ப்பதுபோலுமெனல்.

168. தக்கார் தமையந்தச் சார்பாரே தாமுகப்பர்
மிக்காயுன் சாயல் விழுப்பத்தை—யிக்கான்
குலாவு மயில்பலகண் கொண்டுணர்வ தொப்பக்
கலாபம் விரித்தாடல் காண். (௬க)

சிற்றினத்திற் சேராத நல்லோரைப்போல்,
முட்புதரில் நுழையாது வாழும்
கவரிமான்களைப்பாரெனல்.

169. இனத்தாறு மின்னு தெனச்சிற் றினத்தை
மனத்தானுந் தீண்டாத மாண்பா—ரெனத்தாக்கு
முள்ளார் பொதும்பர் முடுகா துறைகின்ற
தெள்ளார் கவரியினந் தேர். (௬உ)

---

(166) உய்யானம் — சோலை. பொய் என்ன மேவும் — இல்லையென்று சொல்லும்படியுள்ள. நுசுப்பு—இடை.

(167) பூரியர்—கீழ்மக்கள். சேதாரம்—சிதைவு. சிந்தைசெயா—எண்ணாத. மேதாரம் ஆன—மலைபோல்வளர்ந்ததான. ஈனம் உலை—இகழ்ச்சி யற்ற, மேன்மையான.

(168) தக்கார்—மேலோர். அந்தச்சார்பார்—அம்மேலினத்தார். மிக்காய்—பெண்ணிற் சிறந்தவளே!

(169) இனம்—சம்பந்தம். இன்னாது—துன்பம். தாக்கும்—தைக்கும். முள் ஆர் பொதம்பர்—முள் நிறைந்த புதர். முடுகல்—அணுகல். தெள் ஆர்—தெளிவுள்ள.

### தபோவனமடைதல்.

170. இனிய மொழிவிளம்பி யிவ்வண்ண மோங்கி
நனியகன்ற கானு நதியும்—பணியகலா
வெற்புங் கடந்து விழுத்தவத்துக் கேற்றதனிப்
பொற்புறவங் கண்டார் புகுந்து. (நந)

### முனிவன், நளாயனியின் கற்பின்றன்மையை நன்குமதித்து, அன்னாள்வேய்ந்த பன்னசாலையில், அன்னாளோடுறைதல்,

171. விளைவப் பயிர்முளைக்கும் வீரியத்தாற் காணும்
வளைவற்ற வாண்முகத்தாண் மாண்பாற்—களைவற்ற
திண்மை யுணர்ந்தேன் றெளியா தகப்பட்டேன்
பெண்மைக் கிளைக்கப் பெரிது. (நச)

172. என்ன மனங்கொண் டிரும்பா தபத்தின்கீழ்
மன்னணங்கோ டையன் வதிந்தனனே—முன்னம்
பணிசெய் தவளதன்பின் பச்சிலைவேய் தன்னா
லணிசெய்த வில்லி லமர்ந்து. (நரு)

### நளாயனி, முனிவன் அடிவருடுதல்.

173. ஆதித்தன் சேர்கன்ன லைந்திற் றுயிலுணர்ந்து
தாதித்த னன்பன் றணைப்பரவிச்—சோதித்தன்
றந்தம் விளக்கித் தழையத் தடவுகிற்பாள்
வந்தம் புயத்தாண் மலர். (நசு)

---

(170) கான்—காடு. வெற்பு—மலை. புறவம்—வனம்.

(171) விளையும் பயிர் முளையில் தெரியும் என்பது பழமொழி. வளைவு அற்ற—கோணுதலில்லாத. களைவு அற்ற திண்மை—ஒருவராலும் கெடுக்க முடியாத கற்புவலி. (171, 172-குளகம்).

(172) பாதபம்—மரம். மன் அணங்கு—அரசன் மகள். முன்னம் பணி செய்து — முதலிலே முனிவனுக்கு வேண்டிய பணிகளைச்செய்து. அவள்—நளாயனி. அதன்பின் — ஒழிந்த நேரங்களில். வேய்—மூங்கில். அணி செய்த இல்—அழகு பெறக்கட்டிய குடிசை.

(173) கன்னல்—நாழிகை. ஐந்து இல் — ஐந்தெனும்போது. தாதி—அடிமைபோல் பணிசெய்யும் நளாயனி. தந்தம்—பல். தாதி + தன்; எதுகைநோக்கி வலிமிகுந்தது.

நீராடிப் பன்னசாலையை அணிசெய்து முனிவன் வரவை எதிர்பார்த்திருத்தல்.

174. தடமாடு முன்னுதன் ருனடி வண்டு
நடமாடு முன்னம்பூ நாடி—மடமா
திருப்பை யணிசெய் தெதிர்பார்த் திருப்பா
டருப்பை சமித்தின்ன தந்து. (௬௭)

முனிவன் வேள்விசெய்கையில் உடனிருந்துதவிபுரிதல்.

175. பீட மமைத்தருகே பெட்பி னிருந்தங்கி
நாடனக னெண்ணுவன நன்குதவி—யீடகன்ற
வண்டமுத ருளேத்த வாங்கமர்வா டன்மனத்திற்
கொண்டமுத ருளைக் குறித்து. (௬௮)

கணவனை உண்பித்து அவன் ஏவியபின் தானுண்பாளெனல்.

176. வான்சேர் வளங்கொள் வனத்தி னிலைபசுங்காய்
தேன்சேர் பலமூந் தேர்ந்தரிதாய்த்—தான்சேர்த்தி
யிச்சித்த கேள்வற் கினிதூட்டி யேவியபின்
னுச்சிட்ட முண்பா ளுவந்து. (௬௯)

விருந்தினரை உபசரித்தல்.

177. ஆரேனுஞ் சாந்த ரணுகின் முகமலர்ந்து
காரேனு மொவ்வாக் கருங்குழலா—ணேரே நம்
மீண்டிருதா ணேவ வெழுந்த தருளென்ன
வேண்டி யளிப்பாள் விருந்து. (௭௦)

---

(174) தடம்—தடாகம். இருப்பு—வசிக்கும் பன்னசாலை; தொழிலாகு பெயர். தந்து—பன்னசாலையிலிட்டு.

(175) பெட்பு—விருப்பம். அங்கி நாடு அனகன்—வேள்வி செய்யும் பாவமற்ற முனிவன். ஈடு—உவமானம். அண்டமுதல்—உலக காரணக் கடவுள். கொண்டமுதல்—கொண்ட கணவன்.

(176) பலம்—கனி. மூலம்—கிழங்கு. உச்சிட்டம்—எச்சில் (மிகுதி).

(177) ஆரேனும்—யார் என்பது ஆர் என மருவி வினத்தன்மைகெட்டு முற்றும்மைபெற்றது. சாந்தர்—துறவிகள். காரேனும் — கார், கருமைப்பண்படி; ஆகுபெயராய் மேகத்தைக்குறிக்கும்; உம்மை, உயர்வு சிறப்பு. அருள்—இறைவன் கருணை. விருந்து—புதுமை. (ஈண்டு வியக்கத்தக்க உணவு). நம் இருதாள் நோவ நேரே யீண் டெழுந்தது என அனுவயித்துப் பொருள்சொல்க).

முனிபன்னியர், நளாயனி இல்லற நடாத்தும்
மேன்மையைக் கண்டு வியந்து
கற்றுணர்வாரெனல்.

178. மன்னு முனிவரர்தம் வாழ்க்கைத் துணைநல்லார்
பன்னு மிதங்கள் பலபேசித்—துன்னும்
வழுப்பற்ற தில்லம் வகைசெய்யக் கண்டு
விழுப்ப முணர்வார் வியந்து. (சக)

நளாயனி, தன் குலம் பிறப்பு முதலிய யாவும்
மேன்மைபெறக் கணவன் பணிசெய்து
வாழ்ந்தாளெனல்.

179. குலநலனும் பெற்ற குணநலனுங் கற்பின்
வலநலனு மெய்ந்நலனு மற்றும்—பலநலனு
முன்னர்த் தழைக்க முகமலர்ந்தாள் செய்திருந்தாண்
மன்னர்க் கிறைவன் மகள். (சஉ)

காண்புகுகாதை முற்றிற்று.

---

(178) வாழ்க்கைத்துணை—மனைவி; ஈண்டு நல்லார் என்னுஞ்சொல்லோடு புணர்த்த இருபெயரொட்டுப்பண்புத்தொகையாயிற்று. துன்னுதல்—நெருங்குதல். வழு—குற்றம். இல்லம்—அம், சாரியை; ஆகுபெயராய் இல்லறத்தைக் குறிக்கும். விழுப்பம்—மேன்மை. வியத்தல்—அதிசயித்தல்.

(179) கற்பின்வலம்—கற்பின்வலி. மெய்ந்நலன்—மானுடயாக்கை பெற்றதன் நலம். ஆள் செய்தல் — அடிமைப்பணி செய்தல். மன்னர்க்கு இறைவன்—அரசர்க்கரசன் (நளன்).



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## நோய்தொடர்காதை.

### திருமால் துதி.

முத்தொழிற்கு மும்முதலா மூலன் முறையிட்ட
வத்திக் கருள்செய்த வாண்டவன்முன்—னத்தினர்க்காக்
குன்றோர் குடையாகக் கொண்டு மழைதடுத்தோ
னன்றோ வரணநமக் காம்.

முனிவன், நளாயனியின் அன்பாலும் உபசாரத்தாலும்
ஒழிந்த ஆசை, மீண்டும்வரும்போலுமெனல்.

180. போராப் பதத்தைப் பெறுவான் றவஞ்செய்தேன்
தீராப் பிணிப்பிற் றிகைக்கின்றேன்—வாராத
வாசை வரும்போலு மன்பி னிவளெனக்குப்
பூசைசெய் வாய்ப்பாலுட் புக்கு. (க)

யான் தூங்கத்தொடங்கும்போதும் விழிக்கும்போதும்
என்பாதத்தை வருடிக்கொண்டேயிருக்குமிவள்,
தூங்குவதில்லையோவெனல்.

181. என்னே சமர்த்துறங்க லெவ்வளவு மின்றேகொல்
பொன்னேமிப் புள்ளன்ன பூண்முலையாண்—முன்னே
துயிலும் பொழுதுந் துறக்கும் பொழுதும்
பயிலுங் கரத்தாற் பதம். (உ)

சோதிக்கப்புகுந்த என் மனவலியைச் சோதிக்கவே
இவள் என்னை மணந்தாள்போலுமெனல்.

182. சாதிக்கின் றாளேதஞ் சற்றும் புரியாது
போதிக்கின் றாள்கற்பின் பொற்பெல்லாஞ்—சோதிக்க
வந்தேனை நெஞ்ச வலிகாண வேபோலுஞ்
செந்தேனை முந்துரையாள் சேர்பு. (ங)

---

(துதி) முத்தொழில் :—படைத்தல், காத்தல், அழித்தல். அத்தி—கஜேந்திராழ்வான், நத்தினர்:—இந்திரனேவிய கன்மழைக்கஞ்சி அடைந்தயாதவர். அரணம்—காப்பு ; சரணம் என்பதன் மரூஉ.

(180) போராப்பதம்—இடையறாப் பேரின்பம்; மோட்சம். பிணிப்பு—கட்டு.

இறைவனைச் சிந்திக்கவிடாமல் இவள் எண்ணமே,
என் உள்ளத்தில் நிறைந்ததெனல்.

183. ஆதி பகவ னடியகலா வென்னுள்ளப்
போதி லிவளே பொலிகின்றாள்—கோதில்
செபஞ்செய்யும் போதுஞ் செறிமகத்தின் போதுந்
தபஞ்செய்யும் போதுந் தனித்து. (ச)

அழகென்னுங்கடலை நீந்தினேன், ஆனாலும் இவள்
கொண்ட அன்பென்னுங்கடலைத் தாண்டலரிதெனல்.

184. உற்றுரை நல்லுணவை யூரை மறந்திட்டா
ளற்றாக நந்தா ளடைகின்றாள்—வற்றாத
பொற்பாழி மூழ்காது போந்தே னிவள்கொண்ட
வற்பாழி தாண்ட லரிது. (ரு)

மணந்த காரணத்தால், யாதொரு குற்றமுங்காணாது இவளை
விட்டுப்பிரிதல் நெறியல்ல, இந்திரன் சொல்லுக்காக
இன்னழுஞ்சோதிப்பேனெனல்.

185. விட்டுப் பிரிதல் விதியல்லை நாமிவளைத்
தொட்டுக் கரம்பிடித்த தொன்மரபான்—மட்டுமலர்க்
கற்பகத்தான் சொற்கின்னுங் காண்ப லெனத்தேர்ந்தான்
வெற்பகத்தான் செய்யும் வினை. (சா)

முனிவன், அம்மையார் தூங்கும்போது நள்ளிரவில்
பிரிந்துபோதல்.

186. ஒன்றல்ல பன்னா ளொருதவறுங் காணாது
நன்றல்ல தன்னுள்ளே நாடினனாய்த்—துன்றல்லிற்
றாங்குஞ் சமயத்தைத் தூங்காது பார்த்திருந்து
மாங்குயிலை நீத்தான் மறைந்து. (எ)

---

(181) பொன் நேமிப்புள்—அழகிய சக்கரவாகப்பறவை. பூண்—ஆபரணம். துறக்கும்பொழுது — நித்திரைவிட்டு எழும்போது. பயிலல் — வருடுதல்.
(182) ஏதம்—குற்றம். சேர்பு—அடைவு.
(183) ஆதிபகவன்—முதற்கடவுள். கோது—குற்றம். உள்ளப்போது—மனத்தாமரை.
(184) அற்று—அவ்வாறு. பொற்பு—அழகு. ஆழி—கடல். அற்பு—அன்பு.
(185) கற்பகத்தான் சொற்கு—தேவேந்திரன் (செவ்வனே சோதிக்கவேண்டுமென்ற) சொல்லுக்காக. வெற்பு அகத்தான் — மலையில் வசிக்கும் முனிவன். வினை—தொழில்; ஈண்டு இலக்கணையால் அதற்குக் காரணமான வஞ்சகத்திற்காயிற்று.

அம்மையார், வழக்கப்படி துயிலுணர்ந்து முனிவனைக்
காணாது திடுக்கிட்டு வருந்துதல்.

187. வழக்கப் படிவிழித்து வண்ணமலர்ப் பாதந்
தொழக்கருதி நெஞ்சந் துணுக்க—மெழக்கணவற்
காணாமை கண்டு கலுழ்ந்தாள் வகையொன்றும்
பேணாமை கொண்டு பெயர்ந்து. (அ)

188. அன்பே யருளே யடியாள் பெறும்பதமே
யின்பேயென் றெய்வமே யின்னுயிரே—வன்பேன்
சிறுத்தசெய லேன்றாங்கித் தீங்கிழைத்தேன் றாட்குப்
பொறுத்தருள்க வென்றாள் புலர்ந்து. (கூ)

முனிவன் வேண்டுமென்று மறைந்ததையுணராது
தான் தூங்கியதாலாகியதென்றும்
அக்குற்றத்தை அவன் பொருத்தருள்வானென்றும் தெளிதல்.

189. பொழுதான தாலாம் புரையென் றவன்செய்
பழுதான தாராய்ந்து பாராண்—முழுதான
மெய்ஞ்ஞானன் சாந்தன் வெகுளா னெனத்தேர்ந்தா
ளிஞ்ஞால மேத்து மிளை. (ய)

வழக்கம்போல் வேண்டுவனவற்றை விரைவில் சேகரித்து
நாயகன் வரும்வழியை நோக்கி நிற்றல்.

190. காலை நியமங் கடிதியற்றி வேண்டுவன
சாலை நிறையவைத்துச் சார்வழிமேல்—வேலைநிகர்
கண்வைத்துக் கோதை கணவன் கழலைத்தன்
னெண்வைத்து நின்றா ளெதிர். (கக)

---

(186) நன்று அல்ல—தீயதாகிய ஒரு செய்லை. மா—மாமரம். குயிலை—குயில்போன்ற சொல்லையுடைய நளாயனியை.

(187) துணுக்கு—அச்சம். கலுழ்தல் — அழுதல். பேணாமை — குறிக்க முடியாமை. பெயர்தல்—இடம்விட்டுச்செல்லுதல்.

(188) வன்பு—கொடுமை. சிறுத்த செயல்—அறியாச்செய்கை. பெறும் பதம்—வீட்டுப்பேறு. புலர்தல்—வாடுதல்.

(189) புரை—குற்றம். பழுது — ஏமாற்றம். வெகுளல் — கோபித்தல். ஞாலம்—உலகு. இளை—இலக்குமி போன்றவள்.

(190) காலை நியமம்—காலைக்கடன். கடிது—விரைவு. சாலை—பன்ன சாலை. வேலை நிகர்—கடலையொத்த. எண் வைத்து—மனத்தில் வைத்து.

### பொழுதுபோக ஐந்து நாழிகை வரையில் முனிவன் வாராமையால் அம்மையார் மிக்க துயருறுதல்.

191. உத்தமியின் செய்கை யொளித்திருந்து பார்த்துந்தன்
சித்தமிரங் காணுசச் செங்கதிரோ—னத்தமிக்கு
முன்னு ழிகைபைந்தின் முன்வரற்கா ணுதின்னு
மன்னுழி புக்காண் மலைந்து. (கஉ)

### அழகிய ஓராசகுமாரன், வேட்டைக்கு வந்தவன்போல் அம்மையாரநுகுறல்.

192. பல்லா யிரம்வேண்டும் பார்க்க விழிகளென் னுஞ்
சொல்லாய போழகன் ரூெள்வலியன்—வில்லாயுங்
கோக்குமரன் வேட்டங் குறிப்பா னெனச்சென்று
ளுக்குமறன் பூண்டா ளகம். (கங)

### அம்மையார், கோக்குமாரனைக்கண்டு என் நாயகனை எங்கேனுங் கண்டாயோவெனல்.

193. அண்ணுவான் யோகர்க் கதிப னெனதுகளை
கண்ணுவா னேற்ற கலைகளெல்லா—மெண்ணுவான்
காந்தனையிக் கானகத்துக் கண்டாயோ கோவென்ருள்
வேந்தனையக் காந்தை விரைந்து. (கச)

### அரசன், கவர்பொருள்பட, ஓர் பெண்புலிவாய்ப்பட்டு நலிவானைக் கண்டேனெனல்.

194. கலிவாயிற் ருண்டக் கடுந்தவஞ்செய் தோர்பெண்
புலிவாயிற் ருன்பட்டுப் போந்து—நலிவானை
வாரணியுங் கொம்மை மடமானே கண்டேனு
ணரணியத் தென்ரு னரசு. (கரு)

---

(191) இன்னுமன் ஆழி — துன்பக்கடல். நாழிகை ஐந்தின் — நாழிகை ஐந்தென்னும் வரையில். மலைதல்—ஒருவழிப்படாது நிற்றல்.

(192) வேட்டம் குறிப்பான் — வேட்டையாட வேண்டுபவன். ஆக்கும் அறன் பூண்டாள் — ஆக்கந்தரும் இல்லறத்தை மேற்கொண்டவள். அகம்—பன்னசாலை.

(193) களைகண்—ஆதரவு. எண் நாவான்—ஓதும் நாவையுடையவன்.

(194) கலிவாயில் தாண்ட—பிறவித்துன்பத்தினின்றும் விடுபட. நலிதல்—துன்புறுதல். வார்—கச்சு. கொம்மை—முலை.

அம்மையார், என் நாயகன் வல்லபத்தைக் காண யாராலாகும்? நீ யாரைக்கண்டாயோவேனல்.

195. புலிகாண் புலியாவான் புன்னலிக்கு மாங்கே
நலிகா ணெனதுகொழு நன்றன்—வலிகாண
யாரா லு மாகா தெவற்கண்டா யோவென்று
டாரா லு மார்பனுக்குத் தான். (கரு)

அரசன், எற்புடம்பினனாகிய முனிவனால் நீ அடைந்த சுகம் யாதெனல்.

196. தான்பிடித்த மாமுயற்குத் தாண்மூன்றே யென்றாற்போ
லூன்பிடித்த மில்லானை யோதுகின்றாய்—தேன்பிடித்த
செங்குமுத வாயாளே சேர்ந்தவனோ டுற்றசுகப்
பங்குமுத லென்னே பகர். (கஎ)

அம்மையார், தக்க தொண்டு செய்து நாயகன் மனமகிழப் பார்ப்பதினும் இனியசுகம் யாதெனல்.

197. சீரா தனந்தந்து சேவடிகட் கானதிரு
வாரா தனஞ்செய் தசனமிட்டுச்—சோராத
காதலனை யுண்மகிழக் காண்டல் சுகமாகு
மீதலதே தெய்து மிதம். (கஅ)

அரசன், நீ முனிவனை மணந்தது பொன் அரிவாளைக் கழுத்திலணிந்ததுபோலுமெனல்.

198. சாம்பூ னதத்தரிவா டன்னைத்தங் கந்தரத்துக்
காம்பூ ணெனத்தரிப்ப தாகுமே—பூம்பூமி
மன்னவனைக் கொண்டு மகிழா திடுக்கண்செய்
முன்னவனைக் கொண்ட முறை. (கக)

---

(195) புலி காண் புலி—புலிகளால் நன்குமதித்துக் காணப்படும் புலியேறு (முனிவன்). நலி—நோய். தார்—மாலை. ஆலல்—அசைதல்.
(196) ஊன் பிடித்தமில்லான்—மாமிசப்பற்றற்று எலும்பு தோன்றும் உடம்புடையான். முதல் — முதலில். (முனிவனது பெருமையைப் பற்றிப்பின்னே பேசுவாம், முதலில் அவனால் நீ அடைந்த இன்பத்தின் பாகம் என்னென்பதைச் சொல்லுவாய் என்றபடி).
(197) ஆதனம்—ஆசனம் (இருக்கை). திருவாராதனம் — சிறந்த பூசை. அசனம்—உணவு.
(198) சாம்பூனதத்து அரிவாள்—சாம்பூனதமென்னும் சிறந்த பொன்னினால் செய்த அரிவாள். இடுக்கண்செய் முன்னவன்—துன்பஞ்செய்வதில் முற்பட்டவன் (முனிவன்).

அம்மையார், இனியது இன்னது இன்னதென்றுணராத
நீ நூல் கற்கவில்லைபோலுமெனல்.

199. சதானந்த முற்றுனைத் தாழ்த்தோது கின்று
யிதானந்த மின்னதீ தென்னு—நிதானநின்
பாவில்லை நின்சொல்லாற் பார்த்திபநீ கற்றறிந்த
நூலில்லை யென்று ணுனித்து. (உ0)

அரசன், மதனகமநூல் செவ்வனே கற்றிருக்கின்றேனெனல்.

200. பொய்யோக நிற்காப் புரிகின்றுன் போலாது
சய்யோக மோர றுபான் சார்நான்கின்—மெய்யோர்
மதன கமநூல் வகைகற்றே னப்போழ்
திதனுக லெண்ணி யிசைந்து. (உக)

அம்மையார், அரசனென்றெண்ணினேன் அடாமொழி
புகல்கின்றனை இடம்விட்டகல்வாயெனல்.

201. வரதத்து மண்காக்க வல்லாயென் றோர்ந்தேன்
சுரதத் துறைமதனேர் தோன்றல்—விரதத்துக்
கண்ணுதலா னன்னுனிற் காணுமுன மேகுதிவே
றெண் ணுதலா னெய்து மிடர். (உஉ)

அரசன், உன் அழகிய யாக்கை பயன் பெறுமாறு
இன்பம் பெறுவாயெனல்.

202. வேதனைக்கு வந்ததில்லை மெய்யின்ப நூலினலச்
சோதனைக்குன் பால்வந்தேன் றோய்வில்லான்—போதனைக்
ளாகாது மெய்கொண்ட வாதாயம் வீணுகப் [குள்
போகாது கொள்ளின்பிப் போது. (உ௩)

---

(199) நிதானம்—ஆராய்ச்சி. நீ நுனித்துக்கற்றறிந்த நூல் இல்லையென்பது, நீ ஆராய்ந்து நூல் கற்கவில்லை என்பதாம்.

(200) சய்யோகம் ஓர் அறுபான்சார் நான்கு—கலவிக்கரணவகை அறுபத்தினன்கு. அப்போழ்து—கற்ற உடனே. இதன் ஆகல்—சுகமுண்டாதல்.

(201) வரதத்து மண் காக்க வல்லாய் — வள்ளற்றன்மையால் நீ உலகைக் காப்பாற்றும் தன்மையுடையை. சுரதம் துறை மதன் நேர் தோன்றல்—கலவித்துறையில் வல்ல மன்மதனை ஒத்த அரசனே. கண்ணுதலான் அன்னன்—சிவனைப்போன்ற முனிவன்.

(202) மெய் இன்ப நூல் — உடம்பாலெய்தும் இன்பத்தையுணர்த்தும் காம நூல். (உண்மையான இன்பத்தைத்தரும் அறநூல் என்றும் சிலேடையாகப் பொருள்படும்). தோய்வு இல்லான்—கூடி இன்பத்தைத் தாராது ஏமாற்றும் முனிவன். போதனை — கணவனுக்குப்பணி செய்வதே மனைவியின் கடமையென்னும் கற்பனை.

நாம் இருவரும் இன்பமடையவே, இக்காட்டில்
தெய்வம் நம்மைக்கூட்டியதேனல்.

203. வஞ்சத்தான் மேல்வைத்த வாஞ்சனையா லென்னலத்தை
நெஞ்சத்தாற் பேதமையா னேடலையோ—வஞ்சத்தா
னூட்டிவைத்த போகத்தை நாமடைய விங்குநமைக்
கூட்டிவைத்தான் பாராய் குறித்து. (உச)

அருள்செய்வையானல், நின் சொல்லின் வண்ணம்
அருகில் காத்திருப்பேனெனல்.

204. தாடொட்டுக் காத்துந் தனிவிட்டான் றன்னைவிட்டுக்
கோடொட்டுங் கொங்கை குழையவென் றன்—றோடொட்டுப்
போகத்தே னுமுண்ணப் பூண்பா யருளாகிற்
பாகத்தே நிற்பேன் பணிந்து. (உரு)

நீ காட்டிலிருக்க விரும்பின்,
மாடகூடங்கள் அமைப்பேன் நாட்டிலிருக்க விரும்பின்,
மகுடஞ்சூட்டி மகிழ்வேனெனல்.

205. கானமைப்பே வேண்டிற் ககனப்பெண் போலுலவ
வானமைப்பேர் வண்ணமணி மாடங்க—ளானமைப்பேன்
பூநாட்ட மாகிற் புனைமகுடஞ் சூட்டிவைத்து
மாநாட்டங் காண்பேன் மகிழ்ந்து. (உசு)

முனிவன் முனிந்தால் அவனைக்கொல்லுவேன்
நீ அஞ்சவேண்டாமெனல்.

206. முனிவான் முனியென்ன முன்னற்க வன்னே
னினிவான் புகப்பகழி யெய்வல்—கனிவான
நஞ்சுகமே னாட்டுண்டோ நல்கினரு ணீயென்று
னஞ்சுகமே போலு மவட்கு. (உஎ)

---

(203) வஞ்சத்தான் — வஞ்சகமுள்ள முனிவன். வாஞ்சனை — ஆசை. நேடல் — தேடுதல். அஞ்சத்தான் — அன்னவாகனத்தையுடைய பிரமன்.

(204) கோடு ஒட்டும் — யானைத் தந்தத்தைப்போலும். பாகம் — அருகு, பக்கம்.

(205) கான் அமைப்பு—காட்டில் வசித்தல். ககனம்-வானுலகம். மாநாட்டம் காண்பேன்—அழகிய கடைக்கண் நோக்கத்தை எதிர்பார்த்திருப்பேன்.

(206) இனி—இப்பொழுதே. வான்—மோட்சம். பகழி—அம்பு. எய்வல்—விடுவேன். மேல்நாடு—தெய்வலோகம். அஞ்சுகம்—கிளி.

அம்மையார், இருண்ட மனத்தோனாகிய இவ்வரசன் அழிவானேயென்று அருளால் நன்மதிபுகட்டுதல்.

207. முப்பான் றிதியின் முகினிறைந்த யாமத்துக்
கொப்பான நெஞ்சுளனென் றோர்ந்தனளாய்—வெப்பான
மாற்ற மொழியாது மன்னழிவா னென்றருளாற்
றேற்றமொழிந் திட்டா டிரு. (உஅ)

அந்தணர் வேள்வியையும்,
அரிவையர் கற்பையும் காத்து மாதமும்மாரி பெய்ய,
நிலங்காத்தலன்றே அரசர் கடமையெனல்.

208. மறைகாத்த நாவுடையார் மண்டழலைக் காத்துப்
பிறைகாத்த வொண்ணுதலார் பெற்ற—நிறைகாத்து
மாதமுறை மும்மை வழங்கநிலங் காத்தலன்றோ
போதமுறை காப்பார் பொறுப்பு. (உகூ)

பெரியோர்களைத் தாக்கவோ, நீ கையில் வேல்
கொண்டாய், இகழப்படுவாயெனல்.

209. மானோட்டுஞ் சீமானே மாற்றலரை யல்லாது
தானோட்டு மாதவரைத் தாக்குதற்கோ—வூனோட்டுங்
கோலே திடமென்னக் கோல்கொண்டாய் நீகையில்
வேலேந்திக் கொண்ட விதம். (௩௦)

தன் மனைவியைத்தவிர மற்றோர், தாயும் தங்கையுமாவாரெனல்.

210. தாயுஞ் சகோதரியுந் தாமாவர் வேறெண்ணி
லேயுஞ்சம் பத்துக் கெரியாவர்—கூயஞ்சத்
துன்றாக நோயாவர் தொல்லுயிரின் கூற்றாவர்
தன்றார மல்லார் தனக்கு. (௩க)

---

(207) முப்பான் திதி—முப்பதாவது திதியாகிய அமாவாசை. முகில்—மேகம். யாமம்—நள்ளிரவு. வெப்பானமாற்றம் மொழியாது — கடுஞ்சொற்களைச்சொல்லாது. தேற்றம் மொழிந்தாள் — தெளியுமாறு புத்தி புகட்டினாள். திரு—நளாயனி.

(208) உறை—மழை. மும்மை—மூன்று. வழங்கள்—பொழிதல். போதமுறை—மனு முதலிய அறநூல்களின் முறை. காப்பார் பொறுப்பு—காக்கும் அரசர் தகுதி.

(209) மான் ஓட்டும் சீமானே — மானைத்துரத்தி வந்த செல்வக்கோவே என்றும், அன்றியும் இத்தகைய புன்மை புரியின் சீமான் என்பதில் மான் என்னும் விகுதியை அப்புன்மையோட்டச் சீ என்றும் (இகழ்ச்சிக்குரியவன்) ஆம். மாற்றலர்—பகைவர். தான் — தானென்னு மகங்காரம். ஊன் ஓட்டுங்கோல் — ஊனை விலக்குச் செலுத்தும் துலாக்கோல். (ஊன் ஓட்டும் என்று தொடங்கி மானோட்டும் சீமானே என்பதை இறுதியாகவைத்து அனுவயித்துப் பொருள் கொள்க).

அயலான் மனைவியை விரும்புவோர்க்கு,
வாழ்வுபோம் எமதண்டமாமெனல்.

211. தின்னும் பழமென்னத் தீபஞ்சேர் விட்டிற்கு
மன்னும் படிவம்போ மாசில்லை—பின்னு
மயலாகுங் காலதண்டம் வாழ்வெல்லாம் போகு
மயலானி னச்சு மவற்கு. (௩௨)

கொண்ட மனைவி உள்ளாக, வேற்றனை வேண்டுவது
அமிர்தங்கிடக்க, விடத்தை வேண்டுவதுபோலுமெனல்.

212. ஓமத் தழன்முன் னுடன்பட்டா ளுள்ளாகச்
சேமத் தகவார் தெரிவையரைக்—காமித்தல்
வேலா வலயத்து விண்ணமுதைக் கொண்டுண்ணு
தாலாலம் வேட்டதுபோ லாம். (௩௩)

அயலார் மனைவியரை விரும்புவோன் தன் மனைவியைக்
கண்காணித்தல் இத்தன்மைத்தெனல்.

213. தேனூன் விபசாரந் தேசிகனெற் காநுமக்கு
மேனூன் முறையென்ற மெய்போலுங்—தானூரர்
மாண்பில்லை வேண்டி மனையாள்கற் பாய்கின்ற
வாண்பிள்ளை யுள்ளத் தறம். (௩௪)

வலிய வந்தாராகிலும் அயலார் மனைவியரை
விரும்பினேரை, நமன் நலியாது விடானெனல்.

214. மண்ணிற் கிடந்தாலு மாழையைச்செல் லுண்ணுது
பெண்ணிற் சிறந்தார் பிறர்க்கழியா—ரெண்ணில்
வலியவே பெண்ணென்று வந்தாலுங் கொள்ளி
னலியவே செய்யு நமன். (௩௫)

---

(210) கூய் அஞ்ச—கூக்குரலிட்டுக் கதறியஞ்ச. துன்று ஆக நோய்—உடலுக்கு வரும் நோய். தாரம்—மனைவி.

(211) படிவம் போம்—உடலழியும். மாசு இல்லை:—பகை, பாவம், அச்சம், பழி ஆகிய குற்றமில்லை. பின்னும்-உடலழிவதோடும், பகை முதலிய சேர்வதோடும். மயல் ஆகும்—காதலிக்கும். நச்சல்—விரும்பல்.

(212) சேமம் தகவு ஆர் — அடக்கம் ஒழுக்கம் நிறைந்த. வேலா வலயம்—கடல். ஆலாலம்—விடம்.

(213) தேன் ஊன்—கள்ளும் புலாலும். ஊரர் மாண்பு இல்லை வேண்டி—அயலாரது பெருந்தன்மைவாய்ந்த மனைவியரைத் தன் உள்ளத்தில் விரும்பி. ஆண்பிள்ளை என்றது பேடியென்றும், அறம் என்றது மறம் என்றும் பொருடரும் எதிர்மறை யிலக்கணை.

மணம் செய்துகொண்டவரை மதிக்காமல்
கண்டவரைச்சேரும் ஆடவரும், மகளிரும், நாகத்தில்
நெருப்புப்பாவையைத் தழுவுவாரெனல்.

215. கொண்டவரைப் பொற்பாற் குணநலத்தாற் றுமிழித்துக்
கண்டவரைச் சேர்வார் கணக்கறுநாள்—விண்ட
மழுவிற் றிகழ்செம்பின் மாணெழிற்சே ராகந்
தழுவிச் சுகங்காண்பர் தாம். (௬௬)

தன்னிலையிற் பிறழ்ந்த மாக்களை, முற்றுமுணர்ந்த
இறைவன் ஒறுப்பானெனல்.

216. இல்லான் பொருட்டுணைமொய்ம் பேதுமிலான் றன்கரம்பார்த்
தல்லால் வகையில்லா னுயானென்—றெல்லாது
பொங்குநரைத் தேர்வான் பொறுக்கா னகச்சான்று
யெங்குநிறை கின்ற விறை. (௬௭)

செல்வச்செருக்காலும் மதந்தாலும்
அஞ்சாது புன்மைபுரிவோர், உலகில்
நடைப்பிணமாவாரெனல்.

217. தனங்கொண்ட பூரிப்பாற் றம்மதத்தான் மாறாய்
மனங்கொண்ட வண்ண மருவும்—வனங்கொண்ட
காம்பிணங்குந் தோளாருங் காளையருந் தாநடந்து
போம்பிணங்க ளாவர் புவிக்கு. (௬௮)

---

(214) மாழை—பொன். எண்ணில் — ஆராயுமிடத்து. பெண் என்று வந்தாலும் என்றது புன்மைபுரியும் பெண்கள் உருவத்தால் பெண்களாகக் காணப்படினும் அவர்களைப்பேய் என்றபடி.

(215) விண்ட மழுவில் திகழ்—பழுக்கக்காய்ந்து வெளிவரும் கனல்கொண்ட மழுவைப்போல் விளங்கும். மாண் எழில்சேர் செம்பின் ஆகம்—நெருப்பொளியாற் சிறந்த அழகிய செம்பு உடல். சுகம் என்பது அயலாரை மருவுதலாலாம் துன்பத்தைச் சுகமெனக்கருதுவார்க்கு நரகதுன்பத்தைச் சுகமெனப் பழித்துரைத்தது.

(216) இல்லான் — கணவன். மொய்ம்பு — பலம். தன் கரம் பார்த்து அல்லால் வகையில்லான்—தனது கையால்வரும் வருவாயன்றி வேறு வகையில்லாதவன். ஆயான் — உணர்ந்துகொள்ளான். அல்லது உணரினும் குற்றத்தைக் கருதான். ஒல்லாது — பொருந்தாதபடி. பொங்குநர்—மிகைசெய்வார். (இல்லான் என்பதைத் தன்னுடைய கணவன் என்று பெண் மேலேற்றியும், தன்னால் விரும்பிய பெண்ணின் கணவன் என்று கள்ளநாயகன் மேலேற்றியும், இருவகையிலும் பொருள் சொல்லலாம்.

தகாதன செய்து உலகம்பழிக்க வாழ்வதினும், சாதல்நன்றெனல்.

218. மான மொழிய மதிப்பொழிய வாக்கொழிய
ஞான மொழிய நடுவொழிய—வீனமொழி
ஞால மொழிய நவைபுரிந்து வாழ்வதினுங்
கோல மொழிதல் குணம். (ருகூ)

நற்செய்கையால் இன்பமும், துற்செய்கையால் துன்பமும் உண்டாமெனல்.

219. உப்பாஞ் சுகமதனை யொட்டா தருவழிக்கு
மப்பாந் துயரென்ப ராரணத்துக்— கொப்பா
மொழுக்கத்தா னின்ப முயர்வெய்துங் கண்டா
யிழுக்கத்தா னெய்து மிடர். (சO)

அன்பும் அறமும் பெருகவருவதே இன்பமெனல்.

220. தருமஞ் சிதையாமற் றம்மனத்தன் பார
வருமஞ் சிதஞ்சுகமா மற்ற—வொருமஞ்
சுருவத்தாற் பூணு லுடையா னிறத்தாற்
பருவத்தா லென்னே பயன். (சக)

உண்ணவும் உறங்கவுமே உடலெடுத்ததெனப், புன்மைபுரிந்து நாணாது திரிபவரைவிடத் தாழ்ந்த விலங்குகளே சிறந்தனவெனல்.

221. உண்ணற்குங் கண்டோர்பா லுள்ளம்போற் சையோகம்
பண்ணற்கு மேயிந்தப் பார்வந்த—வண்ணா
மிகைநாடி நாண்போகும் வீணர்க்கு மேலாந்
தகைநாடிற் கத்தபங்க டாம். (சஉ)

---

(217) தனம்கொண்ட பூரிப்பால்—செல்வச் செருக்காலென்று ஆடவர்க்கும், முலையின் பூரிப்பாலென்று மகளிர்க்கும் கொள்க. வனம் — காடு. காம்பு—மூங்கில். புவிக்கு என்பது ஏழாம்வேற்றுமைப் பொருளில் மயங்கியது.

(218) நவை—குற்றம். கோலம் ஒழிதல்—உடல் ஒழிதல்.

(219) உப்பு—உப்பு. அப்பு—நீர். ஆரணத்துக்கு ஒப்பாம் ஒழுக்கம் — வேதத்துக்கிசைந்த ஒழுக்கம்.

(220) ஆர்தல்—நிறைதல். அஞ்சிதம்—கல்வி. ஒருமஞ்சு—ஒப்பற்ற அழகு. உருவு—வடிவம்.

(221) சையோகம்—புணர்ச்சி. பார்வந்த வண்ணம் — பூமியில் பிறந்தது போலும். மிகை—குற்றம். நாண் போகும் — வெட்கம் கெடும். கத்தபம்—கழுதை.

குலம் கல்வி அருள் வீரம் மேன்மையாதிய
வேண்டாதார், அயலார் மனைவியரை
வேண்டுவாரெனல்.

222. குலமுங் கலைநெறியுங் கூர்நல் லருளும்
வலமுங் கனந்திகழ வாழு—நலமும்
விரும்பா தயலாரில் வேட்டாரை யைந்து
பெரும்பா தகமும் பெறும். (௪௩)

நின் புத்தியில்லாமைக்கு வருந்துகின்றேன்,
இனி இங்கு நிற்காமல் வந்தவழியே போவெனல்.

223. புல்லாதி யெய்தாது புண்ணியத்தா மானுடத்தைக்
கொல்லாது காத்திநின்புற் கோரிக்கைச்—செல்லாதிங்
கில்லா மதிக்கிங் கிரங்குகின்றே னேகென்றா
ணில்லாமல் வந்த நெறி. (௪௪)

அம்மையார் புத்தி புகன்றதைக்,
கொஞ்சிப்பேசலாகவும் வெறுத்ததைப், பிணக்காகவும்
அரசன் மதித்தானெனல்.

224. காமத் தழலைக் கடிதவிக்குந் தண்ணீராம்
வாமத் தவடெய்வ வாக்கிழுதா—யேமத்தாங்
கொஞ்சுதலே போலுமெனக் கொண்டா னுளத்தூடன்
மிஞ்சுதலே போலும் வெறுப்பு (௪௫)

அரசன், நான் கூடிப்பிரிந்துபோவேனென்றெண்ணி
என்னை வெறுக்கின்றாயோவெனல்.

225. வந்தனையா யல்லாதுன் வாயமுதச் சொல்லேது
நிந்தனையாக் கொள்ளகிலே னித்திலமே—சிந்தனையாற்
றந்தேக போகந் தணப்பேனென் றோசொன்னாய்
முந்தேகு கென்ற மொழி. (௪௬)

(222) ஐந்து பெரும் பாதகம்:—கொலை, களவு, கள், காமம், பொய்.
(223) புல் ஆதி — புல் முதலியன ; புல்லாய் பூடாய் புழுவாய் மரமாகி என்றபடி. மானுடம் — மனிதப்பிறப்பு. கொல்லல் — (வாளா) ஒழித்தல். இல்லாமதி—புத்தியின்மை. நெறி—வழி.
(224) வாமத்து அவள்—அழகுடைய அம்மையாரின். தெய்வ வாக்கு—சிறந்த சொல். இழுது—நெய். ஏமத்து ஆம்—களிப்பினால் ஆகிய. கொஞ்சுதல்—கொஞ்சும் சொல். ஊடல் மிஞ்சுதல் — ஊடலின் மிகுதி. வெறுப்பு—வேண்டாமை. (வாக்கு இழுதாய் அவ்வாக்குக் கொஞ்சுதல்போலும் கொண்டான் என மாற்றிப்பொருள்கொள்க).

உயிருள்ளளவும் உன்னைவிட்டுப் பிரிவதில்லை,
ஐயுறாமல் என்னை ஏற்றுக்கொள்வாயெனல்.

226. உயிர்ப்பொன்று மட்டு முனைப்பிரித லில்லை
யயிர்ப்பின்றிக் கொள்வா யமுதே—பெயர்ப்பி
லலங்கார மெல்லா மமைத்தயர்ந்தோ செய்தான்
விலங்கா ரருளை விதி. (சஎ)

கிண்வலையிற்பட்ட எனக்கு நீ அருள் செய்யாவிடில்,
பெண்மக்களை நம்பத்தகாதென்னும்
சொல்லை, நம்பத்தகுமெனல்.

227. வையலைவேற் கண்ணும் வலையிற் படுத்திட்டு
மையலைமே லூக்கவிட்டு வாழ்வருளைச்—செய்யலையேற்
றையலரை நம்பத் தகாது தகாதென்னுஞ்
சையலரை நம்பத் தகும். (சஅ)

உலோபஞ்செய்யாது, இயல்பாக உள்ள
இன்பத்தை அளிப்பயெனல்.

228. உள்ள மகிழ்ச்சிக் குலோபம் புரியாது
கொள்ள மனத்திற் குறிக்கொள்வாய்—மெள்ள
விசைபாடித் தேனளிவேண் டீர்ங்கோதா யென்று
நசைபாடிக் கோமா னயந்து (சகூ)

அம்மையார், நின்போன்றர் தகாதவற்றைத் தகுமெனப்
பொய்பேசி மயக்கி வற்புறுத்தினல் அறியாமையுள்ள
பெண்கள் என் செய்வாரெனல்.

229. காதலரை யல்லாற் கருத்தறியாப் பெண்டீரைத்
தீதலர்ந்த சொல்லாற் றிகைப்பித்துப்—போத
னெறியாமெய் யென்று நெருக்கிடினென் செய்வா
ரறியாமை பூணு மவர். (ருo)

---

(225) நிந்தனை—பழிப்பு. சிந்தனை—எண்ணம். ஏகபோகம்—இருவரும் ஒத்து நுகரும் இன்பம். முந்து ஏகுக என்ற மொழி — முதலிலே இவ்விடத்தை விட்டகலுவாயாகவென்ற சொல். "கில்" என்னும் ஆற்றலுணர்த்தும் இடைநிலை எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது.

(226) உயிர்ப்பு ஒன்றும் மட்டும்—மூச்சுப் பொருந்தும்வரை. அயிர்ப்பு — சந்தேகம். பெயர்ப்பு இல் — நீங்காத. அயர்தல் — சோருதல். விலங்கு ஆர் அருள்—அருளின்மை.

(227) வை—கூர்மை. அலைத்தல்—துன்புறுத்தல். ஊக்கல்—செலுத்தல். சை அலர்—இகழும் பழிச்சொல்.

(228) அளி — வண்டு. ஈர்ங்கோதாய் — குளிர்ந்த கூந்தலையுடையவளே. நசைபாடி—விருப்பத்தை இரந்து சொல்லி.

பழிக்கஞ்சாத ஆண்மக்கள் வஞ்சித்தலாலன்றிக்
கற்பழிந்த பெண்மக்கள் யாவரேனல்.

230. கேண்மையுடை யார்சோரக் கேளார் நகைசெய்ய
வாண்மையிலார் வஞ்சித்த லாலன்றி—வாண்மை
விழிமாதர் யாரே விருதாவிற் கெட்டார்
பழிமாத் தவறெய்தப் பட்டு. (ருக)

மனத்தை அடக்கும் ஆண்மையில்லாதான், பெண்மக்கண்மீது
குறைகூறிற் பொருந்தாது, நீ அரசனல்லைபோலும்
இனி இங்கு நிற்காதேயெனல்.

231. தன்னோர் மனத்தைத் தடுத்தடக்க மாட்டாதான்
பின்னோர் பழிபிறர்மேற் பேசுவதா—லென்னே
விறையல்லை போலு மினியிங்கு நிற்றன்
முறையல்லை யென்றாண் முனிந்து. (ருஉ)

அரசன், நீ என் அத்தை மகளாதுமெனப்
புனைந்துரைத்தல்.

232. பித்தைத் தணிக்கப் பெறுமருந்தா நீயென்ற
னத்தை மகளென் றறியாயோ—முத்தைப்
பழிநகையாய் முன்னென்கைப் பற்றுவதாய்ச் சொன்ன
மொழிநகையா யெண்ணன் முனிந்து. (ருங)

மனத்தில் இசைந்த நீ வாயாற்சொல்ல நாணுவாய்
போலுமெனப் பற்றவருதல்.

233. உடன்பட்ட செய்தி யுரையா துரைக்க
மடன்பட்ட நாணுன் மறைத்தா—யிடன்பட்ட
வட்டப் புளக வனதனத்தா யென்றணங்கைக்
கிட்டப் புகுந்தான் கிளர்ந்து. (ருச)

(229) காதலர்—கொண்ட கணவர். தீது அலர்ந்த சொல் — குற்றமிகுந்த சொல். போதன் மெய் நெறி—இறைவனுணர்த்திய உண்மை வழி.

(230) கேண்மையுடையார்—உறவினர். கேளார் — பகைவர். ஆண்மை இலாதார்—(பிறமாதர் நலத்தை யாசிக்காமையாகிய) ஆண் தன்மை யில்லாத மைந்தர்கள். வாள் மை விழி—வாள்போலும் மைதீட்டிய கண். பழிமாத்தவறு—பழிக்கும் பெரிய குற்றம்.

(231) பின்—(தன் மனதை அடக்காமல் விட்டுவிட்டு) அப்பால். முறை— ஒழுங்கு. (முறை என்பதை உறவுமுறைமைஎனக்கொண்டு, அரசன் மேல்வரும் செய்யுளில் அத்தை மகள் என்பது காண்க).

(232) பித்து—காமப்பயித்தியம். முத்தைப்பழிநகை—முத்தையும் பழிக்கும் பல். முன்—சிறுவயதில். கைப்பற்றல்—மணத்தல். நகை— பரிகாசம்.

அம்மையார், திடுக்கிட்டு வாய்குளறி இளைத்தோடுதல்.

234. ஆவா வெனதன் பமர்ந்த மணவாளா
தேவா வுனையன்றித் திக்கில்லேன்—காவா
யெனத்தாவி வாய்வெரீஇ யெய்த்தோடு கின்றாள்
வனத்தாவி சோர மருண்டு. (ருரு)

தாய்போலுமம்மையார்பின்னே அரசன் ஓடுவது,
நாய்போலுமெனல்.

235. தாய்போலு மன்னு டகையறியா வேந்தாவா
னாய்போலப் பின்னோட னங்கைக்குப்—பாய்போத்துச்
சூழ்பிணைபோல் வெந்துயரே தோன்றிடினும் புட்டொடரு
மூழ்பிணைத்த தீயேயா மொப்பு. (ருசு)

சோர்வில்லாக்கற்புடைய அம்மையார்,
ஓடியோடி மெய்சோர்ந்தாளெனல்.

236. ஆறெல்லாங் கண்ணீரா யங்கமெலா முட்கீற்றாய்த்
தூறெல்லாங் கார்க்குழலாய்ச் சோரவிட்டு—மாறில்லாக்
கற்பாவ தொன்றுந்தன் கைசோராண் மெய்சோர்ந்தாள்
பொற்பாவை யென்செய்வாள் போந்து. (ருஎ)

அரசனுக்குச் சாபங்கொடுத்தல்.

237. நடக்க முடியாதா ளுடவழி காணு
டொடக்கருது மத்தத் துணைக்கு—மடக்கத்
தொடர்ந்தெழுந்த கால்கட்குந் துக்கத் தொழுநோய்
படர்ந்தழுங்க வென்றாள் பதைத்து. (ருஅ)

---

(233) இடன்பட்ட—விசாலமான; அணங்கு—பெண், (நளாயனி) நோய். கிட்டல் — அணுகல், அடைதல். (அணங்கைக் கிட்டப்புகுந்தான் என்பது அம்மையாரை அணுகச்சென்றான் என்றும்,நோயையடையச் சென்றான் என்றும், பொருள்படுதல்காண்க).

(234) ஆ ஆ— இரக்கக்குறிப்புச் சொல். எய்த்தல்—இளைத்தல்.

(235) போத்துச் சூழ் — ஆண்புலியால் தொடரப்பெற்ற. பிணை—பெண் மான். புள்—பறவை. ஊழ்பிணைத்த தீ—உலக முடிவுகாலத்தில் பற்றியதீ. (புலியால் துரத்தப்பட்ட மான் போல அம்மையாருக்கு வருத்தம் தோன்றினும் அம்மையார் தீயையும், அரசன் அத்தீயின் மேற் சென்ற பறவையையும் ஒப்பாவர் என்பதாம்).

(236) ஆறு—வழி. அங்கம் — உடல். தூறு — சிறுசெடிநிறைந்த காடு. பொற்பாவை—பொன்பிரதிமை போன்ற நளாயனி. கைசோர்தல்—தன்னையறியாது கைவிடல்.

(237) நாட வழிகாணாள்—(வழியில்லா ஓர் இடத்தில் அகப்பட்டுக்கொண்டு) அப்புறம் போக வழிகாணாதவளாகி. அத்தம் — கை. துணை — இரண்டு. மடக்கல்-தடுத்துப்பிடித்தல். தொழுநோய்-குட்டநோய்.

அரசன், அம்மையார்கொடுத்த சாபத்தை ஏற்று,
கைச்சாபத்தைப் போட்டுவிட்டோடினனெனல்.

238. முச்சாபக் கஞ்ச முகத்தாள் கயிரவவாய்
மெய்ச்சாபங் கைக்கொண்டு மெய்விதிர்த்துக்—கைச்சாபஞ்
சோர்ந்திட்டான் போனான் சுடர்சுடுதற் சோதித்துத்
தேர்ந்திட்டான் போலுந் திகைத்து. (௫௯)

அடியார்க்குத் தீங்கிழைத்தாரைத் துன்பமணுகுவதுபோல்,
அரசற்கு அப்போதே குட்டநோய் பற்றியதெனல்.

239. நாராய ணாய நமவென்னு நன்மைப்
பாரா யணஞான பண்டிதரைத்—தோமற் [தால்
றுன்பிழைத்தார்க் கல்லலுடன் றோன்றல்போற் றோன்றிய
வன்பிழைத்தாற் கந்நோய் வலிந்து (௬௰)

ஆகாய வீதியில் பார்த்துக்கொண்டிருந்த
இந்திரன், பயந்தோடினனெனல்.

240. தன்னா யகனுந் தவசிக் கிதுவானா
லென்னா மெனக்கவனை யேவியதாய்—மின்னாடன்
மாணகத்துக் காணிலென வானோரின் வேந்தகன்றான்
சேணகத்துப் பார்த்துத் திகைத்து. (௬௧)

அரச கோலங்கொண்டிஃதிழைத்த
மௌத்கலிய முனிவன், பழைய தன்னுருக்கொண்டு
பொய்கைக்கரையிலிருந்தானெனல்.

241. பொய்வழியாய்ப் பூபதிபோற் போந்து தவறிழைத்தான்
செய்வழியா தோவென்று சிந்தைசெய்—துய்வழியாந்
தூயா டுணையென்றே தொல்லுருவங் கொண்டிருந்தான்
போயாடும் பொய்கைப் புறத்து. (௬௨)

---

(238) முச்சாபக் கஞ்ச முகம்—(புருவம் இரண்டு நெற்றி ஒன்று ஆக)மூன்று வில்லையுடைய தாமரை மலர்போன்ற முகம். கயிரவம் — செவ்வாம்பல். மெய்ச்சாபம்—தவறாதுபலிக்கும் சாபம்.
(239) அல்லல்—துன்பம். வன்பு இழைத்தான்—கொடுமைபுரிந்த முனிவன்.
(240) சேண் அகம் — ஆகாயமாகிய இடம். (அவனை நான் ஏவினதாய் மின்னாள் தன் மாண் அகத்து காணில் எனக்கு என்னாம் என மாற்றிப் பொருள்கொள்க).
(241) இழைத்தல்—செய்தல். உய்வழி—நோயினின்றும் விடுபடும் விதம். தூயாள் — அமலையாகிய நளாயனி. தொல் உருவம் — முன்னைய முனியுருவம். (தூயாள் துணை உய்வழி ஆம் என்று, என மாற்றிப் பொருள்கொள்க).

முனிவன், உபசாரஞ்செய்தாளுக்கு அபசாரஞ்
செய்தேனேயெனல்.

242. மதிகொண்டு சற்று மதியாது முன்னை
விதிகொண் டுஞற்றும் வினைவாற் —றுதிகொண்டு
தேவ வுபசாரஞ் செய்தாட்கென் செய்தேனுண்
ணோவ வபசார நொய்து. (சுங)

பற்றிப்பிடிக்கப்போனபோது, அவள் மனம்
என்னபாடுபட்டதோவெனல்.

243. தனக்குப் பணிசெய்யுந் தாதியரைத் தான்விட்
டெனக்குப் பணிசெய்வா னேங்குஞ்—சினக்கு
மடையாள மில்லா ளகமென்னு யிற்றே
புடையாளச் சென்றெழுந்த போது. (சுச)

நாட்டில் மெல்லணையிற் பயின்றாளைக் காட்டில்
கல்லணையிற் கலங்கவிட்டேனேயெனல்.

244. சொல்லணையிற் பட்ட சுகிர்த மடமானை
மெல்லணையிற் றுன்பயின்ற மெல்லியலைக்—கல்லணையில்
வாடவிட்டே னேலமிட்டு மாவடுநேர் கண்ணீர்விட்
டோடவிட்டே னடவிட்டே னுற்று. (சுரு)

தந்தை சொல்லும், குருவின் சொல்லுமே
கொள்ளத்தக்கதென்பதை, இந்திரன் சொல்லைக்கேட்டு
அதனல் உணர்ந்தேனெனல்.

245. குருவா சகந்தந்தை கூறுமுரை யேயாம்
பெருவா சகமென்னும் பெற்றி—தருவாச
வன்கூற்றுங் கூற்றுன் மதித்தே னினிதென்றுன்
நன்கூற்ற மற்று நலிந்து. (சுசு)

---

(242) மதி—புத்தி. மதியாது—ஆராயாது. முன்னை விதி — பழவினை. கொண்டு — தன்வயப்படுத்திக்கொண்டு. உஞற்றும் — முயலும். வினைவு—செய்கை. தேவவுபசாரம் — தெய்வங்களுக்குச் செய்யும் உபசாரம். உள்நோவ—மனம் நோவ. அபசாரம்—தவறு. நொய்து—விரைவாக.

(243) பணிசெய்வான் ஏங்கும்—தொண்டு செய்வதற்காக ஏக்கங்கொள்ளும். சினக்கும் அடையாளம்—கோபக்குறி. புடைசென்று ஆள எழுந்த போது—அருகே சென்று தழுவத்தொடங்கிய சமயத்தில்.

(244) சொல் அணை—சொல்லாகிய வரம்பு. பட்ட—கட்டுப்பட்ட. சுகிர்தம்—நற்செய்கை. கல் அணை—கல் படுக்கை. மாவடு — மாம்பிஞ்சின் பிளவு. நாடவிடல்—தேடவிடல்.

நளாயனியின் மேன்மையைக்கண்டு உலகத்தாருக்கறிவிக்க வந்த நான், மூடர்க்குத்தலைவன் போன்றேனெனல்.

246. பரங்காணு வற்கொண்டு பன்னு டவஞ்செய்
தரங்காணுக் கூர்வேற்க ணன்னத்—திரங்காணு
நல்லார்க்கு நாட்ட நயந்தே னிடர்ப்பட்டேன்
பொல்லார்க்கு ணன்றலைவன் போன்று. (கூஎ)

என்னையுணராது தன்னைக்காத்தந்த நளாயனி சாபமிட்டது தக்கதேயெனல்.

247. நெறியாது மாற நினைந்திலா டன்மை
யறியாது சோதித்தே னுங்கெற்—குறியாது
தாபந்தாங் காதன்னு டன்னைத்தான் காத்தற்குச்
சாபந்தா னிட்டா டளர்ந்து. (கூஅ)

பெண் என்று சொல்வது, நளாயனியைப்போன்ற பெண்டிர்க்கே தகுமெனல்.

248. கற்பான திண்மைக் கலன்கொண்டாள் செய்கைக்கு
வெற்பான மாதவத்தான் வெள்கினனுற்—பொற்பான
பெண்ணென்ப நித்தக்க பெண்டிர்க்கா மற்றெல்லாம்
புண்ணென்ப தாகப் புகன்று (கூகூ)

குட்டநோயைச், சிலநாள் வெளிப்படாமலிருக்கும்படி வேண்டிக்கொள்ளுதல்.

249. இருவழிக்கு முற்பட்டா ளென்னருமைத் தேவி
பொருவழிக்குஞ் சொல்வழியே போந்நிட்—டிருவழிக்குங்
குட்டமே மெய்மேற் குறுகலைசின் னுளென்முன்
தொட்டமே தாவி தொழுது. (எ0)

---

(245) பெருவாசகம்—முதுமொழி. தருவாசவன்—ஐந்தருநிழலில்வைகும் இந்திரன். கூற்றும் கூற்றால் — சொல்லாகிய எமனால். நன்கு ஊற்றம்—நல்லதிடம்.

(246) பரம்—கடவுள். அன்னம்—அன்னத்தையொத்த நளாயனி. (இன்) திரம் காணு — (கற்பு) வலியைக்கண்டு. (பின்பற்றி நடக்க). நல்லார்க்கு—பெண்மக்களுக்கு (ஆதாரமாய்). நாட்ட—(அவ்வொழுக்கத்தின் முறைகளை) நிலைநிறுத்த. நல்லார் என்பது மாதர்க்கும் அறிஞர்க்குமாம். காண் ஆவல் ; வினைத்தொகை.

(247) தன்மை—நளாயனியின் மேன்மை. ஆங்கு என் குறியாது—அவ்வாறே என்னை (இன்னனென்று) தெரிந்துகொள்ளாமல். தாபம்—துன்பம்.

(248) கற்பு ஆன திண்மை கலன்—கற்பென்று சொல்லப்படும் நிலைகுலையாத அணி. வெற்பு ஆன மாதவத்தான்—மலையையொத்த வலிய தவத்தையுடைய முனிவன். வெள்கல்—வெட்கப்படல்.

அருள்பெற்ற அம்முனிவன் மொழிந்தவண்ணம்
நோய், உள்ளடங்கியதெனல்.

250. பொருள்பெற் றவர்வாக்கைப் போற்றுகிற்பா ரென்னத்
தெருள்பெற்ற மாதவத்தாற் செய்ய—வருள்பெற்ற
விண்ணோர் புகழும் விமலன் மொழிந்தவண்ண
முண்ணோ யிருந்த தொளித்து. (எக)

அம்மையார் கோபக்கனலால் மெய்சிவந்த சூரியன்,
மேல்கடலில் மூழ்கினானெனல்.

251. குழலை மணியாழைக் கொண்டமைத்த தன்ன
மழலை மொழியாளுள் வாய்ந்த—தழலைநிகர்
வெப்பத்திற் காற்றாய் மெய்சிவந்து மார்த்தாண்ட
னுப்பத்தி புக்கா னுணர்ந்து. (எஉ)

செவ்வான்த்தோற்றம், முனிவனைச்சீறிய மேற்றிசைப்
பெண்ணின் கோபத்தழல்போலும் இருள்வாவு,
அத்தழலினின்றெழும் புகைபோலுமெனல்.

252. தாக்கணங்கு போலுந் தனதினத்தார் நாயகிக்குத்
தேக்கணங்கு செய்தவனைச் சீறியெழு—மேக்கணங்கு
கோபத் தழல்போலுங் கூர்ந்தெழுந்த செக்கரதன்
றாபத் தழைவிருளின் றுப்பு. (எ௩)

அம்மையார், முனிவனை அரசன் போனபின்
சோர்ந்து பூமியிற் சாய்ந்தாளெனல்.

253. மன்னவனாய் வந்த மறைமுனிவன் போனதன்பின்
றன்னவனா மென்னுந் தகைபுணரா—தன்னவனாற்
றான்பட்ட பாட்டாற் றளர்ந்தவனி மேற்சாய்ந்தாண்
மான்பட்ட நோக்காண் மருண்டு. (எச)

---

(249) இருவழி—இம்மையும், மறுமையும். பொருவு அழிக்கும்—சமானமற்ற. தொட்ட மேதாவி—அந்நோயால் தொடரப்பெற்ற அறிஞன்.

(250) தெருள்—தெளிவு. விமலன் — குற்றமற்ற முனிவன். உள் — யாக்கையினுள்ளே.

(251) குழல்—வேய்ங்குழல். யாழ்—வீணை. மழலை—இளஞ்சொல். மார்த்தாண்டன்—சூரியன். உப்பு அத்தி—உப்புக்கடல்.

(252) தனது இனத்தார் நாயகி—தனது இனமாகிய பெண்களுக்கெல்லாம் தலைவி. தேக்கு அணங்கு—மிகத்துன்பம். மேக்கு அணங்கு—மேல்திசையாகிய பெண். செக்கர்—செவ்வானம். தாபம் தழைவு—புகையின் செறிவு. துப்பு—பொலிவு.

(253) தன்னவன்—தன் கணவன். அவனி—பூமி. நோக்கு—கண்.

தேர்ச்சியில்லாத சித்திரப்பாவைபோல்
வீழ்ந்து மூர்ச்சித்தாளெனல்.

254. நேர்தழைத்த வல்லி நிமிர்கொம்பு சாய்ந்தென்னக்
கார்தடித்தோ டேவீழ்ந்த காட்சியென—வேர்ததும்பித்
தேர்ச்சித்தா ளில்லாத சித்திரமே போல்வீழ்ந்து
மூர்ச்சித்தாள் கண்கண் முகிழ்ந்து. (௭௫)

பூமியும் வனவிலங்குகளுமன்றித், தாங்குவாரும்
ஏங்குவாரும் வேறில்லையெனல்.

255. கைத்தாங்குந் தாய்மார்தங் கண்மணியே போல்வளர்ந்த
மெய்த்தாங்குங் கற்புடைய மெல்லியற்கு—மொய்த்தாங்குத்
தாங்குநர்வே றில்லை தரையன்றி மாக்களன்றி
யேங்குநர்வே றில்லை யிருந்து. (௭௬)

யானை, சிங்கம், புலி, மான், பசு முதலிய யாவும்
அம்மாவென்றிரங்கிச் சூழ்ந்ததெனல்.

256. அச்சுதன்றாட் சேர்ந்தார்க் ககப்பகைமாய்ந் தேகல்போ
னிச்சந்தாங் கொள்ளூழ் நிலைபோ—நச்சினவா
யம்மா வெனப்புலிமா ணையரி யான்முதல
வெம்மாவுஞ் சூழ்ந்த வியைந்து. (௭௭)

யானைகள், பூங்கொத்துக்களை நீரில் தோய்த்து
குறுந்திவலைகளை அம்மையார் மெய்யில் வீசிற்றெனல்.

257. பனித்த புனனனைத்துப் பைந்தளிர்ப்பூங் கொத்தைத்
தனித்த புழைக்கரத்தாற் றூங்கிக்—குனித்த
புருவத்தா ளாகத்துப் பூந்திவலை வீசு
முருவத்தார் போதகங்க ளோர்ந்து (௭௮)

---

(254) வல்லி நிமிர் கொம்பு — வல்லிக்கொடியால் சுற்றிய நிமிர்ந்த கொழு கொம்பு. தடித்து—மின்னல். வேர்—வியர்வு. தேர்ச்சி—தெளிவு. தாள்—முயற்சி. முகிழ்த்தல்—மூடல். தேர்ச்சித்தாள்; எதுகை நோக்கி வலித்தது.

(255) மெய்—உண்மை. மெல்லியல்—பெண் (நளாயனி). மொய்த்தல்—சூழ்தல். மாக்கள்—விலங்குகள்.

(256) அச்சுதன்—அழிவற்றவன் (திருமால்). அகப்பகை—உட்பகை (காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம்). நிச்சம் — எப்போதும். ஊழ்—பகை. நச்சினவாய்—விரும்பினவாகி. அரி—சிங்கம். ஆன்—பசு.

(257) பனித்த புனல்—குளிர்ந்த நீர். புழைக்கரம்—தும்பிக்கை. குனித்தல்—வளைதல். உருவத்து ஆர்-அழகின்மிக்க, உருவில்பெரிய. போதகம்—யானை.

தான் செய்த தருமமே அம்மையாரைத் தாங்கிற்றெனல்.

258. ஆம்போகஞ் சுற்ற மரும்பொருளைக் கைவிட்டுப்
போம்போ துடன்சேர் பொருளஃதாந்—தான்போற்
றறந்தாங்க வாவிவந் தாயாசந் தீர்ந்தா
டுறந்தாங் கயர்பொற் றொடி. (௭௯)

அம்மையார், மூர்ச்சைதெளிந்து நினைவுவந்ததும்
மணவாளா அடியேனைக்காக்க வருக்வெனல்.

259. மணவாளா மாவேத வாக்காளா மூந்துங்
குணவாளா மாதவத்தோர் கோனே—தணவா
தெளியேற் கருள வெழுந்தருள்க வென்று
ளளியேற்குங் கோதை யவள். (௮0)

கண்விழித்துப்பார்த்து விலங்குகளைக்கூவி,
முனிவரைக் கண்டீரோவெனல்.

260. திருட்டி மலர்த்தித் திசைமுழுது நோக்கி
யிருட்டி லுணர்வரிதா யேய்த்தான்—பொருட்டுக்
கலங்கினமா தென்காந்தற் கண்டீரோ வென்றாள்
விலங்கினத்தை யெல்லாம் விளித்து (௮௧)

அம்மையாருக்கு இடையூறயெழுந்த இருளொழிய,
சந்திரன் உதயமானனெல்.

261. குலஞ்செய் தவம்படிவங் கொண்டன்னாட் குச்சஞ்
சலஞ்செய் தமம்விழத் தான்றன்—வலஞ்செய்த
வெண்கதிர்வாள் கைகொண்டு வீசி யெழுந்திருந்தான்
றண்கதிர்வா ராசித் தலத்து. (௮௨)

---

(258) ஆம்போகம்—அறத்தாலாகிய இன்பவுணர்ச்சி. தான் போற்று அறம்—தன்னால் செய்யப்பட்ட தருமம். துறந்து ஆங்கு—உயிர் நீங்கியது போன்று. பொன் தொடி — பொன்னாலாகிய வளையலையணிந்த நளாயனி.

(259) அளி ஏற்கும் கோதை அவள்—வண்டுகள் தேனை யாசிக்கும் பூமாலையை யணிந்த நளாயனி.

(260) திருட்டி—கண். ஏய்த்தான் பொருட்டுக் கலங்கின மாது—ஏமாற்றஞ் செய்த முனிவனைக்காணமையால் மனம் கலங்கின அம்மையார்.

(261) படிவம்—வடிவு. சஞ்சலம்—துயரம். தமம்வீழ — இருள் ஒழிய. வலம்—வெற்றி. வெண் கதிர் வாள்—வெள்ளிய கிரணமாகியவாள். தண்கதிர்—சந்திரன். வாராசி—கடல்.

(262) எண் கலைகள் தோய்ந்து—அட்டமிச்சந்திரனாகி. வாய்தல்—அமைதல். வரும் வான் உடுவேந்தன்—வருகின்ற சந்திரன். மூன்று கலையாய் இடைக்கும், எட்டுகலையாய் நெற்றிக்கும் ஒப்பாகவரும் சந்திரன் இன்று அம்மையார் முகத்தைப்போல (நிறைகலைபெற்று) வந்தான் என்பது பொருள்.

சந்திரன், அம்மையார் முகம்போல் தோன்றினனெனல்.

262. தேய்ந்து நுசுப்பிற்குந் தேற்றங்கொ ளெண்கலைக
டோய்ந்த நுதற்குந் துணையாக—வாய்ந்து
வருவா னுடுவேந்தன் வந்தான் வனிதை
திருவா னனம்போற் சிறந்து. (அங)

தன்னை முடியிலணிந்த சிவபெருமானை யொத்தானெனல்.

263. தண்மை நிலவு சடைவிரித்து மானேந்தி
வெண்மை நிறங்கொண்டு மேலெழுந்த—திண்மைக்
களமடுத்துத் தன்னைக் கனகமுடி சேர்த்தான்
வளமடுத்து நின்றான் மதி. (அச)

கணவரைப்பிரிந்தார்மேல் தீப்பொழியும் சந்திரன்,
அம்மையார்க்குக் குளிர்ச்சியைத்தந்து,
வழித்துணையுமானனெனல்.

264. பிரிந்தார் வருந்தவனல் பெய்மதியஞ் சீதஞ்
சொரிந்தார்வ நாயகனைச் சுற்றித்—திரிந்தார்
வளவனத்துத் தேட வழித்துணையு மான
னிளவனத்துத் தையற் கினிது. (அரு)

அம்மையார், இராமுழுதும் அவ்வனத்தில்
முனிவனைத்தேடினரெனல்.

265. கோத்திரையுஞ் சாரல் குகையும் வருங்கமலஞ்
சேர்த்திரையு மற்றெல்லாந் தேடியொரு—மாத்திரையு
மோரிடத்து நில்லா துலைவுற்றாள் வேறிடத்தும்
பாரிடத்து மிக்காள் பதைத்து. (அசு)

---

(263) மதி—சந்திரன். தண்மை நிலவு சடைவிரித்து — குளிர்ந்த கிரணமாகிய சடைகளை விரித்து. மான் ஏந்தி—களங்கமாகிய மானைத் தாங்கி. வெண்மை நிறம் கொண்டு—வெண்ணிறங்கொண்டு. மேல் எழுந்த—தரைமேலெழுந்த. திண்—செறிந்த. மை—கருத்த. களம் மடுத்து—இருளாகிய விடத்தைக் குடித்து. தன்னைக் கனக முடி சேர்த்தான் வளம் அடுத்து நின்றான்—தன்னைப் பொன்மயமான சடைமுடியில் தரித்த சிவபெருமானுடைய செவ்வியடைந்து நின்று விளங்கினன். (கங்கையால் குளிர்ச்சி தங்கிய சடையைவிரித்து, மானைக் கரத்தேந்தி, நீறுபூசியதாலாகிய வெண்ணிறங்கொண்டு, கடலினின்றெழுந்த வலியவிடத்தைக் குடித்து எனச் சிவபெருமானுக்குஞ் சிலேடையாதல் காண்க).

(264) இள வனத்துத் தையல் — இளமையும் அழகும்வாய்ந்த அம்மையார். வளம் ஆர் வனத்துச் சுற்றித்திரிந்து ஆர்வநாயகனைத் தேட என மாற்றிப்பொருள்கொள்க.

### முனிவனைக்கண்டாரெனல்.

266. வருத்தும் பசிநோயன் வானமுதை மோக்கக்
கருத்தும்பர் பக்குவியுட் கண்டு—திருத்தும்
பரமமெய்த் தேசிகனைப் பார்த்தென்னப் பார்த்தா
ளிரமமெய்த் தோனை யெதிர். (௮௭)

267. இன்மை யுடையா னிருநிதியைத் தான்விரும்பு
நன்மை யளிப்பானை நாடுதவன்—புன்மையுடைக்
காமநசை யோனணங்கைக் கண்டா லெனக்கண்டா
ணேம நசைகொண்டா ணோர்ந்து. (௮௮)

### முனிவன், அம்மையாரைக் கண்டும் காணாதவன்போலிருந்தானெனல்.

268. பேணுவார்க் கல்லனசெய் பெற்றியோ ரன்னாைக்
காணுவா ராகிற் கருத்தழிந்து—நாணுவர்போ
லாரா தரத்தா ளருகிலுறக் கண்முகிழ்த்தான்
பாரா தவன்போலப் பார்த்து. (௮௯)

### அம்மையார், முனிவன் தாளில்வீழ்ந்து காக்கவேண்டுமெனல்.

269. கொஞ்ச மறியுடையேன் குற்றங்க ளேதேனு
நெஞ்சமறி யாதைய நேர்ந்திடினுந்—தஞ்சம்
புகுந்தேனுட் கொண்டு பொறுத்தருள்க வென்று
ளுகுந்தேனுட் கஞ்சத்தா ளுற்று. (௯௦)

---

(265) கோத்திரை—மலை. வரும்கமலம் சேர்த்திரை—பொய்கையினின்றும் வரும் தாமரை மலர்களையுடைய யாறு. மாத்திரை—கண்ணிமைக்கும் நேரம். உலேதல் — அலேதல். வேறு இடம் — தெய்வவுலக முதலியன.

(266) வான் அமுதம்—மேலான தேவாமிர்தம். மோக்கக் கருத்து உம்பர் பக்குவி—மோட்சத்தில் விருப்பமுள்ள உயர்ந்த பக்குவன். இரமம் எய்த்தோன்—ஆசையொழித்த முனிவன்.

(267) இன்மை—இல்லாமை. இருநிதி—பெருஞ்செல்வம். தான்விரும்பும் நன்மை அளிப்பான்—தவம் செய்து ஒருவன் கோரும் நன்மைகளைக் கொடுக்கும் தெய்வம். அணங்கு—பெண். நேமம்—நெறி.

(268) பேணல்—காத்தல். அல்லன—அறமல்லாதன. ஆர் ஆதரத்தாள்—நிறைந்த அன்புடைய நளாயனி.

(269) தஞ்சம்—அடைக்கலம். தேன் உகும் நாள் கஞ்சம் தாள்—தேனைச் சிந்தும் புதிய தாமரை மலர்போன்ற பாதங்கள்.

முனிவன், இவள்கொண்ட அன்பிற்குக்
கைம்மாறுண்டோவெனவுருகுதல்.

270. கருந்தடங்கட் செய்யவாய்க் கந்தப்பைங் கூந்தன்
முருந்தடங்கும் வெண்பற்பொன் மூர்த்த—மருந்தடங்கும்
வாய்மையாட் கென்னகைம் மாறென் றுருகினான்
றூய்மையா னன்பு தொடர்ந்து. (௯௧)

அம்மையாரை வாழ்த்திப் பன்னசாலைக்குப்
போவோமெனல்.

271. பாழி மணிவடத்தோட் பார்த்திபன்றன் புத்திரியே
வாழி வருந்தலைநீ மாயோகி—னூழிகைதீர்
வுற்ற தறியே னுறுது மனைக்கென்றான்
பற்ற தறநோற் பவன். (௯௨)

முனிவன்மொழி, அம்மையாருக்குப் "பொருளிழந்த
ஏழையவனைப்பெறுகவென மொழிந்த" நியாயாதிபதி
மொழிபோன்றதெனல்.

272. வல்லான் கவர்ந்த வளநிதியை யஃதிழந்த
வில்லான் பெறுகவென வேந்தலிசை—சொல்லாகு
நாதன் பணியையோர் நாளிழந்த நங்கைக்கு
மூதறிஞன் சொன்ன மொழி. (௯௩)

சூரியன், உதயமானனெனல்.

273. வெப்ப மகல விமலை துயரகன்ற
செப்ப மறிந்தவனி சேர்ந்தவிருட்—குப்ப
லகலவகத் தச்ச மகலத்தே ரூர்ந்தான்
பகலவனப் புச்சிப் பரப்பு. (௯௪)

---

(270) முருந்து—மயிலிறகினடி. பொன் மூர்த்தம்-பொன்னிறமான உடல். மருந்து அடங்கும் வாய்மை — தேவாமுதம்போலும் சுவை தங்கிய சொல். கைம்மாறு—பதிலுதவி. தூய்மையான்—பரிசுத்தமுடைய முனிவன்.

(271) பாழி—பருமை. பார்த்திபன்—நளன். மா யோகு—சிறந்த நிருவிகற்பசமாதி. உறுதல்—அடைதல்.

(272) வல்லான்—பிறர் பொருளை இரக்கமின்றி கவரும் ஆற்றலுடையான். இல்லான்—ஏழை. ஏந்தல்—நியாயாதிபதி. அறிஞன்-முனிவன்.

(273) வெப்பம் — நேற்று அம்மையார் கோபத்தாலுண்டான வெப்பம். விமலை—குற்றமற்றவள் (நளாயனி). செப்பம்—செவ்வை. இருள் குப்பல்—இருட்கூட்டம். அச்சம் — அம்மையாரின் கோபத்தால் சூரியனுக்குண்டான அச்சம். பகலவன்—சூரியன். அப்பு உச்சிப் பரப்பு—கீழ்க்கடன் முகட்டின்கண்.

அம்மையார், மகிழ்வோடு பழயபடி வாழ்ந்தாரெனல்.

274. கட்டுக் கடங்காக் கனதனப்பெண் ணுயகமோர்
மட்டுக் கடங்கா மகிழ்வெய்தி—விட்டுத்
தணவா ளரைநொடிமுன் றன்மைத்தாய் வாழ்ந்தாண்
மணவாள ளேடு மடத்து. (௯௫)

சிலநாளில் முனிவனுக்குத் துட்டநோய்,
வெளிப்பட்டதெனல்.

275. கொஞ்சம் பகலகலக் கொற்ற மதனுய்க்கு
மஞ்சம் பவித்தாற் கருந்திறல்போய்—நெஞ்ச
மழிந்ததே மாதுரையி னங்நோய் படர்ந்து
வழிந்ததே புண்ணீர் மலிந்து. (௯௬)

அம்மையார், பலமூலிகைகளால் மருந்துகள் செய்து
பூசியும், நோய் அதிகரித்ததெனல்.

276. மன்னந்த நோய்க்கு மருந்தரிதா மென்றாலு
முன்னந் தனைவலிக்க மூலிகைக—டுன்னந்தச்
சேவிட்ட கண்ணு டெரிந்தனந்தஞ் செய்திட்டு
மேலிட்ட கீடங்கண் மேய்ந்து. (௯௭)

நோயின்றன்மையிஃதெனல்.

277. ஈயும் பலமொய்த் தெறும்பூர் முடைநாற்றச்
சீயும் புழுக்கணமுஞ் சிந்தினவான்—மாயும்
வழிமூடும் ஞான மறையாளன் பெற்ற
பழிமூடும் வெய்ய படர். (௯அ)

278. பார்க்க விழிசாம்பும் பன்னநா வாராது
வேர்க்க விதிர்விதிர்க்கு மெய்ய னுகில்—யார்க்கு
நினையத் துணுக்கெய்து நெஞ்சம்புன் காம
வினையத்துக் கீதோ விருந்து. (௯௯)

---

(274) கட்டு—கச்சு. கனதனம்—பருத்தமுலை. மட்டு—அளவு. மடம்—முனிவர் இருக்கை.

(275) கொற்றம்—வெற்றி. மதன்—மன்மதன். அஞ்சு அம்பு—ஐங்கணை:—தாமரை, மா, முல்லை, அசோகு, நீலோற்பலம். அவித்தல்—கெடுத்தல். திறல்—ஆற்றல்.

(276) முன்னம்—மனம். வலித்தல்—இழுத்தல். கீடம்—புழு.

(277) முடைநாற்றம்—தீநாற்றம். பழிமூடும் வெய்யபடர்—பழியினல் மூடப்பெற்ற கொடியநோய்.

(278) விழிசாம்புதல்—கண்கூசுதல். பன்னல்—சொல்லுதல். நா—நாக்கு. துணுக்கு—திடுக்கிடுதல். காம வினையம்—காமத்தாற்செய்யும் வஞ்சனை.

அம்மையார், நோய்கொண்ட முனிவற்கு உபசரித்தவிதங்கூறுதல்.

279. நீராட்டிப் புண்டுலக்கி நேர்மை புரிந்தன்பு
பாராட்டி யூசற் பசுங்கொடியாற்—றாராட்டிக்
கண்ணாளன் மாட்டுக் கசிந்துருகு வாளென்னே
விண்ணாளன் செய்த வினை. (க00)

280. அற்புப் பரிமளிக்க வட்டிட்ட கூழோடு
பொற்புப் பழுத்தமைந்த பூங்கோதை—நற்புகலா
மக்காரங் கூட்டி யலர்முகத்தோ டுண்பிப்பாண்
முக்கால மந்த முனிக்கு. (க0க)

281. வாளுங் கருவிளையு மாவடுவுந் தாமரையு
நீளுங் கணையு நிகர்கண்ணா—ளாளுந்தன்
னில்லாண்டு கொண்டாற் கிசைவாக விவ்வண்ணம்
பால்லாண்டு செய்தாள் பணி. (க0உ)

முனிவனுக்கு, அந்நோயினும் "நளாயனிக்குத்துன்பஞ் செய்தேனேயென்னும்" மனநோயே பெரிதானதெனல்.

282. படற்கரிய நோயுணரான் பக்கமுடன் கைப்மா
றிடற்கரிய நற்றொண் டியற்றுந்—தொடற்கரிய
தீயே யெனுங்கற்பின் றேவிக் கிரங்குமுள்ள
நோயே பெரிதுற்ற றெந்து. (க0ங)

முனிவன், அருந்ததி யெய்தியபுகழ் இவளுக்குமாவெனல்.

283. கஞ்சி யருந்துகையிற் கைவிரலொன் றற்றுவிழ
வஞ்சி யதைநீக்கி வானமுதா—யெஞ்சியதை
யேற்றருந்த வைய னிவட்கு முரித்தென்றான்
போற்றருந்த திக்காம் புகழ். (க0ச)

---

(279) ஊசல்—ஊஞ்சல். தாராட்டல்—தாலாட்டுதல். கண் ஆளன்—கணவன். விண் ஆளன் — விண்ணை ஆளும் இந்திரன்; விண் என்பதற்குத் தேவர் என்று பொருள்கொள்ளின், தேவர்களையாளும் முழுமுதற்கடவுள் எனவும் பொருள்படும்.

(280) அட்டல்—சமைத்தல். கூழ் — உணவு. நல்புகல் — இன்சொல். அக்காரம் — சருக்கரை. முக்காலம் — மூன்று வேளை. (நோய் கொண்டோருக்கு மூன்று வேளை உணவளித்தல் மரபு).

(281) இல் ஆண்டு—இல்லத்தை நடாத்தி. கொண்டான்—கணவன். நிகர் நீளுங்கண்ணாள் எனக்கூட்டுக.

(282) பக்கம்—அன்பு. உள்ளநோய்—மனநோய்.

முனிவன், அன்பு மிகுதியால் தன்னையும் மறந்து
நளாயனியைத் தழுவமுயன்றனெனல்.

284. தன்னை மறந்து தழுவத் தவன்முயன்றான்
பின்னை யனைய பெரியாளை—யென்னை
யவாவிற் படாரு மடியவர்கள் செய்யன்
புவாவிற் படுவரன்றோ வுற்று. (கOரு)

நோய்தொடர்காதை முற்றிற்று.

---

(283) கஞ்சி அருந்தல் — அன்னம் உண்ணுதல். வஞ்சி — வஞ்சிக்கொடி போலும் இடையினையுடைய நளாயனி. எஞ்சல்–மிகுதல். ஐயன்–முனிவன்.

(284) பின்னை—நப்பின்னைப் பிராட்டியார். அவா — ஆசை. படார்—அகப்படாதவர். அன்பு உவா—நிறைந்த அன்பு.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## பூவலஞ்செய்காதை.

### திருமால் துதி.

எங்கட் கிறைவ னெழினன் முகத்தோற்குந்
திங்கட் குடையோற்குந் தேவகிக்குங் கோசலைக்கும்
வையத் துதித்தாட்கு மாவிதர்ப்பன் றோகைக்கு
மையன் மகன்கணவ னும்.

முனிவன், நோய்தீர மூர்த்தம் தலம் தீர்த்தங்களைக்
காண எண்ணினனெனல்.

285. காலுங் கரமுங் கழியக் குறைந்தங்கந்
தோலுங் கழிந்தென்பு தோன்றலறற்---கேலும்
நலஞ்செய் தலமூர்த்தந் தீர்த்தங்க ளாடி
வலஞ்செய்யக் கொண்டான் மனத்து. (க)

தீர்த்தமாட விரும்பினேன் நோய்கொண்ட யான்
எங்ஙனஞ்செல்வதெனல்.

286. பற்றுக வார்த்தமைபொற் பாவை யினிதுயிருங்
கற்றுவி னன்புங் கனமதியும்—பெற்று
லனையாய் பலதீர்த்த மாடநசை கொண்டே
னினையாய் செலற்கென்று னேர்ந்து (உ)

அம்மையார், முனிவனைச்சுமந்து செல்ல
உடன்பாடு பெற்றரெனல்.

287. எழுதற்கு மேகற்கு மேலாமை கண்டு
தொழுதல் குழைகூந்தற் றோகை—பழுதற்ற
தன்னு ருயிரென்னத் தக்கா னருள்பெற்றுண்
மன்னுறு செல்ல மதித்து. (ந)

---

(துதி) இறைவன்—தலைவன் (கடவுள்). திங்கள்குடையோன்—மன்மதன். வையத்து உதித்தாள் — பூமியிற்றோன்றிய சீதை. விதர்ப்பன்—விதர்ப்பதேயமன்னனாகிய பீஸ்மகன். தோகை-மயில்போலும்சாயலை யுடைய உருக்குமிணி. ஐயன்—தந்தை.

(285) கழிய—மிகவும். அறற்கு ஏலும் — நீர்வதற்கியைந்த. மனத்துக் கொண்டான்—(முனிவன்) மனத்திலெண்ணினன்.

நாயகனைத் தலையிற் சுமந்து சென்றனெனல்.

288. பூவுந் தளிரும் பொருந்தியவேய்த் தொட்டிலிலே
மேவும் படிசெய்து மென்றாது—தூவு
மலையிற் றருவனத்தில் வன்சுரத்திற் சென்று
டலையிற் றலைவற் றரித்து. (௪)

திருமேனி, வருந்தாமலும் வெயில்படாமலும் கொடுபோந்தாளெனல்.

289. சாலையினு மல்லோன் றருந்தண் ணிலவினினு
மாலையினுங் கஞ்ச மலர்கின்ற—வேலையினும்
பொய்யிற் படாமொழியாள் போந்தா டவற்கொண்டு
மெய்யிற் படாது வெயில். (௫)

திருப்பதிகள்தோறுஞ் சென்றனெனல்.

290. நாலையிட்டத் தோடு நனிநுகர்வா னாமென்று
மாலையிட்ட கேள்வன் மனம்போல—வேலையிட்ட
நேத்திரத்தாள் கொண்டுய்த்தா ணீர்த்துறைசேர் மூர்த்திகரச்
சேத்திரங்க டோறுந் திரிந்து. (௬)

தீர்த்தமாட்டி மூர்த்திகளைச்சேவிக்கச்செய்து அன்பினூட்டுவாளெனல்.

291. தீர்த்தங்க ளாட்டித் திருக்கோயில் கொண்டருளு
மூர்த்தங்கள் சேவித்து முற்றியபின்—சேர்த்தங்கண்
விண்மறைக்கும் பூங்காவில் வேட்டுண்டி யூட்டுகிற்பா
ளெண்மறைதேர் தக்காற் கினிது. (எ)

---

(286) பற்று ஆக—பொருத்தமாக. வார்த்து அமை பொன்—பொன்னினால் வார்த்து அமையப்பெற்ற. கற்று ஆ—கன்றையுடைய பசு. கனமதி—சிறந்த அறிவு.

(287) எழுதற்கு—எழுவதற்கு. ஏகல் — நடந்துசெல்லல். ஏலாமை—பொருந்தாமை. அல்குழை கூந்தல் — இருளும் வாடும் கூந்தல். தோகை—நளாயனி. தக்கான்—தகுதியையுடைய முனிவன்.

(288) வேய்—மூங்கில். தாது—பூம்பொடி. சுரம்—பாலைவனம். தரித்தல்—தாங்குதல்.

(289) சாலை—இருமருங்கும் மரங்கள் நிறைந்த வழி. அல்லோன்—சந்திரன். கஞ்சம் மலர்கின்றவேலை—விடியற்காலம்.

(290) நாலை:—அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினை. (இது மணக்கும்போது சொல்லும் உறுதிமொழி). கேள்வன்—நாயகன். உய்த்தல்—செலுத்தல். சேத்திரம்—முத்தித்தலம்.

(291) அங்கண்—இடமகன்ற. தக்கான்—முனிவன். எண்மறை—யாவராலும் மதிக்கப்படும் வேதம்.

நைமிச முதலிய திருப்பதிகட்குற்றரெனல்.

292. வனங்கொண்ட நைமிச மாயை யயோத்தி
மனங்கொண்ட மாவதரி மாற்சேர்—புனங்கொண்ட
கங்கைக் கரைக்கண்டங் காந்தற் கொடுபோந்தாண்
மங்கையர்கை கூப்பு மயில். (அ)

காசிப்பதிக்குற்றரெனல்.

293. மணிகன் னிகையின் மலர்க்கரத்தா லாட்டி
யணிகன்னி யம்மைவிசா லாட்சி—பிணிகன்னல்
வில்லானை வென்ற விசுவேசன் சேவைசெயற்
கில்லானை வைத்தா ளெதிர். (கூ)

கங்கையைக்கடந்துசெல்ல எண்ணினரெனல்.

294. சோகங் கடந்து சுகமெய்தத் தாதையர்நீற்
ருகங் கடக்கவர சாய்தவத்தான்—மாகங்
கடந்துற்ற கங்கை கடக்கமனங் கொண்டாண்
மடந்துற்ற மாண்புடைய மான். (க0)

295. தாழ்ந்தகல மேகந் தனித்துயர்ந்த தண்டலைசூழ்ந்
தாழ்ந்தகல மானதெய்வ வாற்றினிடைப்—போழ்ந்தகல
நாவாய் விடுவார்க்கு நாமேது செய்வதென
வீவாய்ந் தனண்மா திருந்து. (கக)

ஓடம்விடும் வேட்டுவத்தலைவன், அம்மையாரோடு
அளவளாவுதல்.

296. ஆயிரநா வாய்க்கதிப னென்ற வருளுடையான்
றாயவன்னாய் நீயென்றன் றொல்குலமோ—நோபுடையான்
கந்தனோ சோதித்துக் காண்கின்ற னேவென்றான்
சிந்தைநோ யுற்றாளைத் தேர்ந்து. (கஉ)

---

(292) வனம்—அழகு. மனம் கொண்ட மா வதரி—அன்பர்கள் மனத்தைக் கவரும் திருவதரியாச்சிரமம். மால்—திருமால். புனம்—வயல். கங்கைக்கரைக்கண்டமென்பது ஓர் திருமாற்றலம். மயில்—நளாயனி.

(293) மணிகன்னிகை — காசியிலுள்ளதோர் சிறந்த கங்கைப்படித்துறை. அணி—அழகு. கன்னி—இளமை. பிணி—கட்டமைந்த. கன்னல் வில்லான்—கரும்புவில்லையுடைய மன்மதன்.

(294) தாதையர்—மூதாதையராகிய சகரர். நீற்றாகம்—சாம்பரான உடல். அரசு-பகீரத மன்னன். மாகம் கடந்து உற்ற கங்கை-ஆகாயத்தைக் கடந்து பூமியையடைந்த கங்கை. மடம் — இளமை. மான் — நளாயனி.

(295) அகல—செல்ல. அகலம்-விசாலம். தெய்வ ஆறு-கங்கை. போழ்ந்து அகல—பிளந்துகொண்டு செல்ல. நாவாய்-ஓடம். ஈவு-கொடுத்தல்.

அம்மையார், தம்வரலாற்றைச்சொல்லிக்
கங்கையைக் கடப்பிப்பாயெனல்.

297. வான்பட்ட ஞான வரம்புகண் டானிவற்கு
நான்பட்ட வாளாகு நம்பியெமை—மீன்பட்ட
வாற்றைக் கடக்க வருள்கென்று ளின்னுரைநற்
பேற்றைப் பெறுகவெனப் பெய்து. (கங)

வேட்டுவத்தலைவன், தேனுந்தினைமாவும் படைத்தல்.

298. செந்தினையின் மாவுந் தெளிதேனு முக்கனியு
முந்தினைய முன்னர்வைத் துண்டருளச்—சிந்தனை
பற்றத்தா வென்று பரிந்துரைத்தான் கானவர்கோன்
சுற்றத்தா ரோடுந் தொழுது. (கச)

கங்கையாற்றைக்கடந்து தென்கரையடைதல்.

299. உண்டுகந்த மாதவனோ டோடத்தி லேற்றுவித்துத்
தொண்டுகந்த வேடர் தொழுமதிபன்—கொண்டுகைத்துப்
பாகீ ரதிமதுரப் பண்மொழியைச் சேர்ப்பித்தான்
பாகீ ரதிக்கரைத்தென் பால். (கரு)

அம்மையார், நாயகனைச்சுமந்து
நடந்தாரெனல்.

300. தோற்றங் கரையத் தொடர்நோய் புடையானை
யாற்றங் கரைசேர்த் தருளாசி—யேற்றங்குக்
குன்றவனைந் தேகக் குலமா னடந்திட்டா
டன்றவனை யேந்தித் தடத்து. (கசு)

---

(296) என்தன்தொல்குலமோ — என்னுடையபழமையானவேட்டுவக்குலத்திற்றோன்றிய வள்ளித்தெய்வமோ. கந்தன்—முருகன். சிந்தைநோய்—நாயகனுக்கு நோயுற்றதைப்பற்றிய மனக்கவலை.

(297) வான்பட்ட—மேம்பட்ட. பட்ட ஆள்—வாழ்க்கைப்பட்ட மனைவி. நம்பி — உயர்திணை யாண்பாற் சிறப்புப்பெயர். மீன்பட்ட — மீன் உலவும். கடக்க என்பது கடக்கச்செய் என்னும் பிறவினைப் பொருளில்வந்தது. பேறு—அறப்பயன். உரை பெய்து—சொல்லி.

(298) முக்கனி:—வாழை, மா, பலா. உந்து இனைய — சிறந்த இத்தகையவைகளை. சிந்தனை பற்று அத்தா—கருதவேண்டும் அய்யனே.

(299) உகைத்தல்—செலுத்தல். பாகு ஈர் அதிமதுரம் பண்மொழி—சருக்கரைப்பாகுபோன்ற குளிர்ந்தமிகவும் இனிமைவாய்ந்த பண்ணமைந்த சொல்லையுடைய நளாயனி. பாகீரதி—கங்கை.

(300) தோற்றம்—பிறப்பு. கரைந்து — பிரிவாற்றாமையால் மனம்வருந்தி. குன்றவன்—மலையில் வசிக்கும் வேடுவன். தவன்—கணவன்.

### வடமதுரை துவாரகை முதலிய திருப்பதிகட்சூற்றரெனல்.

301. சீரார் வடமதுரை செல்வத் திருத்துவரை
யோரார் வளத்தவந்திக் கெய்தினரற்—பேரார்வக்
கோதா வரியமுனை கோமதியின் வாணியென
வோதா ரரியபுன லுற்று. (௧௭)

### திருவேங்கடமலைக்குச் சென்றரெனல்.

302. பண்ணவர்க்கும் பண்டிதர்க்கும் பார்த்திபர்க்கும் பாமரர்க்
விண்ணவர்க்குந் தத்தம் விருப்பளிப்பா—னெண்ணக் [கும்
கருவேங் கடமலைக்குக் கைதந்தா னைக்கண்டார்
திருவேங் கடமலைக்குச் சென்று. (௧௮)

### கச்சித்திருக்கோபுரம் கண்டாரெனல்.

303. செந்தமிழின் பின்சென்ற சீதரன்கைச் சங்கன்ன
வந்தமிழ்த வண்ண மடவனஞ்சேர்—கந்தமிகுங்
கஞ்சவயற் கச்சிக் கவின்கோ புரங்கண்டார்
விஞ்சவயற் சென்று வியந்து. (௧௯)

### கச்சித்திருப்பதியை அடைந்தாரெனல்.

304. பண்கொண் டளிக்கூண் பரிசு கொடுத்துயர்ந்து
விண்கொண்ட பைஞ்சோலை மேவுவயற்—றண்கொண்ட
தோட்டகப்பூ வாவிபல தோய்ந்துற்றார் வான்றொண்டை
நாட்டகப்பூங் காஞ்சி நகர். (௨௦)

---

(301) துவரை — துவாரகை. ஓது ஆர் அரியபுனல் — சொல்லும் பயன் நிறைந்த தெய்வநதி.

(302) பண்ணவர்—முனிவர். கருவேம் கட மலை—பிறவியை வெந்தொழியச்செய்த மதம்பொழியும் யானையாகிய கசேந்திராழ்வான். விருப்பளிப்பானாகிய கைதந்தானைக் கண்டார் எனமுடிக்க.

(303) சீதரன்—இலக்குமியை மார்பிற்றரித்த திருமால். அமிழ்தவண்ணம் மடம் அன்னம் — பால்போலும் வெண்ணிறமும் இளமையுமுள்ள அன்னம். விஞ்ச வியந்து கண்டார்—மிகவும் பாராட்டித்தரிசித்தார். (செந்தமிழின் பின்சென்றதென்றது கணி கண்ணன், திருமழிசையாழ்வார் இவர்கள்பின் சென்றதை.)

(304) அளி — வண்டு. ஊண்பரிசு — உணவாகிய தேன்பரிசு. விண்கொண்ட—ஆகாயமளாவிய. வயல்—கழனி. தோடு அகம் பூ—அகவிதழ்களையுடைய மலர். தொண்டைநாடு அகம்—தொண்டைநாட்டின்கண். வாவி—தடாகம்.

திருக்கச்சித்தெருக்களின் சிறப்பு

305. திருவிழாத் துன்னுகின்ற தேரகல்வ மன்றற்
பெருவிழாக் காண்கின்ற பேணும்—பொருவிலா
மாதவர்க டேவர் வருகின்ற நீடெருக்கள்
போதவுள வந்தப் புரம். (உக)

திருக்கோயில்களின் சிறப்பு.

306. நாற்றிசையார் நாட்டை நடுநின்று காப்பதுவிண்
மேற்றிசையார் கொண்டாடு மேன்மையது—நோற்றிசைந்
வேண்டி யளித்ததமிழ் வேதங்கொ ளாலயங்க [தார்
ளீண்டியதத் தொன்மை யெயில். (உஉ)

அந்தணர்களின் சிறப்பு.

307. பொருளாக மாவியிவை போற்றுவதில் யார்க்கு
மருளாகத் தத்தமபோ லன்பாய்த்—தெருளாக
மத்தினடை பெற்ற மறையவர்பல் லோருளதப்
பத்திநடை பெற்ற பதி. (உங)

புலவர்களின் சிறப்பு.

308. பாட்டுங் கொடுத்துப் பரிசுபெற்ற மெய்த்தலையை
மீட்டுங் கொடுத்த விமலனென—நாட்டுங்
கலையுடைய செஞ்சொற் கவிவாணர் தாம்வாழ்
தலையுடைய தந்தத் தலம். (உச)

கடைவீதிகளின் சிறப்பு

309. அப்பன்றாய் வீடாவா னத்திகிரி வள்ளலென்ப
வொப்பன்றாய் மற்றெல்லா முட்கொண்டு—வெப்பன்றாய்
நாவணங்கள் சொல்லி நவையில் பொருள்விற்கு
மாவணங்கண் மல்கு மவண். (உரு)

---

(305) மன்றல் பெருவிழா — திருமணத்திருவிழா. பேணல் — பணிதல். பொருவு—ஒப்பு. போத—மிகவும். புரம்—நகரம்.

(306) ஆர்-வளம்நிறைந்த. நால்திசை நாடு:—விரிஞ்சிபுரம், சோளங்கிபுரம், சிவபுரம், தொந்திபுரம். நோற்று இசைந்தார் — தவத்தால் அருள் வாய்ந்த தொண்டர்கள். ஈண்டல்—நெருங்குதல். தொன்மை—பழமை. எயில்—நகரம்.

(307) பொருள் ஆகம் ஆவி—உடல், பொருள், ஆவி. தெருள் ஆகமத்தின் நடை—தெளிந்த வேதாகமத்தின் ஒழுக்கம். பத்தி நடைபெற்ற—தெய்வபக்தி நிறைந்த.

(308) மெய்த்தலை—உண்மையான தலை. விமலன்—புலவர் பெருமானாகிய ஒட்டக்கூத்தர். கவிவாணர்—பாவலர். வாணர் ; வாழ்நர் என்பதன் மரூஉ.

**மாளிகைகளின் சிறப்பு.**

310. ஆக்க முடைய தருளுடையார் வாழ்வதுமே
லாக்குந் துவசத்த தோங்கலென—நோக்கத்த
தான்ற நலமிக்க தாய்ந்த தொழிலதுவாந்
தோன்றநகர் மாடத் தொகை. (உசா)

**கணவனைச் சிரமேற்கொண்ட அம்மையார்,**
**வைசியர் வீதியினும் மன்னர் வீதியினும் சென்றாரெனல்.**

311. சருவநீ ராட்டித் தவற்கொண்டு சென்று
டருவினேர் மூவணிகர் தாம்வாழ்—திருவம்
பொருந்துமணி வீதியினும் பொற்கூல மன்னர்
திருந்துமணி வீதியினுஞ் சேர்ந்து (உஎ)

**செங்குந்தர் வீதியிற் சென்றாரெனல்.**

312. மண்காத் தலின்மிக்க மானங்காப் பான்வேட்டுக்
கண்காத்த நெய்தொழிலைக் கைக்கொண்ட—விண்காத்த
சேனா திபன்றுணைவர் செங்குந்தர் வீதியுற்றாள்
ஞானா திபனோடு நன்கு (உஅ)

**நகர மாந்தர்கள், அம்மையாரைக்கண்டு**
**வியந்து துதித்தார்களெனல்.**

313. மூக்கின் விரல்சேர்த்து மோவாயில் கைசேர்த்து
வாக்கின் வியந்துரைத்து மாநகரார்—நோக்கித்
துதிசெய்யப் போயினா டோகையர்தங் கற்பு
விதிசெய்ய வந்திட்ட மின். (உகூ)

---

(309) அன்பன் தாய் வீடு ஆவான் அத்திகிரி வள்ளல் என்ப — தந்தையும் தாயும் ஆவானும், மோட்சமளிப்பானும் அத்திகிரியிலெழுந்தருளிய வரதராஜப்பெருமானாகிய வள்ளலென்பர். மற்று எல்லாம்—(தாய், தந்தை, வீடுதவிர) மற்ற யாவும். வெப்பு அன்றாய் — கடுமையில்லாமல். நா வண்ணங்கள் சொல்லி—வாக்குநயம்பேசி. நவை—குற்றம். ஆவணம்—கடைவீதி.

(310) ஆக்கம்—செல்வம். துவசம்—கொடி. ஓங்கல்—மலை. நோக்கம்—பார்வை. ஆய்ந்த தொழில்—செவ்விய வேலைப்பாடு. மாடம்—மாளிகை. தோன்று அ நகர்—தோன்றும் அந்த நகரம். தொகை—கூட்டம்.

(311) சருவநீர்—கச்சியிலுள்ள சர்வதீர்த்தம், எல்லாப் புண்ணியதீர்த்தங்களுமாம். தருவின் நேர் — ஈகையில் கற்பகத்தருவையொத்த. மூவணிகர்:—பூ வைசியர், கோ வைசியர், தன வைசியர்.

(312) மிக்க—சிறந்த. விண்காத்த சேனாதிபன்—சுப்பிரமணியன்.

(313) வாக்கு—வாய். வியத்தல் — அதிசயித்தல். கற்புவிதி — கற்பின் றன்மை இன்னதெனும்முறை.

வீதிகள் பலகடந்து ஏகம்பன் கோயிலுக் குற்றரேனல்.

314. மழைதங்கு மாட மறுகு பலநீத்
திழைதங்கு நுண்ணே ரிடையா—டழைதங்கும்
பூவடிசேப் பேறப் புனிதற் கொடுசேர்த்தாண்
மாவடிசே ரீசன் மருங்கு. (௩0)

திருக்கச்சபேசம் முதலிய சிவதலங்களுக்குற்றரேனல்.

315. திருக்கச்சி யீச்சுரனைச் சீர்க்குமர கோட்டத்
திருக்கச்சி பத்தா லிருவர்—நெருக்கச்சி
வந்தவனை மார்பனை மாதுகா மாட்சியைச்
செந்தவனைச் சேவிக்கச் செய்து. (௩க)

ஊரகம் முதலிய திருப்பதிகளுக்குற்றரேனல்.

316. ஊரகத்தும் பாடகத்து மொண்டிருவெஃ காவிடத்துங்
காரகத்து மட்டபுயங் கத்துமெழி—னீரகத்தும்
விண்டுவைத்தா னேத்த விரிஞ்ச னனையானைக்
கொண்டுவைத்தா ளப்பூங் கொடி. (௩உ)

அத்திகிரிக்குற்றரேனல்.

317. ஆவி யனையா ளருகுய்ப்பச் சேவித்தான்
மேவி யனைத்துலகும் வேண்டுபெருந்—தேவியினைச்
சங்கத் திகிரித் தடக்கை வரதனைப்
பொங்கத் திகிரி புகுந்து. (௩௩)

---

(314) மழை—மேகம். மறுகு—வீதி. நீத்தல்—கடத்தல். தழைதங்கும்பூ—தழைத்த இதழ்கள் பொருந்திய தாமரைமலர். சேப்பு — சிவப்பு. மா அடி சேர்—மாவின்கீழ் எழுந்தருளிய.

(315) சீர்க்குமரகோட்டத்து — அழகிய குமரகோட்டத்திலெழுந்தருளிய. இரு கச்சு இபத்தால்—துணையான கச்சணிந்த (முலைகளாகிய) யானைகளால். இருவர் நெருக்க—(வள்ளி, தெய்வானை என்னும்) இருவரும் நெருக்க. சிவந்த — (அதனால்) சிவந்த. வனை — (மாலை முதலியவைகளணிந்து) அலங்கரிக்கப்பட்ட. மார்பன் — மார்பையுடைய சுப்பிரமணியன். செம் தவன்—செவ்விய தவத்தையுடைய முனிவன். இரு + கச்சு இன்பது எதுகைநோக்கி மிகுந்தது. (315, 316 இவ்விரண்டும் குளகம்.)

(316) விரிஞ்சன் — பிரமன். பூங்கொடி — பூங்கொடிபோன்ற நளாயனி. ஊரகம், பாடகம், திருவெஃகா, காரகம், அட்டபுயங்கம், நீரகம் என்பன கச்சியிலுள்ள திருப்பதிகள்.

(317) ஆவி — உயிர். அருகு உய்ப்ப — சமீபத்தில்கொண்டுபோய்விட. பெருந்தேவி — அத்திகிரியில் எழுந்தருளிய பெரிய பிராட்டியார். வரதன்—வரதராஜப்பெருமான். பொங்கு—உயர்ந்த. சங்கு அ திகிரி என்பதிலுள்ள அகரம் உலகறிசுட்டு.

திருவண்ணுமலை தில்லைத்திருச்சித்திரகூட முதலிய
தலங்களுக்குற்றனெனல்.

318. பானதியுந் தெய்வப் பதிபலவுந் தாமணுகி
வானதியு மிந்தும் வளர்சடையாற்—கானதிரு
வண்ணு மலைதில்லை யஞ்சித் திரகூட
நண்ணு மதித்தார் நனி. (ரு௪)

திருக்குடந்தை திருத்தஞ்சை முதலிய
தலங்களுக்குற்றனெனல்.

319. குடந்தை திருத்தஞ்சை கூடலூர் கஞ்ச
மடந்தை திருவற்சன் வாழு—மிடந்தைத்த
நாகை தலைச்சங்க நாண்மதிய மின்னனசென்
றேகை தலைப்பட்டா ரோர்ந்து. (ருரு)

காவேரியாற்றையடைந்தாடினளெனல்.

320. தங்கமலர் முத்தந் தரங்கக் கரத்தேந்தி
யங்கமலத் தாளி லருச்சிக்கக்—கொங்கமலப்
பூவேரி யாரளகப் பூவை யடைந்திட்டாள்
காவேரி யாற்றங் கரை. (ருசா)

321. நோக்குவிக்குந் தீவினையை நோன்பிற் படிந்தார்க்குப்
போக்குவிக்கும் பொன்னி புனிதமுறத்—தேக்குவிக்கு
மாதிநூல் வல்லவனே டாடினு ளம்மருங்குற்
பாதிநூ லன்னுள் பரிந்து. (ருஎ)

---

(318) பால்நதி—பாலாறு. வான்நதி—கங்கை. இந்து—சந்திரன். நண்ணு—அடைந்து.

(319) குடந்தை—கும்பகோணம். கஞ்சமடந்தை—இலக்குமி. திருவற்சன்—திருமால். இடந்தைத்த—இடமமைந்த. நாகை — திருநாகை. தலைச்சங்க நாண்மதியம்—ஓர் திருமால்திருப்பதி. ஓகைதலைப்படல்—களிப்பில் அழுந்தல்.

(320) தங்கம் — பொற்பொடி. தரங்கம்—அலை. கொங்கு அமலம் பூ — மகரந்தந்தங்கிய புனிதமான மலர் (களும்). வேரி—வாசனை (யும்). ஆர்—நிறைந்த. அளகம்பூவை—கூந்தலுடைய நளாயனி. காவேரி யென்னும் பெண் அருச்சித்து வணங்க அம்மையார் அங்குச்சென்றார் என்க.

(321) நோ குவிக்கும்—நோயையுண்டாக்கும். நோன்பில்—விரதத்தோடு. படிதல்—மூழ்குதல். பொன்னி—காவேரியாறு. ஆதி நூல் தேக்குவிக்கும் வல்லவன் — வேதத்தை நிறையக்கற்று வல்லவனான முனிவன். அம்மருங்குல்—அழகிய இடை. காவேரியாறு பரிசுத்தமடைய நளாயனியம்மையார் மூழ்கினுரென்க.

திருவரங்கத்துக்குற்றனல்.

322. வானங் கடவு மதிலேழு மண்டபமும்
பானந் தனவனமும் பார்த்தார்க—ளானந்த
மாவுலகத் தாரும் வணங்கு மரங்கமெனும்
பூவுலக வைகுந்தம் புக்கு. (௩அ)

திருவரங்கநாயகனைச் சேவித்தாரெனல்.

323. இரவி வழித்தோன்ற லீர்ங்கமலத் தோனைப்
பரவி யுலகுய்யப் பாரிற்—றாவந்த
பெம்மானைத் தாயைப் பிரணவவி மானத்தை
யம்மானைந் தார்கண்டா ராங்கு. (௩௯)

சம்புகேச்சுரனைச் சேவித்தாரென்ல்.

324. பூவம் பிகைசாந்தம் பூதி முதலாய
மாவம் பிகைசாத்தி வந்திக்க—மேவம்
புருவானை யானை யுரியானைக் கண்டார்
திருவானைக் காவிற் றெரிந்து. (௪௦)

வைகையிற்றேய்ந்து, மதுரையம்பதிக்குற்றனல்.

325. விடாதகை வில்வேந்தர் வெந்நிடுதற் கண்டு
படாதகை யான்மோகப் பட்ட—தடாதகைத்
தாயார் புரக்குந் தமிழ்ச்சங்கக் கூடலுற்றார்
தூயார் புனல்வைகை தோய்ந்து. (௪௧)

---

(322) பால்—பக்கம். நந்தனவனம்—பூஞ்சோலை. ஆனந்த மா உலகத்தார்—பேரின்பகரமான பரமபத நாட்டிலுள்ள நித்தியமுத்தர்கள். அரங்கம்—திருவரங்கம்.

(323) இரவி வழித்தோன்றல்—சூரியகுலத்திலே வந்த (இட்சுவாகு) மகாராசன். கமலத்தோன்—பிரமன். பரவல்—வழிபடல். பெம்மான்—திருவரங்கநாயகன். தாய் — உலகமாதாவாகிய திருவரங்க நாயகி. பிரணவ விமானம்—பிரணவகாரமான அரங்கவிமானம். அம்மானைந்தார்— (எம்பெருமானைக் காணவிடாமல் இடையே மறைக்கும்) அந்த மாயையொழிந்து விடுப்பட்ட முனிவனும், அம்மையாரும்.

(324) பூ—மலர். வம்பு இகை—வாசனையைச்சிதரும். சாந்தம்—சந்தனம். பூதி—விபூதி. மா அம்பிகை—பெருமை பொருந்திய உமாதேவியார். மேவு அம்பு உருவான் — பொருந்திய புனலுருவான சிவன். திருவானைக்கா—சம்புகேச்சுவரம். அம்புருவான் என்றது பஞ்ச தலங்களுள் ஒன்றாகிய அப்புத்தலமென்பான். (சிவனை மணக்க வேண்டி உமாதேவியார் பூசிக்கிறார் என்பது தலபுராணம்).

### சேதுவைச் சேவித்தாரெனல்.

326. கற்பாந் தனக்குவையைக் காரிகையார் பூடணத்தை
யற்பாந் தனதுயிரை யாங்கடைய—வெற்பா
லிலங்கைக்குச் செல்வா னிராமனமை சேது
தலங்கை குவித்தார்க டாம் (சஉ)

### தாமிரபரணி முதலிய புனலாடி, தொலைவில்லிமங்கல முதலிய திருப்பதிகட்குற்றரெனல்.

327. பொற்றாமிரபரணி பூங்கன்னி யாகுமரி
யற்றா மிருநதிக ளாடினராற்—சொற்றாந்
தொலைவில்லி மங்கலமுந் தூயகுரு கூருங்
கலைவில்லி புத்தூருங் கண்டு. (சங)

### திருச்செந்தூர் முதலிய தலங்களுக்குற்றரெனல்.

328. நேமித் திருச்செந்தூர் நெல்வேலி குற்றால
மாமித் தகைய வரும்பதிகள்—காமித்த
வண்ணஞ்சே விக்க வலஞ்செய்வித் தாடவணைக்
கண்ணஞ்சே லன்னாள் களித்து. (சச)

### மலைநாட்டுத் திருப்பதிகளும், சாரதாபீடமும் சேவித்து, நந்திதுர்க்கமலையினருகடைந்தாரெனல்.

329. நந்திதுர்க்க மென்னு நகத்தி னருகடைந்தார்
தந்திவர்க்க மிஞ்சுந் தடநாட்டில்—வந்தியர்க்க
நீரதா மாலயத்து நீர்த்தடத்து மேல்கடற்குஞ்
சாரதா பீடத்துஞ் சார்ந்து. (சரு)

---

(325) விடாத கை வில்வேந்தர் — கையினின்றும் நீங்காத வில்லையுடைய அரசர். வெந் இடுதல் — புறமுதுகுகாட்டல். மோகம் படா தகையான் பட்ட—மோகப்படாத தன்மையனான சிவபெருமானால் மோகிக்கப்பட்ட. தடாதகைத் தாயார்—மீனாட்சியம்மையார்.

(326) கற்பாம் தனக்குவை—கற்பாகிய செல்வத்திரள். காரிகையார் பூடணம்—பெண்களது சிரசிலணியும் அணி. அற்பு ஆம் தனது உயிரை—அன்பே உருக்கொண்டதுபோலும் (இராமன்) தன் உயிராகிய சீதாப்பிராட்டியாரை. இராமன் வெற்பால் அமை சேது எனக் கூட்டுக.

(327) பொன்—அழகிய. அற்று—அத்தன்மையது. சொல் தாம்—புகழ் தாவும். கலை—நூலால் புகழப்பட்ட.

(328) நேமித்திருச்செந்தூர்—கடற்கரையிலுள்ள திருச்செந்தூர். நெல்வேலி-திருநெல்வேலி. அம் சேல்—அழகிய கெண்டைமீன்.

(329) நகம்—மலை. தந்திவர்க்கம்—யானைத்திரள். தடம்நாடு—மலைநாடு. வந்தி அர்க்கம் நீரது ஆம்—வணங்கும் பொன்மயமாகும்.

**தீர்த்தபலனுல், முனிவனுக்கு நாடோறும் விருத்தியாகும் புண் ஆறிற்றேயல்லாமல், அம்மையார் கொடுத்த சாபந்தீரவில்லையெனல்.**

330. பாபந்தீர் பன்னீர் படிந்து மடந்தைதரு
சாபந்தீர் வுற்றதிலை சார்ந்துதினங்—கோபந்தீர்
துங்கத் தவன்புண்ணை யாற்றுவிக்குந் தோயபலன்
பங்கப் படாத படி. (சகூ)

**முனிவனும் அம்மையாரும் நந்திதுர்க்கமலையருகுற்றபோது, வானில் மேகந்தழைமிற்றெனல்.**

331. முத்தத் தரிய முறுவ னிறத்தேகி
நத்தத் திரைமாந்தி நன்றிலங்குஞ்—சித்தத்
திருவளகம் போலுஞ் செறிந்ததியன் மின்னற்
றருவளகம் வானிற் றவழ்ந்து. (சஎ)

**மேகமெழுந்தமை, இந்திரனேவலால் முனிவற்கும் அம்மையார்க்கும் நீராட்ட எல்லாத்தீர்த்தங்களையும் மொண்டுகொண்டு வந்ததுபோலுமெனல்.**

332. பொன்னாட் டரசேவப் பூதலத்து மற்றுமுள்ள
முன்னாட் டருப்புனல்கண் மொண்டுகொண்டு—மின்னாட்டத்
தானடி யவ்விருவர்க் காட்டவெழுந் தாற்போலும்
வானாடி வந்த மழை. (சஅ)

**வானம் வில்லிட்டமை, கற்பரசிக்குச் சூட்டிய வாகைமாலைபோலும் மேகமுழக்கம், வெற்றிமுரசம்போலுமெனல்.**

333. தானே மலைந்து தவம்வெக் கிடச்கண்டு
மானேமக் கற்பரசின் வாகைக்காய்—வானேம
வில்லிட் டதுமாலை வேய்ந்தென்னப் பேரிகைபோற்
செல்லிட் டதுகார் செறிந்து. (சகூ)

---

(330) மடந்தை—நளாயனி. துங்கம் — பரிசுத்தம். தோயம் பலன் — தீர்த்த மகிமை. பங்கம்—பழுது.

(331) முறுவல் — பல். நத்தம் திரை — சங்குகள் வாழுங்கடல். நன்று இலங்கும் சித்தம் திரு—நன்மையே குடிகொள்ளும் மனதையுடைய அம்மையார். அளகம்—கூந்தல். இயல் மின்னல் தரு—சாயலைப் போலும் மின்னல் வீசும். வளம் கம்—வளப்பம் பொருந்திய மேகம்.

(332) பொன்னாட்டு அரசு — இந்திரன். முன்நாட்டு — முதன்மையாக நாட்டப்படுகின்ற. மின் நாட்டம்—மின்னலாகிய கண். மழை—மேகத்தின் தோற்றம்.

**மழைபெய்தமை, அம்மையாரைத் தேவமாதர்கள்**
**அருச்சித்த பூமழைபோலுமெனல்.**

334. நம்மனையார்க் கேற்றத்தை நாட்டவந்த நாயகமென்
றம்மனையார் வத்தேத்தி யாதித்தர்—தம்மகளிர்
பூமாரி பெய்தென்னப் பூங்கற்பென் றோங்குநகத்
தேமாரி பெய்த திரைந்து. (௫0)

**அம்மையார், முனிவனை மழையில் நனையாமற்**
**காத்தாரெனல்.**

335. இடாமனைக் கெய்தியெய்தி யேங்குமிர வோர்போற்
படாமனைய தாருதொறும் பாய்ந்து—விடாமழையிற்
றானனைந்து மெய்யாற் றவனனையா மற்காத்தா
டேனனைந்த கூந்தற் றிரு. (௫௧)

**பெய்த மழையால், அம்மலையினின்றும் பெண்ணையாறும்**
**பாலாறும் பெருகி, வயல்கடோறும் பாய்ந்து**
**எங்கும் தழைக்கச் செய்தனவெனல்.**

336. குலமாதர் கைசேர் குடும்பமென்மே லோங்கி
நலமாதற் போனகத்து நண்ணீர்—பலமான
பெண்ணையின்பா லாறாய்ப் பெருகிற் றணங்கிசைபோற்
பண்ணையின்பா லெங்குப் பரந்து. (௫௨)

---

(333) மலைதல்—போர் செய்தல். மால் — பெரிய. நேமம் — நியமம். வாகை—வெற்றி. வான் எம வில் இட்டது–சிறந்த பொன்மயமான வில்லைக்கொண்ட தன்மை. மாலை—வாகை மாலை. பேரிகை—வெற்றிமுரசு. செல் — இடி. கார் வில்லிட்டது கற்பரசின் வாகைக்காய் மாலை வேய்ந்தென்ன, செல்லிட்டது பேரிகைபோல் என அனுவயிக்க.

(334) நம் அனையார்க்கு–நம்போன்ற பெண்மக்களுக்கு. எற்றம்–மேன்மை. அம்மனை — நளாயனி அம்மையாரை. ஆதித்தர் தம் மகளிர்—தேவமாதர்கள். பூம் கற்பு என்று ஓங்கும் நகத்து — அழகிய (அம்மையாரின்) கற்புப் போலும் உயரிய நந்திதுர்க்கமென்னும் மலையின்மீது. எ, அசை.

(335) இடா மனை—பிச்சையிடாத வீடு. இரவோர்—யாசிப்போர். படாம் அனைய தாரு–கூடாரம்போலும் பரந்த பெரிய மரம். மெய்யால்–உடலினால். தேன் நனைந்த—தேனால் நனைந்த. திரு–நளாயனி.

(336) கை சேர்—கை வயப்பட்ட. நகத்து நண் நீர்—மலையில் படிந்த நீர். பெண்ணை இன் பாலாறு ஆய்–இனிய பெண்ணையாறும் பாலாறுமாகி. அணங்கு—நளாயனி. இசை—கீர்த்தி. பண்ணை—கழனி.

(337) வருக்கை—பலா. மாழை—மா. ஆரம்–சந்தனம். தாழை–தென்னை.

337. வாழை கமுகம் வருக்கை செழுஞ்சாலி
மாழை கரும்பு மகிழாரந்—தாழை
பலமோங்க வாய்க்காலிற் பாய்ந்ததுபா ரெங்கு
நலமோங்க மேய நதி. (ருங)

அம்மையார், முனிவனைச்சுமந்து சாலுவநாட்டிற்
சுற்றரெனல்.

338. ஆங்கிருந்தண் ணீராட்டி யப்பா னதிக்கரையின்
பாங்கிருந்த மூர்த்தம் பலகாட்டித்—தேங்கனிந்த
வாய்மை விழியாள் வளர்சா லுவம்புக்கா
டுய்மை விரதற் சுமந்து. (ருச)

சாலுவ நகர்க்கணிகைமாதர் வீதியிற்சென்றரெனல்.

339. மற்கோலத் தோளான் மனுநெறியான் சாலுவக்கோன்
றற்கோல மாநகரிற் றானடந்தாள்—பொற்கோல
மேகலையா ரின்மை விலைக்கீவார் கந்தர்ப்பத்
தேகலையார் வாழுந் தெரு. (ருரு)

வந்துகண்ட வேசியர் உடனே இல்லிற்புகுந்தாரெனல்.

340. நோய்க்கண் ணருவருத்தோ நோன்மை யறியாதோ
தாய்க்கண்டுஞ் சீற்றமெனத் தாம்பயந்தோ—போய்க்கண்டு
பொற்புக்காய் நாணியோ பொங்கொளியைக் காணிருட்போ
விற்புக்கா ரன்னா ரிடைந்து. (ருசு)

அவ்வேசியரினத்திலே பிறந்த பதுமையென்னுமொருத்தி
உட்புகாமல் ஆவலோடு நின்றளெனல்.

341. மீனாறு முப்பாழி வெண்முத் தெனவேசை
மானாறுஞ் சந்ததியில் வந்தன்னார்—பானாறும்
பொல்லா வழக்கிற் புகாதா டனித்துநின்ரு
ணல்லாவ லோடு நயந்து. (ருஎ)

---

(338) தேம் — தேன். மை விழியாள் — மை தீட்டிய கண்களையுடைய நளாயனி.

(339) மல்—வலிபொருந்திய. கோலம்—அழகு. பொன்கோலம் மேகலை—பொன்னலாகிய அழகிய மேகலை என்னும் ஆபரணம். இன்மை விலைக்கீவார்—வறுமையை விலக்கு விற்கின்றவர். கந்தர்ப்பன் தே கலையார்—மதனாகம நூலில் வல்ல வேசிகள்.

(340) நோன்மை—(அம்மையாரின்) பெருமை. தாய்க்கு அண்டும் சீற்றம் என — தாய்போன்ற நளாயனியம்மையார்க்கு (தீச்செயலையுடைய நம்மைக்கண்டால்) கோபம் உண்டாமென. போய்க்கண்டு — வெளியே வந்து பார்த்து. இடைதல்—பின்னடைதல்.

**பதுமை இத்தன்மையளெனல்.**

342. பெற்றா ளிழிமொழியைப் பேணா ளிளமையெழி
லுற்றா ளினிய ளுயர்கலைகள்—கற்றாளின்
னாக்கத்தா ளன்புடையா ளாய்ந்தில் லறம்வேண்டு
மேக்கத்தா ளந்நே ரிழை. (௫௮)

343. மணமனைவி யார்நோவ மைந்தரைவஞ் சிக்கும்
பிணமனையா ரில்லிற் பிறந்தேன்—குணமனையாய்
வேண்டா துலகெனினும் வேண்டேன் பிறிதென்று
பூண்டா ளணிவிரதம் பொன். (௫௯)

**பதுமையை, அம்மையாரும் முனிவரும், அன்னாரைப் பதுமையும், கண்டார்களெனல்.**

344. ஒளியையொளி காணுமென வுற்றுருகி நின்ற
கிளியை யொளிர்நிடதக் கிள்ளை—யளியைமிகுங்
கண்கண் டனடவனுங் கண்டா னணங்குவந்தாள்
பண்கண்ட திம்மையெனப் பார்த்து. (௬௦)

**முனிவனும் அம்மையாரும் மறைந்துபோக, பிரிவாற்றாது பதுமை துன்புறல்.**

345. வீதிவழிச் சென்றார் வெகுதூரம் போய்மறைய
வேதிவழிச் சோகமுற்ற மெல்லியலைத்—தாதிவழி
கண்ணீரை மாற்றிக் கவலா தகத்துய்த்தா
ளுண்ணீரை முற்று முணர்ந்து. (௬௧)

---

(341) மீன் நாறும் உப்பு ஆழி வெண் முத்து என — புலால் நாற்றமுள்ள உப்புக் கடலிற் பிறந்தும் (எவரும் கொள்ளத்தக்க) வெள்ளிய முத்தைப்போல். மால் நாறும்—அஞ்ஞானம் தங்கும். அன்னார் பால்—அவ்வேசியரிடத்து. நாறும்—தோன்றும்.

(342) பெற்றாள்—தாய். ஆக்கம் — செல்வம். இல் அறம் வேண்டும்—(ஒருவனை மணந்து அவனோடு நடாத்தும்) இல்லறத்தை விரும்பும். ஏக்கம்—ஏங்குதல். நேரிழை-செவ்விய ஆபரணத்தையணிந்த பதுமை.

(343) மண மனைவியார்—விவாகம் செய்துகொண்ட மனைவிகள். மைந்தர்—ஆண்மக்கள். குண மனை—நற்குணமுள்ள (தக்க) மனைவி. பிறிது—வேசித்தொழில். பொன்-பதுமை. பிறந்தேன் என்பது இரண்டாம் வேற்றுமைத்தொகை.

(344) ஒளியை ஒளி காணும் என—கதிரொளியைக் கண்ணொளி காணுமா போல். நின்ற கிளி—பதுமை. நிடதக்கிள்ளை—நளாயனி. அளி ஐ மிகும் கண் — அருண்மிக்க கண்ணினால். அணங்கு — பதுமை. இம்மை பண் கண்டது என—(வேசியரில்லில் பிறந்த) இப்பிறப்புச் செம்மையுற்றதென்று. அளியை என்பதிலுள்ள ஐ சாரியை.

அந்நகரிலோர்சத்திரத்திற்றங்கி இருத்தல்.

346. குத்திரத்தைத் தாழ்த்துமகக் கோசம் பலகடந்தோர்
சத்திரத்தைச் சார்ந்து தவனிருந்தான்—சித்திரத்தைத்
தீட்டுவார்க் காதாரச் செவ்வி பெறுமடந்தை
யூட்டுவார் காய்கனிக ளுண்டு. (கூஉ)

முனிவன், வேறு என்செய்தாலும் பொறுத்துக்கொள்ளும் குலப்பெண்களும், தன் கணவன் அயலொருத்தியை உற்றுப்பார்க்கினும் பொறுக்கார், என்பதனை நளாயனியிடம் காண எண்ணினனெனல்.

347. வெறுக்கார் குலமாதர் வேறென்செய் தாலும்
பொறுக்கார் கொழுநனயற் பொய்சேர்—முறுக்கார்வத்
தையலரைக் காணினுமாந் தன்னிற்காண் பானினைந்தான்
மையலரைத் தான்றன் மனத்து. (கூங)

குறிப்பாலுணர்ந்துதவும் நீ இன்று என்மனம் விரும்பியதொன்றை உதவாததென்னெனல்.

348. மொழியாத போது முகக்குறிப்பாற் கண்டன்
பொழியா தவையளிப்பா யோதா—யழியாத
நெஞ்சா ரித்ததனை நேராத தென்னென்று
னஞ்சா தரிக்கா தவன். (கூச)

அம்மையார், மேன்மையேதங்கும் திருவுளத்தில் தாமின்று வேண்டியதைப்பேதையறிகிலேன், ஏவிற்புரிவலெனல்.

349. மாணவா வுந்தயையு மன்னுந் திருவுளத்திற்
காணவா வைப்பேதை காணகில்லேன்—சேணவாம்
போதத்தா யேவிற் புரிவ லவையென்றுள்
பாதத்தா ரன்பிற் பணிந்து. (கூரு)

---

(345) வேதி வழி—திண்ணையிடம். மெல்லியல்—பதுமை. தாதி—பதுமையின் தோழி. அகம்—வீடு. உள்நீர்—பதுமையின் உள்ளத்தின் தன்மை.

(346) குத்திரம்—மலை. தாழ்த்தல்—கீழ்ப்படுத்தல். அகம்—மாளிகை. கோசம்—வீதி. சித்திரத்தைத் தீட்டுவார்—ஓவியர். செவ்வி—அழகு. மடந்தை—நளாயனி. வார்—நேர்மை. சார்ந்து உண்டு தவனிருந்தான் எனக்கூட்டுக.

(347) வேறு என் செய்தாலும் — வேற்றப்பெண்டிரைக் கருதுதலொழிய தீயகாரியங்களைச் செய்தாலும். பொய்சேர் — பொய்ம்மையான. முறுக்கு—பிணக்கு. ஆர்வம்—ஆசை. தையலர்—(அயல்) பெண்டிர். தன் இல் காண்பான்—(அவ்வகையில்) தன் மனைவியாகிய நளாயனியின் மன நிலைமையைக் காணும்பொருட்டு. மையல் அரைத்தான்—மயக்கத்தையொழித்த முனிவன்.

**முனிவன், பதுமையை என்னேடிணங்க**
**இசைவிப்பாயெனல்.**

350. தாமார்க்கு மாளாகாத் தையலர்வாழ் வீதியினும்
போமார்க்கத் தோர்மாது போந்தாளைத்—தேமார்ந்த
சேவா யமுதுண்டுச் சேரத் திருத்தற்கு
மேவாயங் கென்றான் விரைந்து. (௬௬)

**அம்மையார், அதற்கும் உடன்பட்டாரெனல்.**

351. தோகை குயிலினங்க டோற்கு மியலிசையா
ளோகை குலவ வுடன்பட்டா—ளீகைக்கு
மன்னாத வின்னுயிரென் றாலு மறுத்தில்லை
யென்னாத வள்ள லென. (௬௭)

**பதுமையைக் காணும்பொருட்டு அவள்**
**முன்றிலில் கோலம் புனைந்தாரெனல்.**

352. ஆய பதுமைப்பே ரங்கனையின் முற்றத்திற்
றாய பசுஞ்சாணந் தூர்த்தமைத்து—மேயபுரை
தீரு மெழிற்கோலந் தேர்ந்தணிந்தாண் மாதரசி
யாரு மெழாமுன் னெழுந்து. (௬௮)

**பெண்கள் சூழ்மீ, அரிய அக்கோலத்தை**
**இமையாது பார்த்தார்களெனல்.**

353. ஓவியர்க்கே வொண்ணா வுயர்கோல மென்னிற்கட்
காவியர்க்கே தாகுங் கனம்பயில—மேவி
யமர மடந்தையர்க ளாமென்னக் கண்டார்
நிமிர மடங்கியபின் றேர்ந்து. (௬௯)

---

(348) அழியாத நெஞ்சு — நிலைதவறாத என்மனம். நேர்தல் — தருதல். அஞ்சு ஆதரிக்காதவன்—ஐம்புலவாசையற்ற முனிவன். அஞ்சு—ஐந்து என்பதன் போலி; இஃது தொகைக்குறிப்பு.

(349) மாண் அவா—மேன்மையில் விருப்பு. பேதை—அறியாமையையுடைய நான் (நளாயனி). சேண் அவாம்—உம்பருலகத்தாரும் விரும்பும். போதம்—ஞானம்.

(350) தாம் ஆர்க்கும் ஆள் ஆகாத் தையலர் — தாம் ஒருவருக்கும் வரைவிற்படாத வேசிகள். மார்க்கம்—வழி. போந்தாளை—(மனையினின்று வெளியே) வந்த பதுமையை. சே வாய்—சிவந்தவாய். திருத்தல்—ஒருப்படுத்தல்.

(351) தோகை — மயில். இயல் — சாயல். இசை—சொல். ஓகை—மகிழ்ச்சி. ஈகை — கொடை. (இயலால் தோகையும், இசையால் குயிலினமும் தோற்கும் என நிரை நிரையாகக் கொள்க).

(352) அங்கனை—பெண். முற்றம்—வீட்டின் முன்பாகம். தூர்த்தல்—தெளித்தல். மேய—தகுதியான. புரை தீரும்—ஒப்பற்ற, குற்றமற்ற. அணிதல்—அலங்கரித்தல். மாதரசி—நளாயனி.

### கோலத்தைக்கண்ணுற்ற பாங்கியர்கள் பதுமைக்குரைத்தல்.

354. நாங்கள் புனைந்திலோ நாட்டகத்துங் கண்டதில்லை
யாங்கறிந்தா ரிட்டா ரெழிற்கோலம்—பூங்கட்
சுரும்பாருங் கோதையே சொல்கென்றார் சொல்லிற்
கரும்பாரும் பாங்கிமார் கண்டு. (எ0)

### மஞ்சத்து ஓர் முனிவனிருக்கவும், எதிரே ஓர் பெண் நிற்கவுமாகப் புனைந்த அக்கோலத்தைப், பதுமை காணுதல்.

355. பதனாட் டியநோக்கப் பாவை யெதிரோர்
மதனாட்டி போனிற்ப மஞ்சத்—திதனாட்டி
யானந்த யோக னமரற் புதங்கண்டா
டானந்தக் கோலத் தலத்து. (எக)

### அக்கோலத்தைப் பதுமை பணிதல்.

356. ஐந்தங்கம் பூவி லமையப் பணிந்துள்ள
நைந்தங்க ணீர்தூய் நயந்தவர்தம்—பைந்தங்கத்
தாட்கடிமை யாவனெனத் தான்றணித்துண் ணாநிருந்தாள்
வேட்கடிமை யாகாள் வியந்து. (எஉ)

---

(353) உயர் கோலம் — நளாயனியம்மையாரிட்ட உயரிய கோலம். கண் காவியர் — நீலோற்பல மலர்போலும் கண்களையுடைய பெண்கள். கனம் பயில—அதன் செவ்வியைக்கற்க. திமிரம்—இருள். அமா மடந்தையர் என்றது இமையாமல் பார்த்தமையால்.

(354) பூம் கள் சுரும்பு — பூவின் தேனை விரும்பும் வண்டு. சொல்லில் கரும்பு ஆரும்—சொல்லின்கண் கரும்புபோல இனிமையான.

(355) நோக்கம் பதம் நாட்டிய பாவை — பார்வையை காற்பெருவிரலினாட்டிய ஓர்பெண். மதன் ஆட்டி—இரதி. மஞ்சம் — கட்டில். இதன் நாட்டி—இதமானவைகளைப்பேசி. ஆனந்தயோகன்—இன்பமயமாய் விளங்கும் யோக நித்திரையையுடையவன் (முனிவன்). அமர் அற்புதம்—வீற்றிருந்த (படிபுனைந்திருந்த) அதிசயம்.

(356) ஐந்து அங்கம் :—முழந்தாள் இரண்டு, கை இரண்டு, தலை ஒன்று. உள்ளம் நைந்து—மனம் நெக்குவிட்டுருகி. நயந்தவர்தம்—விரும்பிக் கோலத்தையணிந்தவர் யாரோ அவருடைய. வேட்கு அடிமை ஆகாள்—மன்மதனுக்கடிமைபடாத பதுமை.

(357) தாலம்—உலகு. தகவு—மேன்மை. மின்னாள்—நளாயனி. சீலத்தால் மிக்காள்—ஒழுக்கத்தால் மிகுந்த பதுமை. நீலத்து ஆர் நத்தம்—நீலநிறமுள்ள நிறைந்த இருள். துஞ்சுதல்—உறங்குதல். சூழ்தல்—ஆலோசித்தல்.

பதுமை, மறுநாளிரவில் உறங்காது காத்திருந்து அம்மையாரைத் தெரிசித்தாளெனல்.

357. காலத்தா ரேத்துந் தகவுடைய மின்னுளைச்
சீலத்தான் மிக்கா டெரிசித்தா—ஞாலத்தார்
நத்தம்போ முற்கோல நாட்டுகையிற் காத்திருந்து
சுத்தமாய்த் துஞ்சாது சூழ்ந்து. (எரு)

அம்மையாரின் திருவடியிற் பணிந்தாளெனல்.

358. பாதத் துகளுக்கும் பற்றாதேன் முற்றத்தைப்
போதத் துலக்கும் பொருளறியே—னோதத்
திருவே யெனவடியிற் சேர்ந்தபய மென்றாண்
மருவே யெழிலளக மான். (எசு)

அம்மையார், பதுமையைத் தழுவியெடுத்து மதித்தாரெனல்.

359. ஏவற் பணிக்கென்னை யேற்றருள வேண்டுமென்ற
காவற் படுமனத்துக் கன்னிகையை—மேவற்பிற்
றூவி யெடுத்துத் தழுவி மனங்கொண்டா
டூவி யனநடையா டுப்பு. (எ௫)

என் கணவனேவலின்வண்ணம் நின்பால் யாசிக்க வந்தேன் அஃதருள்வாயெனல்.

360. பூசிக்கத் தக்க புனிதன் மொழிந்தவண்ணம்
நேசிக்கத் தக்க நெறியுடையா—யாசிக்க
வார்த்தியொடு நின்பா லடைந்தே னருளென்றாள்
சீர்த்தியொடு நேர்திகழுந் தேன். (எசா)

---

(358) பற்றாதேன்—பொருந்தாதவெனது. ஓதத்திருவே — பாற்கடலிற் பிறந்த இலக்குமிபோன்ற அம்மையே. மரு எய் எழில் அளகமான்—வாசனையுள்ள அழகிய கூந்தலையும், மான்போன்ற மருண்ட பார்வையுமுடைய பதுமை.

(359) காவல் படு மனம்—அறிவின்வயப்பட்ட மனம். கன்னிகை—பதுமை. தூவி அன நடையாள்—இறகுடைய அன்னம்போன்ற நடையினையுடைய நளாயனி. துப்பு—பதுமையின் மேன்மையை. (தூவியன நடையாள் கன்னிகையைத்தழுவி (அன்னாளின்) துப்பு (ஐ) மனங்கொண்டாள் என மாற்றிப்பொருள் கொள்க).

(360) புனிதன்—தூய்மைக்குணமுடைய முனிவன். ஆர்த்தி—விருப்பம். நேர்—செம்மை. தேன்—தேன்போன்ற இனிய சொல்லையுடைய நளாயனி. சீர்த்தி—மிகுபுகழ்.

**பதுமை, என் உடல் பொருள் ஆவி மூன்றும் உன்னதாக உகந்தளித்தேன் கொள்கவெனல்.**

361. எற்குரிய யாக்கை யிரும்பொருளின் னுவியிவை
யுற்குரிமை யாக வுகந்திட்டே—னிற்குரிய
நூலனைய தூயாய் நுகரப் பெறுகென்று
ளாலனைய துத்தத் தவள். (எஎ)

**அம்மையார், உயிரினுஞ்சிறந்ததும், அஃதொழியின் பெண்ணென்னுந் தன்மையற்றதுமான ஒன்றை, இரக்கின்றேன் மனமுளதாகிலளிப்பாயெனல்.**

362. ஆவிக் கதிக மதுவொழியிற் பெண்ணென்று
பாவிக்க மாட்டாத பண்பினது—காவிக்க
ணல்லாய் மனமுண்டே னல்கென்று ணங்கைமுனிக்
கில்லாளா யங்கை யெடுத்து. (எஅ)

**கோலத்தாலும் குறிப்புரையாலும் இரந்தது, கலவியெனவுணர்ந்த பதுமை, முனிவனையே கணவனுகவெண்ணி இசைந்தாளெனல்.**

363. கோலத்தி னுலுங் குறிப்பி னுரையாலு
மாலத்தி னுலு மமுதாலுஞ்—சேலொத்
தமைத்த தனநோக் கவளறிந்தி சைந்தாள்
குமைத்தபவத் தான்பதியாக் கொண்டு. (எகூ)

---

(361) இற்கு உரிய நூல் அனைய தூயாய்—இல்லற நூல்போன்ற தூய்மைக் குணமுடைய (நளாயனி) அம்மையே. நுகர்தல்—அனுபவித்தல். ஆல்அனையதுத்தத்தவள்—ஆலிலைபோன்ற வயிறுடையப்பதுமை.

(362) காவிக் கண் நல்லாய்—நீலோற்பலமலரை யொத்த கண்களையுடைய பதுமையே! நங்கை — பெண்ணிற்சிறந்த நளாயனி. முனிக்கு இல்லாளாய்—முனிவன் (சொற்படி நடக்கக்கடமைப்பட்ட) மனைவி யானதால். நல்கு என்றுள்—(கேட்கத்தகாததைக்) கொடு என்றுள்.

(363) சேல் ஒத்து ஆலத்தினுலும் அமுதாலும் அமைத்தது அன நோக்கவள் — சேல்கெண்டையையொத்து விடத்தினுலும் அமிர்தத்தினுலுஞ் செய்ததொத்த கண்களையுடைய பதுமை. குமைத்த பவத் தான் பதியாக்கொண்டு—பிறவியையொழித்த முனிவனையே தனக்கு நாயகனுகக்கொண்டு.

(364) தய்யல் நீர் சற்றும் தளராள் — பெண்தன்மையில் சற்றும் சோர்தவில்லாதாள் (பதுமை). மய்யல்—மயக்கம், மோகம். போத— அவ்விடம் செல்ல. தய்யல், மய்யல், அய்யன் இவை முறையே தையல், மையல், ஐயன் என்பவற்றின் முதற்போலி. பூங்கோதை— நளாயனி.

அம்மையார், முனிவனை வணங்கிப் பதுமை இசைந்தாள் எழுந்தருளவேண்டுமெனல்.

364. தய்யனீர் சற்றுந் தளராதா டானிசைந்தாண்
மய்யனீர் சற்று மனத்தில்லா—வய்யனே
போதக் கருணை புரிகென்றாள் பூங்கோதை
மேதக்க தாளில் விழுந்து. (அ0)

மறுமுறையும் அம்மையாரைச்சோதித்த முனிவன், மனமுருகி பதுமைக்கென்சொல்வதெனச் சிந்தித்தல்.

365. முடிப்பை யவிழ்க்க முயன்றிரட்டி யிட்ட
படிபைங் குழனிலைமை பார்த்துத்—துடிப்பைய
னண்ணினா னாதரித்த நாரிக்கென் சொல்வதென
வெண்ணினா னாவ திருந்து. (அக)

அன்றிரவு அம்மையாரோடு பதுமையின் மனைக்குறுதல்.

366. முல்லைவன மென்ன முழுவான மீன்பூத்த
வெல்லைவன வாச னெழுந்திட்டா—னொல்லைத்
தொழுது பரித்தேகத் தோகைமணி மாற்றம்
பழுது படாத படி. (அஉ)

பதுமை, வரவேற்று வணங்கல்.

367. தானமுது செய்யாது தம்பதிகட் கின்னடிசில்
வானமுது மான வளமிக்க—தேனமுது
கொண்டு சமைத்தன்பிற் கோரியெதிர் பார்த்தரிவை
கண்டு தொழுதாள் கழல். (அ௩)

---

(365) பைங்குழல்—பசிய கூந்தலையுடைய நளாயனி. துடிப்பு—மனத்துடிப்பு. ஐயன்—முனிவன். நண்ணுதல் — அடைதல். ஆதரித்த நாரி—பதுமை. ஆவது—மேல் தான் இயற்றவேண்டியதை.

(366) முழுவானம் மீன்பூத்த எல்லை — ஆகாய முழுதும் மீன்கள் காணப்பட்ட காலம்; (முன்னிரவு). வனவாசன் — வனத்தில்வதியும் முனிவன். ஒல்லை—விரைவு. பரித்தல்—சுமத்தல். தோகைமணி மாற்றம்—(முனிவனைக்கொண்டுவருவதாகப் பதுமைக்கு) நளாயனி சொல்லிய இனிய சொல்.

(367) தம்பதிகள்—முனிவனும் நளாயனியும். அடிசில்—உணவு. தேன் அமுது—தேனும் பாலும்; உம்மைத்தொகை. அரிவை—பதுமை.

(368) வலம் போந்து—வலமாகச் சுற்றிவந்து. ஏந்து ஆதனம் — உயர்ந்த இருக்கை. மகள்—பெண் (பதுமை).

### பூசித்து விருந்தளித்து மிச்சிலுண்டு களித்து இசைபாடுதல்.

368. பூந்தா ளிணைவிளக்கிப் பூவிட்டு மும்மைவலம்
போந்தாலஞ் சுற்றிப் புருந்தாரை—யேந்தா
தனத்தமரச் செய்தாள் சதிபதிக டாடன்
மனத்தமரச் செய்த மகள். (அச)

369. வருந்தோகை வாகனற்கு மாதரசி யாட்கும்
விருந்தோகை யோடளித்து மிச்சி—லருந்தோகை
கூழேந்தி யுண்டு குயில்வெட்கப் பாடினாள்
யாழேந்திச் செய்ய விசை. (அரு)

### அம்மையார், பதுமையோடு முனிவன் மகிழச்சமயந்தந்து விலகி இருத்தல்.

370. நாவின்பங் கொள்ள நயந்தமுது செய்தரிய
பாவின்பங் காதாற் பருகியபின்—மேவின்ப
மெய்த முனிக்கமைய மென்று தனித்தாடேன்
பெய்த மொழியாள் பிரிந்து. (அசு)

### முனிவன், பதுமையின் செய்கையை நளாயனி செய்கையேயாமென மதித்தல்.

371. மஞ்ச மலரணையின் வாயமரச் செய்தருணக்
கஞ்ச மலரனைய கால்வருடு—மஞ்ச
மனையாளின் செய்கை யனையதெனக் கொண்டான்
மனையாளின் செய்கை மதித்து. (அஎ)

---

(369) வரும் தோகை வாகனன்—மயில்போலும் சாயலையுடைய நளாயனியால் சுமக்கப்பட்டுவந்த முனிவன். மிச்சில் — எச்சில். அரும் தோகை—மேன்மை தங்கிய பதுமை. கூழ் — அடிசில். (அரும் தோகை என்பதை முதலாகக்கொண்டு, அருந்தோகை வருந்தோகை வாகனற்கும் என நேரே பொருள்கொள்க)

(370) பின்மேவுஇன்பம்—அதன்பின் அடையும் கலவி இன்பம். அமையம்—சமயம், தேன் பெய்த மொழியாள்—நளாயனி.

(371) அருணம்—சிவப்பு. அஞ்சம் அனையாள் — அன்னம்போன்ற நடையினையுடைய பதுமை. அனையது என — நளாயனியின் செய்கை போலுமென. மனையாள்—மனைவி. (நளாயனி). (மனையாளின் செய்கை மதித்து அஞ்சமனையாளின் செய்கை (யும்) அனையதெனக் கொண்டான் என அன்வயித்துப்பொருள்கொள்க).

(372) நங்கை—நளாயனி. சங்கை—அச்சம். உள் அவாம்—மனம் விரும்பும். பூங்குழல்—பதுமை. அகங்காண நாடினேன், என்பதினால் கலவியை விரும்பிலேன் என்பது பெறப்பட்டது.

பதுமையைப்பார்த்து உன்னுள்ளங்கொண்டதோர் வரங்கேளெனல்.

372. நங்கை யகங்காண நாடினே னன்னுளின்
றங்கை யனையாளே தந்திடுவேன்—சங்கையற
வுள்ளவா மோர்வரநீ யோதிடுகென் ளுன்வண்டு
கள்ளவாம் பூங்குழலைக் கண்டு. (அஅ)

பதுமை, இம்மையிற் பெறவியலாதேனும் மறுபிறப்பிலேனும் சிறந்த ஓர் பூமாலைக் கணவனைப்பெறவருள்வாயெனல்.

373. இம்மை யடைதற் கியைபில்லே னிற்பிறப்பா
லம்மை யடைதற் கருந்தவத்தோய்—செம்மை
புகழ்வலந்தாங் கேருடைய பூமாற்கில் லாளாய்த்
திகழ்வரந்தா வென்று டிரு. (அகூ)

முனிவன், அவ்வாறு வரந்தந்து அவ்விரவில் வனம்புகச் சென்றனெனல்.

374. அவ்வா றடைகவென வாசிமொழிந் தவ்விரவிற்
செவ்வா ரணியஞ் செலச்சென்றான்—கவ்வாயர் [பாற்
மத்துழக்கும் வெண்டயிர்போ லுள்ளுடைந்தாண் மற்றவர்
பித்துழக்கும் பேதை பிரிந்து. (கூ0)

வியாசர், அந்தப்பதுமையே சுபத்திரையாதும், மௌத்கலியன் நளாயனியால் சுமக்கப்பட்டு வனம்புகுந்தானெனல்.

375. வெற்றி சுபமுரசம் விம்முங் கடைத்தலையாய்
சுற்றிச் சுரும்பார் சுரிகுழலே—பெற்றி
மிகுந்த சுபத்திரையா மின்றாங்கப் போனான்
றகுந்தவனுங் கானத் தடம். (கூக)

பூவலஞ்செய்காதை முற்றிற்று.

(373) இம்மை—இப்பிறப்பு. இயைபு—தகுதி. இல் பிறப்பு—குடிப்பிறப்பு. அம்மை—மறு பிறப்பு. செம்மை—நடுநிலைமை. வலம்—வெற்றி. பூமான்—பூமியையுடைய மன்னன். இல்—மனைவி. திரு—பதுமை.
(374) செவ்—தழைத்துச் செவ்வனோங்கிய. கவ்வு—பெருமை. அவர் பால்—அம்மையாரிடத்தும் முனிவனிடத்தும். பேதை—பதுமை.
(375) சடைத்தலையான்—துருபதன். சுரிகுழல்—பதுமை. சுபத்திரை—கண்ணபிரான் திருத்தங்கையாகிய சுபத்திரை. மின்—நளாயனி.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## இன்பமெய்தியகாதை.

### திருமால் துதி.

மன்னுதழல் வந்தாட்கு மாளாத் துகிலளித்தோன்
பொன்னன் மகனுக்காப் பொற்றூ ணவதரித்தோன்
சின்னஞ் சிறுவற்குச் சிந்தாப் பதமளித்தோன்
முன்னமறை காணு முதல்.

**அம்மையார், பேரிருளில் காலால் வழிதேடிக்கணவனைக் கருதி நடத்தல்.**

376. அஞ்சாத பேய்க்கு மடைதற் கரிதென்னு
மெஞ்சாத காரிருளி லெய்தினள்கண்—டுஞ்சாதம்
மாதவத்தா னேவன் மருத மடமங்கை
பாதவத்தாற் றுற்ற படர். (க)

377. காலால் வழிதேடிக் கைதாங்கித் தன்றலையின்
மேலாகக் காதலனை வைத்துவிழி—போலாகங்
காத்தவன்றா ளுள்ளிற் கருதி நடைகொண்டாள்
கோத்தவத்தாற் பெற்ற கொடி. (உ)

**கள்ளர், களவாடிய பொருளை மாண்டவ்விய முனிவன் பக்கல்வைத்தேகக், காவலர் பொருளோடு அவனைக்கள்ளனென்று பிடித்துவர, ஆராயாது அரசன், தூக்கிலிடக்கட்டளையிடல்.**

378. கள்ளப் பொருடிருடர் கட்டிவைக்கப் பாங்கரதை
யுள்ள படியறியா னூழ்வினையான்—மள்ளர்க
ளார்த்துப் பிடித்துவர வாராயா மற்றூக்கிற்
சேர்த்திகென்றான் மன்னன் சினந்து. (ந)

---

(துதி) தழல் வந்தாள்—துருபதை. துகில்—சேலை. பொன்னன் மகன்—பிரகலாதாழ்வான். சிறுவன்—துருவன். சிந்தல்—கெடுதல். முதல்—ஆதிமூலமான திருமால்.

(376) எஞ்சுதல்—குறைதல். கண் துஞ்சல்—உறங்கல். மருத—மறுக்காத. மங்கை—நளாயனி. பாதவம்—மரம். படர்—வழி.

(377) விழிபோல்—தன் கண்ணைப்போல். ஆகம்—கணவனுடல். கோ—நளன். கொடி—சொடிபோலுமிடையையுடைய நளாயனி. (கோ—தவம் என்பது எதுகை நோக்கிக்கோத்தவம் எனவலிமிகுந்தது).

யோகவன்மையால் அவைகளொன்றுமுணராத முனிவன், தூக்கிற்றொங்கியிருத்தல்.

379. ஆண்டவ் வரசாணை யாற்கானிற் றூக்கிட்ட
மாண்டவ் வியனென்னு மாமுனிவன்—றாண்டவ்
வினைபுணர வில்லை விருக்கத்தி னான்றான்
றனைபுணரும் யோகத்தாற் றான். (௪)

மாண்டவ்வியன், தன்மீது தொட்டிற்றக்கலும் மிகச்சினந்து, சூரியனுதிக்க நின்கணவனையிழப்பாயென, அம்மையார்க்குச்சாபமிடல்.

380. கான்போதவ் வாற்றிற் கடுங்கழுவின் மேற்றாங்கும்
வான்போதத் தானைத்த மத்தறியா—டான்போதத்
தொட்டில் படவல்லற் றோய்ந்தான் சபித்திட்டான்
மட்டிற் படாச்சினம் வந்து. (௫)

381. காந்தனாற் கொண்ட கழிசெருக்கா யாய்வில்லா
வேந்தனாஞ் ஞைக்கு மிகச்செய்தாய்—நேர்ந்த
மதியிழந்த யாமம்போய் மார்த்தண்டன் றோன்றப்
பதியிழக்க வென்றான் பதைத்து. (௬)

அம்மையார், சூரியனுதிக்காமலிருக்கக் கட்டளையிடல்.

382. எற்காக்கும் பச்சை யெழுபுரவித் தேராற்குத்
தற்காக்குங் கொண்ட தவற்காக்க—விற்காக்கும்
மட்டளைந்த சில்லோதி வாரா தொழிகென்று
கட்டளை யிட்டாள் கடிது. (௭)

---

(378) பாங்கர்—பக்கத்தில். மள்ளர்—காவலாளர். ஆர்த்தல்—கட்டல்.

(379) தூண்டு அவ்வினை — தூண்டுகின்ற அவ்வூழ்வினையின் பயனாயுள்ள துன்பம். விருக்கம்—மரம். நாலுதல்—தொங்குதல்.

(380) கான் போது அ ஆற்றில் — காட்டுக்குச்செல்லும் அந்த வழியில். போதத்தான் — மெய்ஞ்ஞானமுடைய மாண்டவ்விய முனிவன். தமம்—இருள். போத—செல்ல. தோய்ந்தான் என்பது வினைமுற்று வினையெச்சம். (தொட்டிற்றாக்க முனிவன் அல்லலுற்றது யோக நித்திரையினின்று வெளிப்படுஞ்சமயத்தில்).

(381) ஆஞ்ஞை—சட்டளை. மதியிழந்தயாமம் — சந்திரனில்லாத இரவு. பதி என்பது இரண்டாம் வேற்றுமைத்தொகை.

(382) எல்—பகல். எழுபுரவித்தேரான்—எழுகுதிரைகளைப்பூட்டிய தேரையுடைய சூரியன். தன்காக்கும் கொண்டதவன்காக்க — தன்னைக் காக்கும்படியான கொண்டகணவனைக் காப்பாற்ற. (வில்காக்கும் சில் மட்டு அளைந்த ஓதி என மாற்றிப்பொருள்கொள்க.)

**கட்டளையின்படி சூரியன், உதிக்காமலிருந்தானெனல்.**

383. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழையென்னும்—பொய்யில்
மொழிக்கிலக்காய்ப் பானு முறைமை தவிர்ந்தான்
பழிக்கிள்ளை வாய்மொழிக்குட் பட்டு. (அ)

**காலம் நீடித்தும் பொழுதுவிடியாமையால், உலகத்தார் பலவாறு சிந்தித்தாரெனல்.**

384. காலங் கழியக் கழியக் கழிந்திலதா
லாலங் கடுப்ப வடுத்தவிருண்—ஞாலந்
துயின்று துயின்று துயில்வருகைக் காக
முயன்றுபசி யுற்றார் முதிர்ந்து. (கூ)

385. நிசியாவ தேகாத நேரென்னே மக்நிற்
பசியாவ தேதுண்ணப் பார்க்கிற்—சுசியாவ
தப்பாடு வோம்பித்த மாமோ கனவென்பா
ரிப்பாடு பட்டா ரிரைந்து. (கo)

**இரவு நீங்காதபோது, மாங்களும் விளர்த்ததென்றல், மற்றுயிர்களுக்குற்ற துன்பத்தைச்சொல்லுவாரரெனல்.**

386. குராத்தழைபூங் கோதைசொற் கொண்டெல்லோ னிற்க
விராத்தணிந்தே காமையினு லேய்ந்த—மராமரமும்
வாய்விளர்க்கு மென்றூல் வருமன் னுயிர்க்குற்ற
நோய்விளக்கு வாரார் நுவன்று. (கக)

---

(383) இலக்கு—இலக்கியம். பானு—சூரியன். முறைமை—நாடோறும் உதிக்கும் முறைமை. கிள்ளைபழிவாய்மொழி — கிளிப்பிள்ளையின் சொல்லையும் பழிக்கும் அம்மையாரின் மொழி. பழிக்கிள்ளை, என்பது எதுகைநோக்கி மிகுந்தது.

(384) கடுப்ப—உவமையுருபு. துயில்வருகைக்காக முயன்று—இரவு கழியாதிருக்கவே ஏனோ தூக்கம்வரவில்லையென்றெண்ணித் தூங்கமுயன்று. (கழியக்கழிய, துயின்று துயின்று என்னும் அடுக்கு மிகுதிப் பொருளில்வந்தது).

(385) நிசி—இரவு. எமம்—நள்ளிரவு. சுசி—ஆசாரம். அப்பு—நீர்.

(386) கோதை — நளாயனி. எல்லோன் — சூரியன். இரா — இரவு. மராமரம் — ஆச்சாமரம். வாய் விளர்க்கும் — (சூரியவெப்பமின்மையால்) உடல்வெளுக்கும். வரும் மன்னுயிர்—புடைபெயரும் நிலைபெற்ற உயிர்கள். (சரவுயிர்).

(387) உரம்—மார்பு. செய்யாள்—இலக்குமி. மலரைத்தேரான்—(செறுக்கினுல்) பூமாலையின் மேன்மையையுணராத இந்திரன். காத்துஇபம்—துதிக்கையையுடைய அயிராவதம் என்னும் யானை. ஐயன் — தூருவாசமுனிவன். (தூருவாசமுனிவன் சாபத்தால் எங்கும் இருண்டதைப்போன்றதென்பது கருத்து).

அக்காலம், தூருவாசமுனிவன் இந்திரற்குச்
சாபங்கொடுத்த காலம்போன்றதெனல்.

387. உரத்திற் றிருமா லுகந்தணியுஞ் செய்யாள்
சிரத்திற் றரிமலரைத் தேரான்—கரத்திபத்தின்
மேலெறிய வையன் வெகுண்டெழுந்த காலத்தைப்
போலறியத் தக்கதப் போது. (கஉ)

ஏழுநாள் வரையில் பொழுதுவிடியாதிருந்ததெனல்.

388. யாம மிமைப்பொழுதென் றேங்குமிளங் காளையரு
மேம மணிப்பூ ணிளையாரு—நாமமமை
பாழுநா ளூழி பலகொண்ட தோவென்ன
வேழுநாள் கண்ட திரா. (கங)

உலகத்தார், துன்பாற்றாது இறைவனை இறைஞ்சினரெனல்.

389. யாவுயிர்க்குந் தந்தா யிருங்கருணை வாரிதியே
பாவுயிர்க்குஞ் சீர்த்திப் பழமறையாய்—நோவுயிர்க்குத்
தோற்றுமற் காவென்று சொல்லித் துதித்தார்க
ளாற்றுமன் மண்ணோ ரடி. (கச)

தேவர்களும் இறைஞ்சினரெனல்.

390. மண்ணவர்கண் மாழ்கி மகத்தவிதந் தாரில்லை
பண்ணவர்க ளஃதாற் பசிவந்து—நண்ண
வுலகவா மண்ணறனை யுன்னினர்க டுன்பம்
விலகவா மென்று வியந்து. (கரு)

அம்மையார் இருந்தவனத்திற்குத் தேவர்களோடும்
இந்திராணியோடும் தேவராஜன், வந்தானெனல்.

391. முத்தேவர் சேர்வர் முதல்வநீ யஞ்சலெனு
மொத்தேவக் காதலியோ டுற்றனனு—லத்தேவர்
முன்னுடைச் சுந்தரியின் முன்வருதற் கஞ்சியவா
னன்னுட னன்னர் நடு. (கசு)

---

(388) இமைப்பொழுது—கண்ணிமைப்பொழுது. காளையர்—குமரர். ஏமம் மணிப் பூண் இளையார் — நவமணிகளிழைத்த பொன்னுபரணம் பூண்ட பெண்கள். நாமம்—அச்சம்.

(389) வாரிதி—கடல். பாவுயிர்க்கும் சீர்த்தி—பாவினால் பெறப்பட்டுள்ள கீர்த்தி. நோ—துன்பம். ஆற்றுமல்—(துன்பத்தைத்) தாங்கமுடியாமல். மண்ணோர்—உலகத்தார். அடி—இறைவன் திருப்பாதம்.

(390) அவி—தேவருணவு. பண்ணவர்—தேவர். அஃது—அவிதராமை. உலகு அவாம் அண்ணல் — எல்லாவுலகும் வேண்டும் முழுமுதற் கடவுள்; அண்ணல்—பண்பாகு பெயர்.

அன்னவாகனமூர்ந்து நாமகளோடு
பிரமனெழுந்தருளினனெனல்.

392. பூவிருந்த கூந்தற் புனிதை நலங்காண
நாவிருந்த வல்லி நனிவிரும்பத்—தூவி
யனவா கனத்தங் கடைந்தனனோர் நான்கு
வனவா னனத்து வரன். (கஎ)

ஏறூர்ந்து உமையோடு சிவனெழுந்தருளினனெனல்.

393. எண்ணான் கறஞ்செய் யிமாசலமா னல்லாடன்
கண்ணாகக் காக்குங் கவினறத்தை—மண்ணேகிப்
பார்க்கச்சிந் திக்கப் பரிந்தூர்ந் தெருதங்குச்
சேர்க்கச்சிந் தித்தான் சிவன். (கஅ)

கருடவாகனத்தூர்ந்து பூதேவி சீதேவிமார்களோடு
திருமாலெழுந்தருளினனெனல்.

394. அங்கமலை செய்கை யனைத்து மனங்கொண்ட
செங்கமலை யுள்ளத் திருக்குறிப்பிற்—றங்கமலை
மேலெழுந்து கார்மதியெல் மின்னிரண்டின் வந்ததென
மாலெழுந்து வந்தான் மகிழ்ந்து. (கசு)

---

(391) முத்தேவர்:—பிரமன், சிவன், திருமால். ஒத்து ஏவ—ஒன்றுபட்டுத் தூண்டுதல்செய்ய. காதலி — மனைவி. (இந்திராணி). சுந்தரி—அழகின்மிக்க நளாயனி. வான் நல் நாடன்—சிறந்த தேவநாட்டை யுடையவன். (இந்திரன்).

(392) புனிதை—பரிசுத்தை. (நளாயனி). நாவிருந்தவல்லி — கலைமகள். வன ஆனனம்—அழகியமுகம். வரன்—பிரமன்.

(393) எண்ணான்கு அறம் — முப்பத்திரண்டு தருமம். இமாசலமான் — பார்வதி. நல்லாள்—நளாயனி. கவின் அறம்—சிறந்த இல்லறம். பரிந்து ஊர்ந்து—விரும்பி எழுந்தருளி.

(394) அங்கு—அவ்வனத்தினிடத்து. அமலை—தூயநளாயனி. செங்கமலை—செந்தாமரைமலரிலெழுந்தருளிய இலக்குமி. உள்ளத்திருக்குறிப்பில்—திருவுளத்திற் கருதியவண்ணம். தங்கமலைமேல் எழுந்து — தங்கமலையின்மீதூர்ந்து. கார் — மேகம்; பண்பாகு பெயர். மதி எல் மின் இரண்டு இன் — சந்திரனோடும், சூரியனோடும், இரண்டு மின்னல்களோடும். மால்—திருமால். (தங்கமலை, மேகம் சந்திரன், சூரியன், மின்னல்கள் ஆகிய இவைகள் முறையே கருடாழ்வான், திருமால், சங்கு, சக்கரம், பூதேவி, சீதேவி களைக்குறிக்கவந்தன.)

(395) மூவர் — முன்சொல்லிய மும்மூர்த்திகள். மூத்தோன்—விநாயகக் கடவுள். சேய்—முருகக்கடவுள். தேவத்திரிபினர்—தேவர்களுக்குள் வேறுபாடான சித்தர், வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர் முதலானோர். யாழ்முனி—யாழ்வாசித்தலில் வல்ல நாரத முனிவன்.

திக்குப்பாலர்களும் முனிவர்களும் மற்றியாவரும் வந்தார்களெனல்.

395. மூவரெண்மர் மூத்தோன்சேய் முப்பத்து முக்கோடி
தேவருமத் தேவத் திரிபினரும்—யாவருமின்
யாழ்முனிமுன் னுன விருடிகளு நோய்கொண்டு
வாழ்முனிமுன் வந்தார் வனம். (உ0)

எதிர்சென்று வணங்க இயலாத மௌனத்கலிய முனிவன், இருந்தபடியே வணக்கினனெனல்.

396. முருகோடிப் பாயலங்கன் மூர்த்தியர்க டோன்ற
வொருகோடி சோதியொளி யோங்க—வருகோடி
யேத்தற் கியலாதா னேத்தினு னுள்ளன்பு
பூத்தங் கிருந்து புகழ்ந்து. (உக)

அம்மையார், கணவன் கட்டளையின்படி மும்மூர்த்திகளையும் தேவிமார்களையும் உபசரித்து வணங்கினளெனல்.

397. காந்த னுரையிற் கடிதேகி நாண்மலர்தூய்ச்
சேந்த மலர்ப்பதங்கள் சேவித்தாள்—போந்தருண்மும்
மூர்த்தியரைத் தேவிரை மும்மை வலம்வந்து
கீர்த்திமிகு மன்னன் திரு. (உஉ)

திருமகள், கலைமகள், மலைமகள் ஆகிய மூவரும் அம்மையாரைத்தழுவி வாழ்த்தினளெனல்.

398. வந்தித்த நல்லாளை வாரி யணைத்தன்பான்
முந்தித்த மாசி மொழிந்தனரால்—சிந்தித்
தலைமகளுஞ் செய்ய கலைமகளு மங்கண்
மலைமகளுஞ் சித்த மகிழ்ந்து. (உரு)

மாண்டவ்விய முனிவன், தூக்கிலிருந்து இந்திரனல் விடுவிக்கப்பட்டு மும்மூர்த்திகளைப் பணிந்தானெனல்.

399. மேனுன்ற மாண்டவ் வியனென்னு மாமுனிவ
னூனுன்ற மெய்யி லுறுத்தாமற்—றேனுன்ற
தார்மேக லூர்தி கரப்பணிந்தான் பொன்னந்தி
கார்மேக வண்ணர் கழல். (உச)

---

(396) முருகு—தேன். அலங்கல்—பூமாலை. மூர்த்தியர்—மும்மூர்த்திகள். சோதி—ஞாயிறு. அருகு ஓடி—பக்கத்தில் விரைந்துசென்று.

(397) சேந்த—சிவந்த. மும்மை — மும்முறை. மன்னன்திரு — நளச் சக்கரவர்த்திபெற்ற செல்வமாகிய நளாயனி.

(398) வந்தித்தல்—வணங்கல். முந்தி—முதலிலே. தம் ஆசி — தங்கள் வாழ்த்துதலை. அலைமகள்—திருப்பாற்கடலிற்றேன்றிய இலக்குமி. கலைமகள்—சரசுவதி. மலைமகள்—பர்வதராஜன்குமார்த்தி. (உமை).

**திருமால், திருவாய்மலர்ந்தருளினரெனல்.**

400. தேவி திருமுன்னர்த் தேவர் மகளிரொடு
மேவி வணங்கி வியந்துநிற்க—வாவியிற்றங்
காய்மலரா ளுத னருட்செல்வன் காப்பாளன்
வாய்மலரா நின்றான் மதித்து. (உரு)

**மாண்டவ்விய முனிவன், திருமாலின் கட்டளைப்படி சாபத்தைப்போக்கி அம்மையாரை வாழ்த்தினனெனல்.**

401. காந்தனே வன்மருக் காரிகையாட் காயாது
வேந்தனே போலும் வினைசெய்தாய்—சாந்தனே
மாற்றுகென மாற்றி மகிழ்நனொடு மங்கலவாழ்
வாற்றுகெனச் சொற்றா னவன். (உசு)

**மௌத்கலியமுனிவன், திருமால் சொல்லின்வண்ணம் தான் சாபம்பெற்ற அரசகோலத்தைக்காட்டினனெனல்.**

402. வேய்கொண்ட தோட்பூவை விம்மத் தொடர்ந்தோடி
வாய்கொண்ட வன்சொல் வழங்கியிழி—நோய்கொண்ட
மன்னுருவைக் காட்டென்ன வாய்ப்ப வதுகொண்டான்
றன்னுருவை மாற்றித் தவன். (உஎ)

**திருமால், அம்மையாரைப்புகழ்ந்து நின் கணவனுக்குற்ற நோயைப்போக்குவாயெனல்.**

403. பொற்புக்கு மேய புகழுக்குஞ் சொற்றிறம்பாக்
கற்புக்கு மற்புக்குங் கண்ணனையா—யிற்புக்க
பெம்மா னிவற்குப் பிணியகலச் சொல்லென்ன
வம்மா னிசைத்தா ளறிந்து. (உஅ)

---

(399) நாலுதல்—தொங்குதல். உறுத்தல்—வருத்துதல். தேன் ஆன்றதார்—தேன் நிறைந்த பூமாலையைதரித்த. மேக ஊர்தி — மேகத்தை வாகனமாகவுடைய இந்திரன். தர — தூக்கினின்றும் முன்னே கொண்டுவந்துவிட. பொன், அந்தி, கார்மேக வண்ணர்—முறையே பிரமன், சிவன், திருமால்.

(400) தேவி—நளாயனி. ஆய்மலர்—செந்தாமரைமலர். காப்பாளன்—உலகரட்சகனுகிய திருமால்.

(401) மரு — மாருத. காரிகை — நளாயனி. வேந்தனேபோலும் — நின்னைத்தூக்கிலிட்ட அரசனைப்போலும். மகிழ்நன்—கணவன். அவன்—மாண்டவ்விய முனிவன்.

(402) வேய் கொண்ட தோள் பூவை — மூங்கிலின் செவ்வியைக்கொண்ட தோள்களையும் நாகணவாய்ப் பறவைபோன்ற இனியசொல்லையும் உடைய நளாயனி. தவன்—மௌத்கலிய முனிவன்.

அம்மையார், அந்தொழுநோயை விலகெனலும்
அது தொழுதுபோயதெனல்.

404. நாயகனென் றோர்ந்தே னவின்றே னுருமறைந்து
போயகலென் றம்மை புகன்றவுட—னேயகன்ற
தாய்வதன்றி நின்பே ரறைந்தாலு மன்னுரைத்
தோய்வதில்லை யென்று தொழுது. (௨௯)

திருமால், அம்மையாரைப்பார்த்து மாண்டவ்வியன்
தான்கொடுத்த சாபத்தைமாற்றிவிட்டான்,
நீயும்சூரியனை வரச்சொல்லுவாயெனல்.

405. சாபந் தவிர்த்தான் றவமுனிவன் காரகிற்பூந்
தூபந் தழைக்குஞ் சுரிகுழலாய்—கோபந்
தணந்தழைத்தல் வேண்டுஞ் சவிதாவை யென்றான்
மணந்தழைத்த பைந்துளப மால். (௩௦)

அம்மையார் பணித்தவுடன் சூரியன், உதயமானானெனல்.

406. நித்திக்கு மென்சொற் றெரிவை பணிக்கவெய்யோ
னெத்திக்கு மேத்த வெழுந்தனனாற்—சத்திக்கும்
போராழி மீதம்மை பேற்றைக்காண் பான்போலு
மோராழித் தேரி லுகந்து. (௩௧)

மௌத்கலிய முனிவன், திருமால் சொல்லியபடி
கன்னிமாடத்தில் நளாயனிக்குக் காட்டிய
அழகிய உருவத்தைக்காட்டினானெனல்.

407. இன்ன லகல வெழுந்துபதஞ் சேவித்த
பின்னர் மறையவநீ பேதைக்கு—முன்னகரிற்
காட்டுருவங் காட்டுகெனக் காட்டினான் மாவலிபா
னீட்டுருவ மாயோன்முன் னின்று. (௩௨)

(403) கண்—விழி, இடம். இல் புக்க பெம்மான் இவற்கு—பன்னகசாலையில் அரசனாக வந்த இம்முனிவனுக்கு. (கண் அனையாய் என்பது அழகு, அன்பு, கற்பு, புகழ் ஆகிய இவைகளுக்கு இருப்பிடமானவளே என்றும் கண்ணைப்போன்றவளே என்றும் பொருள்படுதல் காண்க.)

(404) உரு மறைந்து—இருந்த இடத்தில் தழும்பின் உருவமும் இல்லாமல் மறைந்து. ஆய்வது அன்றி — அம்மையே நின் சரித்திரத்தை ஆராய்ந்து படித்தலும் கேட்டலுமாத்திரமேயல்லாமல். தோய்தல்-சேர்தல்.

(405) முனிவன் — மாண்டவ்வியமுனிவன். தூபம்—புகை. சவிதா—சூரியன்.

(406) பணித்தல் — கட்டளையிடல். வெய்யோன்—சூரியன். அம்மை பேற்றைக் காண்பான்போலும்—அம்மையார்பெற்ற பாக்கியத்தைக் காணவந்தான்போலும். ஓர் ஆழித்தேர் — ஒற்றைச் சக்கரத்தை யுடையதேர்.

திருமால், மௌத்கலிய முனிவனைப்பார்த்துக்
கன்னிமாடத்தில் நீவிர் இருவருங்கண்டவிக்கோலத்தோடு
பன்னெடுநாள் இன்பந்துய்க்கவென்றனெனல்.

408. கன்னிமா டத்தினீ கண்ட படிக்கிளமை
மன்னிமா ருத வனப்புடைய—பன்னியொடு
மிக்கோலத் தோடின்ப மெண்ணறுநா டுய்க்கவென்றான்
முக்கோலங் கொண்ட முதல். (௩௩)

சிவனும், பிரமனும், இந்திரனுமதுவே தக்கதென்றரெனல்.

409. ஆமாமவ் வண்ண மனகை நளாயனியுங்
கோமா தவமுனியுங் கொள்கவென—நாமாது
காந்தனுமு மாபதியுங் கட்டுரைத்தார் வானாளும்
வேந்தனுமா மென்றான் வியந்து. (௩௪)

அம்மையாரும், முனிவனும் மகிழ்ச்சியுற்றரெனல்.

410. தூரியங்க ளார்ப்பத் துறக்கத்தார் கற்பகப்பூ
மாரி சொரிய மறைமுனிவர்—சீரியம்பத்
தென்றலின்றே ரூர்வானுந் தேவியும்போல் வார்மகிழ்ந்தார்
மன்றலன்றே போலு மனம். (௩௫)

(407) இன்னல்—தொழுநோயாலுண்டாகிய துன்பம். பேதை–நளாயனி. முன் — மணக்கச்சம்மதித்த காலத்தில். நகரில் காட்டு உருவம்—மாவிந்தநகரத்தில் (கன்னிமாடத்தில் நளாயனி விரும்பும்படி) காட்டிய அழகிய உருவத்தை.

(408) மன்னல்—பொருந்தல். பன்னி—மனைவி. இக்கோலம்—இப்போதுள்ள இளமையும் பேரழகுமுள்ள வடிவம்.

(409) அனகை — பாபமற்றவள். கோமாதவமுனி — முனியரசனாகிய மௌத்தகலியன். கட்டுரைத்தல்—உறுதிபடச்சொல்லல்.

(410) தூரியம்—வாத்தியம். தென்றல் இன் தேர் ஊர்வானும் தேவியும் போல்வார்-இனிய தென்றலைத்தேராகவுடைய மன்மதனையும் அவன் மனைவியாகிய இரதியையும்போன்ற முனிவனும் அம்மையாரும். மன்றல் அன்றேபோலும் மனமகிழ்ந்தார்—திருமூர்த்திகளால்வாழ்த்தப்பெற்ற அந்நாளே திருமணத் திருநாள்போலும் மனமகிழ்ந்தார்கள்.

(411) மனத்து ஆதரத்தை இன்பால் அளவிட்டார்மாதிரத்தார் ஏத்தமகிழ்து வாழ்ந்திருந்தார்—மனத்திலெழுந்த காதலை இன்பமென்னும் அளவுகோலால் அளந்தவர்களாகி எல்லத்திக்கிலுமுள்ள யாவர்களும் புகழ்ந்து துதிக்க மகிழ்ந்துவாழ்ந்திருந்தார்கள்.

(வாழி) இறை—அரசன், எப்பொருட்குமிறைவன். வான்—மேகம், மழை. அறம் — தருமம், அறநீதி. மண் — பூவுலகம். அற்புடைய காந்தனைத்தேவு ஆ கொள்ளும் கற்பு அணி பூண் பொற்பு உடைய மாதர் புகழ் வாழி வாழியவே—அன்புடைய தனது கணவனையே தெய்வமாகக்கொள்ளும் கற்பென்னும் ஆபரணத்தை அணிந்த அழகிய மாதர்களின்கீர்த்தி என்றும் நிலைபெற்று வாழ்க, வாழ்க, வாழ்கவே.

### மூவரும் தேவரும் முனிவரும் தந்தம்பதிக்கேகியபின், நளாயனி அம்மையாரும் மௌத்கலியமுனிவனும் இன்பமெய்தி வாழ்ந்திருந்தாரெனல்.

411. எங்குநிறை மூவ ரிமையவர்மற் றியாவருந்தாந்
தங்குநகர்க் கேகச் சதிபதிக—டுங்கமனத்
தாதரத்தை யின்பா லளவிட்டார் வாழ்ந்திருந்தார்
மாநிரத்தா ரேத்த மகிழ்ந்து. (௬௯)

### வாழ்த்து.

வாழி யிறைவாழி மாமறைநூல் வாழியவான்
வாழி யறம்வாழி மண்வாழி—வாழியவே
யற்புடைய காந்தனைத்தே வாக்கொள்ளுங் கற்பணிபூண்
பொற்புடைய மாதர் புகழ்.

---

இன்பமெய்தியகாதை முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# நளாயனிவெண்பா.

## செய்யுண் முதற்குறிப் பகராதி.

### துதி.



### நூல்.

ஸ்ரீராமஜெயம்.



# நளாயனிவெண்பா

## அணிகள்





ஸ்ரீராமஜெயம்

# நளாயனி வெண்பா

## பிழையும் திருத்தமும்

| விபரம் | பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| உரிமையுரை | க | திருடற் | திருடர் |
| நான்முகம் | ரு | முதனூ | முதனூ |
| சிறப்புப்பாயிரம் | அ | உச்சைச்சிறவ | உச்சைச்சிரவ |
| | கஉ | தலையசையப்பச் | தலையசைப்பச் |
| | | னயனின்னுன் | னயனின்ருன் |
| | கரு | யாறகுறள் | யாற்குறள் |
| | கஎ | திரல்சேர் | திறல்சேர் |
| நூல் செய்யுள் | எண் | | |
| அவதாரிகை | 228 | அளிப்பயெனல் | அளிப்பாயெனல் |
| | 240 | பயங்தோடினனெல் | பயங்தோடினனெனல் |
| | 261 | உதயமானனெல் | உதயமானனெனல் |
| | 283 | இவளுக்குமாவெனல் | இவளுக்குமாமெனல் |
| | 288 | நரயகனைத் | நாயகனைத் |
| | 373 | பூமாளைக் | பூமானைக் |
| | 378 | அவளைக் | அவனைக் |
| | 396 | வணக்கி | வணங்கி |
| வெண்பா | 92 | கோயிவின் | கோயிலின் |
| | 147 | னேர்ந்து | னுகந்து |
| | 164 | காந்தனைசிங் | காந்தனைச்சிங் |
| | 176 | பலமூங் | பலமூலங் |
| | | தான்சேர்த்தி | தான்சேர்த்தே |
| | 281 | பால்லாண்டு | பல்லாண்டு |
| | 291 | ளெதண்மறை | ளெண்மறை |
| | | க்காற் | தக்காற் |
| | 335 | இடமானைக் | இடாமனைக் |
| | 350 | யமுதுண்டுச் | யமுதுண்டு |
| | 375 | வெற்றி | வெற்றிச் |
| | 379 | தூக்கிட்ட | றாக்கிட்ட |
| | 381 | மார்த்தண்டன் | மார்த்தாண்டன் |
| | 397 | தேவிரை | தேவியரை |
| | | கீர்த்தி | சீர்த்தி |

| விபரம் | எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| குறிப்புரை | 53 | ஆதரித்தாள் என்பது வினைமுற்றுவினையெச்சம் | |
| | 94 | செல்வனே | செவ்வனே |
| | 208 | வழங்கள் | வழங்கல் |
| | 220 | கல்வி | கலவி |
| | 264 | நாயகளைத் | நாயகனைத் |
| | 303 | விஞ்ச | விஞ்ச |
| | 309 | அன்பன் | அப்பன் |
| | 315 | இன்பது | என்பது |
| | | நோக்சி | நோக்கி |
| | 316 | நளாயளி | நளாயனி |
| | 343 | இரண்டாம்வேற்றுமைத் [தொகை | வினையாலணையும்பெயர் |
| | 361 | வயிறுடையப் | வயிறுடைய |
| | 385 | எமம் | ஏமம் |
| | 399 | பூமாலையை | பூமாலையைத் |
| | 411 | மகிழ்து | மகிழ்ந்து |
| | | எல்லத்திக்கிலு | எல்லாத்திக்கிலு |
| | வாழி | தனது | தமது |



